பெ. தூரனின்

# சூரப்புலி





பழனியப்பா பிரதர்ஸ்

சென்னை - 600 014 திருச்சி - 620 002

சேலம் - 636 001 கோயமுத்தூர் - 641 001

மதுரை - 625 001 ஈரோடு - 638 001



# சூரப்புலி

அது ஒரு சிறிய நாய்க்குட்டி. எப்படியோ அது அந்தப் பெரிய மாளிகைக்கு வந்து சேர்ந்தது. தெரு வழியாக அலுப்போடு மெதுவாக ஓடிக்கொண்டிருந்த அந்தக் குட்டி, மாளிகையின் வாயிலுக்குப் பக்கத்தில் வந்து, கொஞ்ச நேரம் தயங்கித் தயங்கி நின்றது. அழகாக வர்ணம் பூசப்பட்டிருந்த வாயில் கதவைத் தாண்டி, உள்ளே நுழையலாமா என்று ஆலோசித்தது. உள்ளேயிருந்து யாராவது கூப்பிடமாட்டார்களா என்றுகூட எதிர்பார்த்தது. ஆனால் தெருவில் போகிற நாய்க்குட்டியை யார் அன்போடு கூப்பிடுவார்கள்? வீதிகளிலே இப்படி எத்தனையோ நாய்கள் அலைந்து திரிகின்றன; அவற்றை யாராவது கூப்பிடுவார்களா? யஜமான

னில்லாமல் ஊரைச் சுற்றி எச்சில் பொறுக்கித் திரியும் நாயை யார் மதிக்கிறார்கள் ?

சுற்றிச்சுற்றித் திரிந்து அதற்கு ஒரே அலுப்பு. இரண்டு நாட்களாகப் பட்டினி. அதனால் பசி வயிற்றைக் கிள்ளியது. அந்த நாய்க்குட்டி, அதற்குமேலே எங்கும் போக முடியாமல் அப்படியே அந்த மாளிகை வாயிலருகே படுத்துவிட்டது. தெருவழியே போகிறவர்களுக்கு அந்த நாய்க்குட்டி அந்தப் பெரிய மாளிகையைச் சேர்ந்தது என்றுதான் நினைக்கத் தோன்றும். ஆனால் அது ஆதரவற்ற அனாதை. வாவென்று அன்போடு கூப்பிடுவதற்கு அதற்கு ஒருவரும் இல்லை. அது களைப்பினால் மேலும் ஓடமுடியாமல் அப்படியே படுத்துக் கிடந்தது.

கொஞ்ச நேரத்தில், அந்தப் பெரிய மாளிகைக்குள்ளிருந்து ஒரு பயங்கரமான சடைநாய் வெளியே ஓடி வந்தது. வாயிலருகே படுத்துக்கிடந்த நாய்க்குட்டியைக் கண்டதும் அது உர்ரென்று கோபத்தோடு உறுமிற்று. எழுந்திருக்கவே சக்தியில்லை என்றாலும் உயிருக்கே ஆபத்து என்றால் எங்கிருந்தோ ஒரு வேகம் வந்துவிடு கிறதல்லவா ? அந்த நாய்க்குட்டி வாலை இடுக்கிக்கொண்டு எழுந்து, 'வீல்' என்று கத்திக்கொண்டு ஓட்டம் பிடித்தது. சடைநாய்க்குப் பின்னாலேயே மாளிகைக்குள்ளிருந்து வந்த சிறுவன் ஒருவன் அதன் ஓட்டத்தைக் கண்டு கைகொட்டிச் சிரித்தான். பிறகு சடைநாயைப் பார்த்து, "சடையா, உள்ளே போ" என்று உத்தரவிட்டான். சடையனும் அந்த உத்தரவிற்குப் பணிந்து மாளிகைக்குள்ளே சென்று, ஒரு சாய்வு நாற்காலிக்கு அருகில் கம்பீரமாகப் படுத்துக் கொண்டது.

கால்களுக்கிடையே வாலை இடுக்கிக்கொண்டும் பயந்து அலறிக் கொண்டும் ஓடுகின்ற அந்த நாய்க்குட்டியின்மேல் சிறுவனுக்கு நோட்டம் விழுந்துவிட்டது. அதை மாளிகைக்குள் கூப்பிட்டால் மறுபடியும் சடையனை அதன்மேல் பாயவிட்டு வேடிக்கை பார்க்கலா மல்லவா ? அதனால் சிறுவன் அந்த நாய்க்குட்டியை மெதுவாக, "த்சோ த்சோ வா" என்று கூப்பிட்டான். இப்படிக் கூப்பிடுவதைத் தான் அது இரண்டு நாட்களாக எதிர்பார்த்துக்கொண்டிருந்தது

அதன் உள்ளத்திலே சந்தேகமும் பயமும் இருந்தாலும், பசி தாங்க முடியாமல் மெல்ல மெல்லச் சிறுவனை நோக்கி அடியெடுத்து வைத்தது. அதைச் சிறுவன் மாளிகைக்குள்ளே அழைத்துச் சென்றான். அத்தனை பெரிய மாளிகைக்குள் அந்த நாய்க்குட்டி இது வரையிலும் காலெடுத்து வைத்ததேயில்லை, தயங்கித் தயங்கி எச்சரிக்கையோடு முன்னால் சென்றது. சிறுவன் தன் ஜேபியிலிருந்த பிஸ்கோத்து ஒன்றை அலட்சியமாக எடுத்து, அதன் முன்னால் வீசி யெறிந்தான். நாய்க்குட்டி ஆவலோடு வாலைக் குழைத்துக்கொண்டு அதைத் தன் வாயில் கவ்விற்று.

அந்தச் சமயத்திலே சடையன் மறுபடியும் வெளியே வந்து விட்டது. அதைக் கண்டதும் நாய்க்குட்டி வீல் என்று கத்திக் கொண்டும் வாலை இடுக்கிக்கொண்டும் ஓட்டம் பிடித்தது. சிறுவன் வாய்விட்டு உரக்கச் சிரித்துக்கொண்டு குதித்தான், ஆனால் அவன், அந்த நாய்க்குட்டியை ஓடிப்போக விட்டுவிடவில்லை. தெரு வழியாக ஓடி மீண்டும் ஒரு பிஸ்கோத்தை அதற்குப் போட்டான், அப்படியே மெதுவாக அதை மாளிகைக்கு அழைத்து வந்துவிட்டான். சடையனைக் கண்டு அது பயந்து அலறுவதிலே அந்தச் சிறுவனுக்கு அடங்காத மகிழ்ச்சி ஏற்பட்டது. அதற்காக அதை அவன் மாளிகை யிலேயே வைத்துக்கொண்டான். இவ்வளவு பயந்து அலறுகின்ற நாயை அவன் கண்டதேயில்லை. பயம் மிகுந்த அந்த நாய்க்குட்டிக்கு வேடிக்கையாகச் 'சூரப்புலி' என்று பெயர் வைத்தான்.

சூரப்புலியின்மீது சடையன் அடிக்கடி உறுமிக்கொண்டு பாய வரும். அந்தச் சிறுவனுடைய உத்தரவுப்படிதான் அது அப்படிப் பாய்ந்தது. வாலைக் கால்களுக்கு நடுவே இடுக்கிக்கொண்டும், வீல் என்று அலறிக்கொண்டும் சூரப்புலி, நாற்கால் பாய்ச்சலில் மாளிகையை விட்டு வெளியே வேகமாக ஓடும், கைதட்டிக் கொண்டு சிறுவன் சிரித்துக் கூத்தாடுவான். அவன் வீட்டிற்குச் செல்லப்பிள்ளை. அவன் என்ன செய்தாலும் யாரும் ஏன் என்று கேட்கமாட்டார்கள். ஒரே மகன். அதிலும் பணம் நிறையச் சம்பாதித்தவருடைய மகன். பையனுடைய தகப்பனார் பாக்கு வியாபாரி. மேட்டுப்பாளையத்திற்குப் பக்கத்திலே, நீலகிரி மலைச்

கமுகு மரங்கள் ஏராளமாகச் செழித்து வளர்கின்றன. அந்த மரங்களிலே குலை குலையாகக் காய்த்துத் தொங்கும் பாக்குக் காய்களை, கமுகுத்தோட்டங்களின் சொந்தக்காரர்களிடமிருந்து வாங்கி, வெளியூர்களுக்கு அனுப்புவது, அவருடைய தொழில். தோட்டக் காரர்களுக்குக் கிடைப்பதைவிட அதிகமான வரும்படி இவருக்குண்டு. இவ்வாறு சம்பாதித்த பணத்தைக்கொண்டு, பெரிய மாளிகை கட்டி, அவர் ஆடம்பரமாக வாழ்ந்துவந்தார்.

பாக்கு வியாபாரிக்குப் பகலெல்லாம் கடையிலே வேலையிருக்கும், அதனால் அவருக்குத் தம் மகனைக் கவனிக்க நேரமில்லை. பெரிய மாளிகையிலே குடும்பம் நடத்துகின்ற அம்மாளுக்கோ வேலைக்காரர் களையும் வீட்டுக் காரியத்தையும் மேற்பார்வை செய்யவே நேரம் போதாது. அதனால் அந்தச் சிறுவன் தன்னிச்சையாகவே வளர்ந்து வந்தான். சடையனோடும் சூரப்புலியோடும் விளையாடுவதும், வேடிக்கை செய்வதும் அவனுடைய வேலை. சடையனுக்கு அவனோடு விளையாடுவதில் எப்பொழுதும் விருப்பம்தான், ஆனால் சூரப்புலியின் பாடுதான் திண்டாட்டமாக இருந்தது. சடையனின் கொழுத்த உருவத்தையும், பயங்கரமான உறுமலையும் கண்டு அது சதா நடுங்கிக்கொண்டிருந்தது. மாளிகையை விட்டு ஓடிப்போகவும் அதற்கு விருப்பம் இல்லை. ஓடிப்போனால் சோற்றுக்கு எங்கே போவது? முன்னால் பட்டினி கிடந்ததே போதும். பணக்காரச் சிறுவன், அதற்குப் பயங்காட்டி வேடிக்கை செய்தாலும் பிஸ்கோத்து நிறையக் கொடுக்கிறான். குறித்த வேளைக்கு மாளிகையிலே உணவு கிடைக் கிறது. பல சமயங்களிலே சடையன் சூரப்புலியின் பங்கான உணவையும் அபகரித்துக்கொள்ளும். எத்தனை உணவு வைத்தாலும் கொழுத்திருந்த அந்த நாய்க்குத் திருப்தி ஏற்படாது. வேலைக்காரன் ஏமாந்த சமயத்தில் சூரப்புலியை விரட்டி முடுக்கிவிட்டு, அதன் பங்கையும் தின்றுவிடும். அப்படியிருந்தாலும், சூரப்புலி, தொடர்ந்து பட்டினியாகக் கிடக்கவில்லை. ஒவ்வொரு தடவையும் வேலைக்காரர் கள் ஏமாறமாட்டார்கள். அதனால் ஒருவேளை பட்டினி கிடந்தாலும்

சூரப்புலிக்கு அடுத்த வேளையில் உணவு கிடைத்தது. தெரு வழியாக ஓடினால் அதுகூடக் கிடைக்காதே !

மேலும், வெளியிலே சென்று எச்சில் இலைகளுக்குக் காத்திருப்பதை அது வெறுத்தது. அது இழிவான காரியம் என்று அதற்கு நன்றாகத் தெரிந்திருந்தது. சூரப்புலியின் தாய் ஒரு சாதாரண நாட்டு நாய்தான். ஆடுகளை இரவு நேரங்களிலே அடைத்து வைக்கும் பட்டியைக் காப்பது அதனுடைய வேலை. அதைப் பட்டி நாயென்றும் சொல்லுவார்கள். உருவத்திலே சிறியதாகவும், பார்ப்பதற்கு அதிகமான அழகில்லாததாகவும் இருந்தாலும் அது பட்டியைக் காப்பதிலே திறமை வாய்ந்தது. இருட்டிலே திருட்டுத்தனமாகப் பட்டிக்குள்ளே நுழைய வரும் குள்ளநரிகளை எதிர்த்துப் போராடக் கூடிய வலிமை அதற்கு இல்லாவிட்டாலும் அது ஏமாறாமல் நரி வருவதை முன்னாலேயே கண்டுபிடித்துப் பெரிய சத்தத்தோடு குரைக்கும். அந்தச் சத்தத்தைக் கண்ட நரி ஓடிவிடும் ஆட்டுப் பட்டியில் தூங்கிக்கொண்டிருக்கும் ஆட்டுப் பட்டிக்காரனும் விழித்துக் கொள்வான்.

சூரப்புலி இளங்குட்டியாக அதன் தாயோடு இருக்கும் காலத்திலே, ஒருநாள் இரவு, பவானியாற்றிலே திடீரென்று வெள்ளம் பெருக்கெடுத்தது. நீலகிரி மலையிலே மழை கொட்டு கொட்டென்று கொட்டிற்று, அதனால் வெள்ளம் பெருக்கெடுத்து இரண்டு கரைகளையும் உடைத்துக்கொண்டு, மேய்ச்சல் நிலமெல்லாம் பாய்ந்தோடிற்று. அந்தச் சமயத்தில், ஆட்டுப்பட்டி பவானியாற்றின் கரைக்கு அருகிலே ஒரு வயல் வெளியில் இருந்தது. வெள்ளம் வருகிறதைப்பற்றிப் பட்டிநாய் எப்படியோ அறிந்துகொண்டு, எச்சரிக்கை செய்ய முயன்றது. குரைத்துக் குரைத்து முன்னும் பின்னும் ஓடி ஓடிக் காண்பித்தது. ஆனால், ஆட்டுக்காரன் அதன் பொருளை உணர்ந்துகொள்ளவில்லை. அன்று அவனுக்கு நல்ல தூக்கம். முதல் நாளிரவு அவன் கூத்துப் பார்க்கப் போயிருந்தான். அதனால், அன்று அவனுக்கு நல்ல தூக்கமில்லை. பட்டிநாயின் எச்சரிக்கையைக் கவனியாமல் அவன் தூங்கிவிட்டான். வெள்ளம் கொந்தளித்து வேகமாகப் பாய்ந்தது, பட்டிநாய் தனது

ஒரே குட்டியை அழைத்துக்கொண்டு, வேகமாக ஓடி ஒரு சிறிய குன்றின்மேலே ஏறிற்று. அங்கே குட்டியை விட்டுவிட்டு, மறுபடியும் ஆட்டுக்காரனுக்கு எச்சரிக்கை செய்ய ஓடிற்று. ஆனால், அதன் முயற்சி வீணாகப் போய்விட்டது. வெள்ளம், பட்டி கிடந்த நிலத்துக்குள்ளே புகுந்து, பட்டியையும் ஆடுகளையும் அடித்துக் கொண்டு போய்விட்டது. ஆட்டுக்காரனும் வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டான். அவனுக்கு எச்சரிக்கை செய்ய வந்த பட்டிநாயும் வெள்ளத்திற்குப் பலியாயிற்று. அதன் பிறகுதான் அந்தக் குட்டி, எப்படியோ இரண்டு நாள் பட்டினியாக அலைந்து திரிந்து, கடைசியில் அந்தப் பெரிய மாளிகைக்கு வந்து சேர்ந்தது.

அதனால், பணக்காரச் சிறுவன் செய்கிற வேடிக்கை விளையாட்டையும் சடையனின் உறுமலையும், விரட்டலையும் உணவை ஏமாற்றிப் பிடுங்கும் அடாத செய்கையையும் பொறுத்துக்கொண்டு சூரப்புலி, ஆறு மாதங்கள் அந்த மாளிகையிலே கழித்தது. தினமும் அது பட்ட துன்பம் கொஞ்ச நஞ்சம் அல்ல. இருந்தாலும், அந்த மாளிகையை விட்டுத் தெருவிலே போய் அலைய அதற்கு விருப்பமில்லை.

ஆனால் அதன் பிறகு ஒருநாள் நடந்த சம்பவத்தால் மாளிகையிலே அதன் வாழ்வு முடிந்து போயிற்று. அந்தப் பெரிய மாளிகையின் பின்புறத்தில் நிறையக் காலி இடம் உண்டு. அங்கே கோழிகளையும், குள்ள வாத்துகளையும் வளர்த்து வந்தார்கள். ஒருநாள் இரவு ஒரு பெட்டைக் கோழியைக் கூண்டிற்குள்ளே அடைக்க மறந்துவிட்டார்கள். அதைக் கவனித்த சடையன், எல்லோரும் தூங்குகிற சமயம் பார்த்து அந்தப் பக்கம் வந்து, சத்தம் செய்யாமல் கோழியைப் பிடித்துக்கொண்டது. பகலிலே தாராளமாகப் பக்கத்தில் வந்து விளையாடும் சடையனைக் கண்டு, கோழி பயப்படவில்லை. அதனால், சடையனுக்கு அதைப் பிடிப்பது எளிதாக முடிந்தது. மெதுவாகக் கோழியின் பக்கத்தில் போய், அதன் கழுத்தைப் பிடித்து, ஒரே கடியில் இரண்டு துண்டாக்கிவிட்டது. கோழி சத்தம் செய்யாமலேயே செத்துப்போய்விட்டது. சடையன் அந்தக் கோழியைத் தூக்கிக்கொண்டு. சூரப்புலி வழக்கமாகப் படுத்திருக்கும் இடத்திற்கு வந்தது.

சடையன் செய்த கெட்ட காரியத்தை 'மாளிகையில் உள்ளவர்களுக்கு அறிவிக்கச் சூரப்புலி வாயெடுத்தது. அதன் கருத்தைத் தெரிந்துகொண்டு சடையன், கோழியைக் கீழே போட்டுவிட்டு, கோபத்தோடு உர்ரென்று உறுமுவதுபோல் பாவனை செய்தது. சூரப்புலி பயந்து வாலை இடுக்கிக்கொண்டு அந்த :இடத்தை விட்டு ஓடிவிட்டது. சூரப்புலியின் இடத்திலேயே சடையன் கோழியைப் போட்டுத் தின்றது. பிறகு, கோழிப் பொங்குகளையும், எலும்புகளையும் அங்கேயே போட்டுவிட்டுத் தன் இடத்திலே போய்ச் சுகமாகத் தூங்கலாயிற்று. மறுநாள் காலையில், மாளிகையில் ஒரே பரபரப்பு. வேலைக்காரர்கள் கூச்சல் போட்டார்கள். கோழியைச் சூரப்புலிதான் அடித்துத் தின்றுவிட்டதாக அவர்கள் நினைத்தார்கள். அதனால், அதைக் கட்டி வைத்து, சாட்டையால் ஓங்கி ஓங்கி அடித்தார்கள். சூரப்புலி வாள்வாளென்று கத்தி அழுதது. சடையன் அந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டு, பக்கத்திலே மகிழ்ச்சியோடு படுத்திருந்தது. சூரப்புலிக்கு இரக்கம் காட்டுபவர்கள் யாருமே இல்லை.

இந்தச் சம்பவத்தால் சூரப்புலி மனமுடைந்துவிட்டது. அந்த மாளிகையில் இனிமேல் இருக்கக்கூடாது என்று தீர்மானித்தது. ஒன்பது மாதமே ஆன குட்டியாகிய தன்னால் ஒரு பெரிய கோழியைப் பிடித்து முழுவதையும் தின்ன முடியாது என்பதைக்கூட யாரும் அறிந்துகொள்ளவில்லையே என்று நினைத்து, அது மிகவும் வருத்தமடைந்தது. உண்ட வீட்டுக்குத் துரோகம் செய்யும் நாயாகத் தன்னை அவர்கள் நினைத்ததை எண்ணியும் அது வருந்தி அழுதது. அன்று இரவு வெளிவாயிலை சாத்திப் பூட்டுவதற்கு முன்னால், யாரும் அறியாதபடி அது வெளியே கிளம்பிவிட்டது, மறுபடியும் தெரு வழியாக அலையவேண்டி நேர்ந்ததை நினைத்து அது மிகவும் வருத்தமடைந்தது. சாட்டை அடியால் உடம்பிலே பல இடங்களில் காயம் ஏற்பட்டிருந்தது. காயத்தால் ஏற்படும் வலியைப் பொறுத்துக்கொண்டே, அது மேட்டுப்பாளையத்துத் தெருக்களின் வழியாகச் சுற்றிக்கொண்டிருந்தது.

பல நாட்கள் பட்டினியாகக் கிடந்தும், அது வீட்டுவாயிலிலே போடும் எச்சிலிலையைத் தேடிச் செல்லவில்லை. அது பட்டினியாகவே அலைந்தது.

மேட்டுப்பாளையத்து வீதிகளிலே முன்பு இப்படித் திரிந்த போது அது மிகச்சிறிய குட்டி. ஆனால் இப்பொழுது அது வளர்ந்து விட்டது. இருந்தாலும், அது இன்னும் இளமைப் பருவத்தைக் கடக்கவில்லை. பாக்கு வியாபாரியின் மாளிகையிலே ஒரு வேளை உண்டும், ஒரு வேளை உண்ணாமலும் அது காலங்கழித்ததால் இயல்பாக வளரவேண்டிய அளவிற்கு அது வளரவில்லை. உடம்பின் சதைப்பற்று இல்லையென்றே சொல்லவேண்டும். எங்குப் போவ தென்று தெரியாமல் அது மூன்று நாட்கள் அலைந்துவிட்டு, மூன்றும் நாள் இரவு தொடங்கும் வேளையில் ஒரு உருளைக்கிழங்கு மண்டி எதிரே வந்து நின்றது. அந்த மண்டியை இரவிலே காவல் காக்கும் இரண்டு பேர் வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்தார்கள். அவர் களுக்குப் பக்கத்தில் தயங்கித் தயங்கிச் சூரப்புலி சென்றது. வாலைக் குழைத்துக் குழைத்துக் காட்டியது. அன்போடு கூப்பிட்டால் அவர் களுக்கு உதவியாக இருப்பதற்குத் தயாராக இருப்பதைத் தெரிவித்துக்கொண்டது. ஆனால் காவல்காரர்கள் அதைக் கவனிப்ப தாகத் தோன்றவில்லை. வெற்றிலையில் சுண்ணாம்பு தடவி மடித்து மடித்து வாயில் போட்டுக்கொண்டு, ஏதேதோ பேசிக்கொண்டிருந் தார்கள். அந்த மண்டியிலே உருளைக்கிழங்கு திருட்டுப்போவதைப் பற்றியும் பேசிக்கொண்டார்கள்.

நீலகிரி மலையின் மேல்பகுதியிலே உருளைக்கிழங்குகள் ஏராளமாக விளைகின்றன. அவற்றை மேட்டுப்பாளையத்திற்குக் கொண்டுவந்து, கடைகளிலே வைத்து, வெளியூர் வியாபாரிகளுக்கு விற்பார்கள். அப்படி விற்கும் மண்டிகள் பல உண்டு. அவற்றில் ஒன்று இது. இந்த உருளைக்கிழங்கு மண்டியிலே அடிக்கடி திருட்டுப் போய்க்கொண்டிருந்தது. அதைப்பற்றித்தான் காவல்காரர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் இரண்டு பேரும் புதிதாக நியமிக்கப்பட்டவர்கள், முன்பு காவல் காத்தவர்கள் எச்சரிக்கையாக இருக்கவில்லையென்று அவர்களை நீக்கிவிட்டு, ஒரு வாரத்திற்கு முன்புதான் இவர்களை ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆனால் இவர் களும் காவல் காப்பதிலே கெட்டிக்காரர்களல்ல ; தூக்கத்திலேதான்

கெட்டிக்காரர்கள், ஒரு வாரம் வரையில் திருட்டுப்போகவில்லை என்பதே தங்களுடைய திறமைக்கு அடையாளம் என்று அவர்கள் எண்ணிக்கொண்டிருந்தார்கள். உண்மையில் அவர்களுக்குத் திறமை ஒன்றுமே இல்லை, புதிய காவல்காரர்களை நோட்டம் பார்க்கவே திருடர்கள் ஒரு வாரம் பொறுத்திருந்தார்கள், அதற்குள் இவர்களின் தூக்கத்தின் பெருமை திருடர்களுக்குத் தெரிந்துவிட்டது.

அன்று இரவிலும் இவர்கள் நன்ருகப் படுத்துத் தூங்கிவிட்டார்கள். அந்தச் சமயம் பார்த்து நான்கு திருடர்கள் மெதுவாக நுழைந்தனர். பல கிடங்குகளில் உருளைக்கிழங்கு மூட்டைகள் இருந்தன. கோடியிலிருந்த ஒரு கிடங்கின் பூட்டைத் திறக்கத் திருடர்கள் முயன்றுகொண்டிருந்தார்கள். சூரப்புலி அதைக் கண்டு கொண்டது. ஆனால் காவல்காரர்கள் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களை மெதுவாக எழுப்பித் திருடர்களைக் காட்டிக் கொடுக்கவேண்டும் என்று அது நினைத்தது. காவல்காரர்களின் பக்கத்திலே சென்று, மெதுவாக ஒருவன் காலை நக்கிற்று. அவன் எழுந்திருப்பதாகக் காணேம். பிறகு மற்றவனை எழுப்ப முயன்றது. அவனும் எழுந்திருக்கவில்லை; காலைக்கூட அசைக்கவில்லை. அவ்வளவு தூக்கம் அவர்கள் இரண்டு பேருக்கும்.

திருடர்கள் பூட்டைத் திறந்து, உருளைக்கிழங்கு மூட்டைகள் அடுக்கிக் கிடக்கும் அந்தக் கிடங்கிற்குள் நுழைந்துவிட்டார்கள். இந்தச் சமயத்தில் காவல்காரர்களை எழுப்பிவிட்டால், கிடங்கின் கதவை வெளிப்புறத்திலிருந்து சாத்திக்கொண்டு, பிறகு திருடர்களைக் கைப்பிடியாகப் பிடித்துவிடலாம். இதுதான் சூரப்புலியின் எண்ணம். ஆனல், காவல்காரர்கள் எழுந்திருப்பதாகக் காணேம். திருடர்கள் ஆளுக்கொரு மூட்டையாகத் தூக்கிக்கொண்டு போய்விடுவார்களே என்று சூரப்புலிக்குக் கவலை. அதனுல் அது, காவல்காரர்களில் ஒருவர் போர்த்திருந்த துப்பட்டியைப் பிடித்து, வாயினல் மெதுவாகக் கவ்வி இழுத்தது. அப்பொழுதும் அவன் தூக்கம் கலையவில்லை. பிறகு சற்று வேகமாக இழுத்தது. துப்பட்டி முழுதும் தனியாக வந்துவிட்டது. அப்பொழுதுதான் அவன் எழுந்தான். ஆனல்



இன்னும் அவனுக்குத் தூக்கம் கலையவில்லை, தூக்க வெறியோடு அவன் சூரப்புலியைப் பார்த்தான்.

"துப்பட்டியைப் பிடித்தா இழுக்கிறாய்? திருட்டு நாயே" என்று கூவிக்கொண்டு, அவன் தன் பக்கத்திலே வைத்திருந்த காவல் தடியை எடுத்து ஓங்கி வீசினான். சூரப்புலி அந்தக் தடிக்குத் தப்ப முயன்றது. ஆனால் முடியவில்லை. நீண்ட மூங்கிலான அந்தக் காவல் தடி, மூக்கின் மேலே பலமாகத் தாக்கிவிட்டது. வீல்வீல் என்று கத்திக்கொண்டு சூரப்புலி ஓட ஆரம்பித்தது. அப்படி ஓடும் போதே அதற்கு ஒரு யோசனை தோன்றிற்று. திருடர்கள் புகுந்த கிடங்கின் பக்கமாக, அது கத்தி அலறிக்கொண்டே ஓடிற்று. அதன் குரலைக் கேட்டுத் திருடர்கள், தப்பினால் போதுமென்று மூட்டைகளைப் போட்டுவிட்டு ஓட்டம் பிடித்தார்கள். இவ்வாறு திருடர்களை ஓட்டி விட்டதால் அதைத் தெரிந்துகொண்டு, அடுத்த நாளாவது காவல் காரர்கள் தன்னிடத்திலே அன்பு காட்டுவார்கள் என்று அது அங்கேயே ஒரு மூலையில் படுத்துக் கிடந்தது.

மூன்று நாளாக அது பட்டினி. தண்ணீர் சேந்தும் கிணற்றடியிலே தேங்கிக் கிடந்த தண்ணீரைத் தவிர வேறு ஒன்றும் அதற்குக்

கிடைக்கவில்லை, அதனால் பசியின் கொடுமை அதிகமாக இருந்தது. அதைவிட மூக்கில் பட்ட அடியினால் வலி அதிகமாக இருந்தது. மூக்கிலிருந்து ரத்தம் ஒழுகிக்கொண்டே இருந்தது. இவற்றையெல்லாம் சகித்துக் கொண்டு சூரப்புலி, அடுத்த நாளை எதிர்பார்த்துப் படுத்திருந்தது.

நன்றாகத் தூங்கிவிட்டுக் காலையில் எழுந்த காவல்காரர்கள், கோடிக் கிடங்கின் கதவு திறந்து கிடப்பதையும், உருளைக்கிழங்கு மூட்டைகளை எடுத்துப் பிறகு அவசரம் அவசரமாக எறிந்துவிட்டுப் போயிருப்பதையும் கண்டார்கள். திருடர்கள் வந்து பூட்டைத் திறந்திருப்பதையும், அவர்கள் முயற்சி பலிக்காமல் போனதையும் அறிந்துகொண்டார்கள். அந்தச் சமயத்திலே, சூரப்புலி அவர்கள் முன்னால் வந்து வாலைக் குழைத்துக்கொண்டு நின்றது; காவல் தடியை வீசியதால் அதன் மூக்கில் காயமேற்பட்டிருந்ததையும், அதிலிருந்து ஒழுகிய ரத்தம் கோடிக் கிடங்கு வரையிலும், அதற்குள்ளும் சிந்தி உறைந்து கிடப்பதையும் அவர்கள் பார்த்தார்கள். சூரப்புலி செய்த உதவி அவர்களுக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது.

இருந்தாலும் அதற்கு நன்றி செலுத்த அவர்கள் நினைக்கவில்லை. "இந்த நாயைத் துரத்திவிடடா. இது இங்கே இருந்தால் முதலாளி வருகின்றபோது உண்மை வெளியாகிவிடும்" என்றான் ஒருவன்.

"ஆமாம், நாம்தான் திருடர்களைக் கண்டுபிடித்து விரட்டி விட்டதாகச் சொல்லிக்கொள்ளவேண்டும். கைத்தடியால் திருடன் ஒருவனுக்கு முதுகிலே நல்ல அடி என்றும் சொல்லுவோம்" என்றான் மற்றவன்.

"நல்ல அடிதான் அவனுக்கு. அதிலென்ன சந்தேகம்? இதோ அவன் பட்ட அடியிலிருந்து ரத்தங்கூட ஒழுகிக் கிடக்கிறதே!" இது முதல் காவல்காரனுடைய புதிய கற்பனை.

"பட்ட அடியிலே ஆள் பிழைப்பதுகூடக் கஷ்டம். அப்படி நான் ஓங்கி ஒரு போடு போட்டுவிட்டேன்." இரண்டாவது காவல்காரன் இன்னும் கொஞ்சம் கற்பனையைப் பெருக்கினான்.

''முதலில் இந்த நாயை ஒரு போடு போடு, பார்க்கலாம்' என்ருன் மற்றவன்.

சொல்லி வாய்மூடும் முன்பே, காவல் தடி மறுபடியும் சூரப்புலியை நோக்கிப் பறந்தது. சூரப்புலி இதை எதிர்பார்க்கவேயில்லை. அன்பு கிடைக்கும் என்று எதிர்பார்த்த இடத்தில் அடிதான் கிடைத்தது. இந்தத் தடவை அதற்கு முதுகிலே நல்ல காயம் ஏற்பட்டுவிட்டது. கை......கை என்று கத்துவதிலே சூரப்புலிக்கு இணை காணமுடியாது. பாவம், கத்திக்கொண்டே வாலை இடுக்கிக்கொண்டு ஓட்டம் பிடித்தது. எங்கு போவதென்ற எண்ணமே இல்லாமல் கால்போன திக்கிலே பாய்ந்து ஓடியது. பசியையும் மீறி ஏற்பட்ட பயத்தினுல் அதன் கால்கள் எப்படியோ சக்தி பெற்றுவிட்டன.

மனிதனிடத்திலே அதற்கு வெறுப்புத் தோன்றிவிட்டது. எவன் ஆதரவளிப்பானென்று எண்ணியதோ அவன் இரக்கமற்றவனுக இருந்தான். பாக்கு வியாபாரியின் செல்வச் சிறுவன் தன்னுடைய மகிழ்ச்சிக்காக அதைத் துன்பப்படுத்தினுன். முதலாளியிடத்திலே தாங்கள் நன்மதிப்புப் பெறுவதற்காகக் காவல்காரர்கள் தடியால் அடித்தார்கள். எல்லா மனிதரும் இப்படித்தானே? அப்படியானுல், எஜமானுக இப்படிப்பட்ட மனிதனை ஏற்றுக்கொள்வதிலே பயனில்லை என்ற எண்ணம் அதன் இள உள்ளத்திலே முளைக்கத் தொடங்கியது. மனிதன் வாழாத அடர்ந்த காட்டிலே போய் வாழ வேண்டும் என்ற தீர்மானம் மெல்ல உதயமாயிற்று. ஓடிக்கொண்டிருக்கும்போதே இந்த எண்ணமும் தீர்மானமும் தோன்றிவிட்டன.

பவானி ஆற்றுப் பாலத்தைக் கடந்துவிட்டால் பிறகு நீலகிரி மலைச்சாரலிலுள்ள காடுகளே உண்டு. மேலே போகப் போக மனித வாசனையே அநேகமாக இல்லாது போய்விடும். அப்படிப்பட்ட இடத்திலே போய் வாழலாம் என்று அது போய்க்கொண்டிருந்தது.

பசியும், வலியும் அதன் தீர்மானத்தை உறுதிப்படுத்தின. இனி இந்த மனிதர்களுடைய உறவே வேண்டாம். மனிதன் சுயநலம் மிகுந்தவன். தன்னுடைய சுகத்தையும் இன்பத்தையுமே நாடுபவன். மற்றப் பிராணிகளை அவன் தனது சுகத்திற்காக எவ்வளவு கொடுமையாக நடத்தவும் தயங்க மாட்டான். இவ்வாறு சூரப்புலியின் உள்ளத்திலே எண்ணங்கள் எழுந்தன.

அது பவானியாற்றின் மேலுள்ள பெரிய பாலத்தைக் கடந்தது. கமுகுத் தோப்புகளுக்குள்ளே நுழைந்தது. அவற்றையும் தாண்டினுல் காட்டுமரங்கள் வளர்ந்த மலைச்சாரலை அடையலாம். கமுகுத் தோப்புக்குள்ளே மனிதர்கள் நடமாடிக்கொண்டிருந்தனர். அவர்கள் அருகில்கூடச் செல்லாமல் சூரப்புலி விலகிச் சென்றது.

மாலை நேரத்திற்குள்ளே அடர்ந்த காட்டிற்குள்ளே அது புகுந்துவிட்டது. திடீரென்று வேகமாக இருள் சூழத் தொடங்கியது. மேட்டுப்பாளையத்திலே இவ்வளவு வேகமாக இருள் சூழ்வதை அது பார்த்ததில்லை. காட்டுக்குள்ளிருந்துதான் மற்றப் பகுதிகளுக்கு இருள் படையெடுப்பதைப்போல் தோன்றியது. எதிர்பாராது திடீரென்று சூழ்ந்துகொண்ட அந்த இருட்டிலே என்ன செய்வதென்று அதற்குத் தோன்றவில்லை. நாள் முழுவதும் எங்கும் நிற்காமல் ஓடி வந்ததால் களைப்பு அதிகமாயிற்று ; நாக்கு வறண்டது. அதற்குத் தண்ணீர் எங்கு கிடைக்கும் என்றுகூடத் தெரியாது. ஏதேதோ பயங்கரமான குரல்கள் கேட்டன. என்ன மிருகங்கள் இப்படி முழங்குகின்றன என்று அதற்குத் தெரியவில்லை. அது கண்டிருக்கும் எந்த மிருகமும் இப்படிக் குரல் கொடுத்ததில்லை. ஒரு புலியின் குரல் வெகுதூரத்திலே கேட்டது. அக்குரல் அடங்கிய பிறகும் மலைச்சாரலிலே எதிரொலி வெகுநேரம் வரையிலும் கேட்டுக்கொண்டே இருந்தது. அந்தக் குரலைக் கேட்டதும் கானகமே கொஞ்ச நேரம் பயந்து மௌனமாக இருந்ததுபோலத் தோன்றிற்று. அந்தக் குரலைக் கேட்டு எல்லாப் பிராணிகளும் திகைத்துப்போய் ஊமையாகி விட்டனவோ என்னவோ ? சூரப்புலியின் உள்ளத்திலே அக்குரலைக் கேட்டதும் புதுவிதமான பயம் உண்டாயிற்று. தடியடியைவிட அக்குரல் கொடுமையானது என்று அதற்குப் பட்டது.

சற்று நேரத்தில் பக்கத்திலே சிறுசிறு குரல்கள் எழுந்தன. காட்டுக்கோழி, மயில் முதலான ஆயிரக்கணக்கான பறவைகள் இரவிற்காக அடங்கும் சமயத்தில் பலவிதமாகக் கூவின. இரவில் இரை தேடப் புறப்படும் சிறிய விலங்குகளின் காலடி ஓசை மெதுவாக நாற்புறமும் கேட்டது. கானகத்திலே இருள் சூழ்ந்து எல்லாம்

அசைவற்றுக் கிடப்பதுபோல வெளிக்குத் தோன்றினாலும் அந்தச் சமயத்திலே ஆயிரம் ஆயிரம் பிராணிகள் பதுங்கிப் பதுங்கி நடந்தன. ஆயிரம் ஆயிரம் பிராணிகள் உயிருக்குப் பயந்து எச்சரிக்கையோடு மறைவிடங்களிலே பதுங்கியிருந்தன. உறக்கம் வந்த போதிலும் சிறு ஒலியையும் அவை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தன.

சூரப்புலிக்குத் தானும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று எப்படியோ தோன்றிற்று. பழங்காலத்திலே வனத்திலே திரிந்த அதன் மூதாதையரின் உணர்ச்சி அதன் உள்ளத்திலே எங்கோ மறைந்திருந்து இப்பொழுது திடீரென்று மேலோங்கி எழுந்துவிட்டது.

சூரப்புலி பசியையும், தாகத்தையும், உடல் நோவையும் மறந்து எச்சரிக்கையோடு ஓர் அடர்ந்த புதரின் மத்தியிலே படுத்தது. அதன் காதுகள் அடிக்கடி உயர்ந்து நின்று ஒலிகளைக் கவனித்தன. அதற்கு உறக்கம் வரவேயில்லை. திடீர் திடீரென்று அது துள்ளியெழும். ஏதோ ஒரு பிராணி பக்கத்திலே பதுங்கிப் பதுங்கி வருவதுபோல அதற்குத் தோன்றிற்று. ஆனால் எதுவும் வரவில்லை. இருட்டு இவ்வளவு கருங் கும்மென இருக்குமென்று அதற்குத் தெரியவே தெரியாது. வயல் வெளிகளிலேயும், மேட்டுப்பாளையத்திலும் இருட்டிலே இருந்து சூரப்புலிக்குப் பழக்கமுண்டு. அதன் கண்கள் அந்த இருட்டிலே நன்றாகப் பார்க்கப் பழகியிருந்தன. ஆனால் கானகத்துப் புதர் இருட்டிலே ஒன்றுமே தெரியவில்லை. அதனால் சூரப்புலி திடுக்கிட்டெழுவதும் பிறகு மெதுவாகப் படுப்பதுமாக இருந்தது.

விடியும் வரையில் தூக்கமில்லாமல் சூரப்புலி பயத்தோடு இரவைக் கழித்தது. இன்னும் நன்றாக விடியவில்லை. அடர்ந்த மரஞ்செடி கொடிகளுக்கிடையே சூரியனுடைய கதிர்கள் விரைவிலே புகுந்து ஆதிக்கஞ் செலுத்த முடியாதுபோலிருக்கிறது. பளிச்சென்று விடிந்த பிறகு முதலில் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளத் தண்ணீரைத் தேடிப்போக வேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்த சூரப்புலியின் முன்னால் திடீரென்று ஒரு பயங்கரச் சம்பவம் நிகழ்ந்தது. அப்படி ஒரு சம்பவம் சுமார் 20 கஜ தூரத்தில் நடக்குமென்று அது எதிர் பார்க்கவேயில்லை.

சூரப்புலி மறைந்து தங்கியிருந்த புதருக்கு முன்னால் கொஞ்சம் வெட்டவெளி இருந்தது. அதன் மத்தியிலே குட்டைபோல நீர் தேங்கியிருந்தது. மங்கிய வெளிச்சத்திலே அது இப்பொழுது கண்ணுக்குப் புலப்பட்டது. பக்கத்திலேயே தண்ணீர் இருக்க இரவெல்லாம் தாங்க முடியாத தாகத்தோடு கிடந்ததை நினைத்து அது ஆச்சரியப்பட்டுக் கொண்டு அந்தக்குட்டையை நோக்கிச்செல்ல ஒரு காலை முன்னால் வைத்தது. அந்தச் சமயத்திலேதான் அந்தக் கொடிய சம்பவம் மின்னல் வேகத்திலே நடந்தது. காட்டெருமை யொன்று தனது இளங்கன்றோடு அந்தக் குட்டையை நோக்கி வந்தது. அதற்கும் மிகுந்த தாகமாகத்தான் இருக்க வேண்டும். அது குட்டையிலுள்ள தண்ணீரில் வாயை வைத்து இரண்டு வாய் குடித்திருக்கலாம், அதனருகில் துள்ளித் துள்ளிக் குதித்துக்கொண் டிருந்த கன்றின் மீது எங்கிருந்தோ திடீரென்று வந்து ஒரு சிறுத்தைப் புலி பாய்ந்தது. தண்ணீரைத் தேடி அந்தக் குட்டைக்கு வரும் விலங்குகளை எதிர்பார்த்து அது பக்கத்திலேயே மறைந்திருக்க வேண்டும். சிறுத்தைப்புலி அங்கு வந்தபோது கொஞ்சங்கூட ஓசை உண்டாகவில்லையே என்று நினைத்து ஆச்சரியப்படுவதற்கெல்லாம் சூரப்புலிக்கு நேரம் கிடைக்கவில்லை. ஏனென்றால் அதற்குள்ளே ஒரு கடுமையான போராட்டம் தொடங்கி விட்டது.

சிறுத்தைப்புலி சரியாக எருமைக்கன்றின்மீது பாய்ந்துவிட வில்லை. துள்ளிக் குதித்துக்கொண்டிருந்த கன்று எப்படியோ ஒரு சாண் வித்தியாசத்தில், அதன் கொடிய கோரைப் பற்களுக்கும் அதன் முன்னங்கால்களிலிருந்து தயாராக நீட்டிக்கொண்டிருந்த கூர்மையான நகங்களுக்கும் தப்பிவிட்டது. புலி மீண்டும் தனது முயற்சியைத் தொடங்குவதற்கு முன்னால் தாய் எருமை முந்திக் கொண்டது. தண்ணீரை விட்டு ஒரே பாய்ச்சலில் தனது கன்றின் அருகே சீறிக்கொண்டு வந்தது. தலையைச் சற்றுக் கீழே குனிந்து பயங்கரமாகத் தோன்றும் அதன் இரண்டு கொம்புகளையும் நேராக வைத்துக்கொண்டு அது சிறுத்தையின்மீது பாய்ந்தது. அப்பா அப்பொழுது அதன் தோற்றம் எவ்வளவு பயங்கரம்! அதன் கண் களிலே அப்பொழுது தோன்றிய கோபாவேசத்தை யாராலும் குலைநடுக்கமெடுக்காமல் பார்க்க முடியாது.

சாதாரணமாக வீட்டிலேயும், தெருவிலேயும் பார்க்கின்ற எருமை ஒரு மந்தமான பிராணி. "ஏண்டா, எருமையைப் போல மெதுவாக நடக்கிருய் ?" என்று சுறுசுறுப்பில்லாதவனைப் பார்த்துச் சொல்வது நம் வழக்கம். நாம் பழக்கி வைத்திருக்கும் எருமை சோம்பலுக்கும் மந்தமான தன்மைக்கும் எடுத்துக்காட்டு. ஆனால் காட்டெருமை அதற்கு முற்றிலும் வேறுபட்டது. அதன் மூர்க்கத்தனத்தையும் வேகத்தையும் வலிமையையும் அளவிட்டுச் சொல்லமுடியாது. காட்டிலேயுள்ள எந்த மிருகத்தையும் அது எதிர்த்துப் போராடப் பின் வாங்காது. கன்றைக் காப்பாற்ற வேண்டிய நெருக்கடியான நிலையிலிருந்த அந்தக் காட்டெருமைக்கு இன்னும் அதிகமான பலமும் ரோசமும் தோன்றிவிட்டன. சிறுத்தைப்புலி தனது தந்திரத்தை யெல்லாம் பயன்படுத்தி அதன் முரட்டுத் தாக்குதலுக்குத் தப்பித்துக் கொண்டு பின்பக்கமாகச் சென்று காட்டெருமையின்மீது பாய முயன்றது. ஆனால் அதன் முயற்சி பலிக்கவில்லை. நினைக்க முடியாத வேகத்திலே காட்டெருமை இரண்டு பக்கங்களிலும் திரும்பித் திரும்பித் தன்னுடைய கொம்புகள் எப்பொழுதும் சிறுத்தைக்கு எதிராக இருக்குமாறு வைத்துக்கொண்டு போரிட்டது. அதன் சீற்றத்தைக் கண்டு சூரப்புலி நடுங்கியது. காட்டெருமை கோபாவேசத்தோடு சீறுகின்றபோது அதன் நாசித்துவாரங்களிலிருந்து பெரிய நாகப்பாம்பு சீறுவதுபோல் ஓசை கேட்டது. இடையிடையே இடிமுழக்கம் போலக் காட்டெருமை முழங்கியது. சிறுத்தையின் உறுமலும் சீறலும் அதனோடு கலந்து அந்தப் பகுதியையே அசைவற்று நிற்கும்படி செய்துவிட்டன. திறந்த வாயோடு சிறுத்தை தனது பல்லைக் காட்டி எருமையைப் பயமடையச் செய்த முயற்சியெல்லாம் பலிக்கவில்லை, அதனால், அது ஒரே பாய்ச்சலாக எருமையின் முதுகின் மேலே பாய்ந்தது. அதன் மண்டையில் தனது பாதத்தால் அறையப் பார்த்தது. இதை எதிர்பார்த்துக் காட்டெருமை முந்திக்கொண்டது. பாய்ந்து மேலெழுந்த நிலையில் வரும் சிறுத்தையின் மார்புப்பகுதியிலே எருமை வேகமாகத் தனது கொம்புகளால் தாக்கிற்று. சிறுத்தை இந்தத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திடீரென்று கீழே சாய்ந்தது. ஆனால், தரையில் மல்லாந்துவிட்டால் தனது கதி அதோகதியாக முடியுமென்று அதற்குத் தெரியும். எருமையின் கொம்புகள் ஒரு



கணத்திலே அதன் மார்பைப் பகிர்ந்துவிடும். அதனால், சிறுத்தை கீழே விழுவதற்கு முன் லாகவமாகத் தன் உடம்பைத் திமிறித் தனது கால்களைத் தரையில் ஊன்றி நின்றது. அப்பொழுதும் காட்டெருமை தனது தாக்குதலை விடாமல் வாலை உயரத் தூக்கிக்கொண்டு, தலையைக் கீழே குனிந்து மூர்க்கத்தோடு சிறுத்தையின்மீது பாய்ந்தது. சிறுத்தை இதை எதிர்பார்க்கவில்லை. அதன் இடது முன்னங்கால் சப்பைப் பகுதியிலே எருமையின் கடினமான கொம்புகள் தோலை வகிர்ந்துவிட்டன. சிறுத்தைக்கு அதற்குமேல் போராட விருப்பமில்லை. அது திடீரென்று பாய்த்து வந்ததுபோலவே மறுபுறம் திரும்பி அம்பு போலப் பாய்ந்தோடி மறைந்தது. காட்டெருமைக்கும் உடம்பிலே சில காயங்கள் ஏற்படாமலில்லை. ஆனால், அவற்றை லட்சியம் செய்யாமல் தனது கன்றைக் காத்த பெருமிதத்தோடு கம்பீரமாக, சிறுத்தை சென்ற திசைக்கு எதிர்த்திசையில் மரங்களிடையே புகுந்து சென்றுவிட்டது. ஒருவிதமான சம்பவமும் நடைபெறாததைப் போல எருமைக்கன்று துள்ளிக் குதித்துக்கொண்டு தாயின் பின்னால் சென்றது.

இந்தப் பயங்கர சம்பவத்தை நேரில் பார்த்த சூரப்புலி செய்வதறியாமல் அசைவற்றுப் படுத்துக் கிடந்தது. புதரை விட்டு

வெளியே வந்தால் சிறுத்தையின் கோரைப்பற்களுக்கு இரையாக வேண்டுமோவென்ற சந்தேகம் அதைப் பிடித்தது. அந்தச் சந்தேகத் தாலும் பயத்தாலும் அதற்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. பசியும் தாகமும் உடல்வலியும் எப்படியோ மறைந்துவிட்டனபோலத் தோன்றின. சூரப்புலி அப்படியே படுத்துக் கிடந்தது. நன்ருக விடிந்த பிறகு, புதரைவிட்டு வெளியே புறப்படலாம் என்ற நினைப்பு அதன் உள்ளத்திலே மெதுவாக உருவாயிற்று.

இந்த நிலையிலே மற்ருெரு கொலைக்காட்சி நடைபெற்றுவிட்டது. சிறுத்தையும் எருமையும் செய்த போராட்டத்தால் பயந்து பதுங்கி யிருந்த காட்டுப் பிராணிகளிடையே மறுபடியும் புதிய உயிர் வந்தது போலத் தோன்றியது. காட்டுக்கோழிகள் கூவின, மயில்கள் தூரத்திலே அகவும் ஒலி கேட்டது. சிறு விலங்குகளின் நடமாட்டம் மெதுவாகத் தொடங்கிற்று. அப்பொழுது ஒரு காட்டெலி தன் வளையை விட்டுப் பதுங்கி வெளியே வந்தது. குட்டைக்கு ஒரு பக்கத்திலே உயர்ந்து வளர்ந்திருந்த நெல்லி மரத்திலிருந்து இரவிலே விழுந்து கிடந்த காய்களைத் தேடி அது வந்திருக்கவேண்டும். ஆனல் அது மரத்தடிக்குச் செல்லவேயில்லை. பாதி வழியிலேயே அதன் ஆயுள் முடிந்துவிட்டது. எங்கோ இருந்து ஒரு ஆந்தை அதன்மேலே திடீரென்று பாய்ந்தது. பகலிலே பார்த்தால் குருடுபோலத் தோன்றும் அந்த ஆந்தைக்கு மங்கிய காலை வெளிச்சத்திலே கண் நன்ருகத் தெரிந்தது. அது ஒரே பாய்ச்சலில் எலியைத் தன் கால்விரல்களில் பற்றிக்கொண்டு தனது கூரிய அலகால் தலையில் குத்திக் கொன்று விட்டது. அது சுற்றுமுற்றும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே தான் கொன்ற இரையைக் கொத்தித் தின்னலாயிற்று.

சூரப்புலிக்கு ஆந்தையிடத்திலும் பயம் ஏற்பட்டுவிட்டது இரையை முடித்துவிட்டு ஆந்தை அந்த இடத்தைவிட்டுப் பறந்து போகும் வரையில் அது புதரைவிட்டு அசையவே இல்லை அப்படியிருக்கும் பொழுது அதே இடத்தில் மற்ருெரு கொலை நடக்குமென்று அது எதிர்பார்க்கவேயில்லை.

குட்டையிலுள்ள தண்ணீர் பல பிராணிகளுக்குத் தாகத்தை போக்கி உயிரைக் காப்பாற்றுவது போலவே வேறு பல பிராணிகளுக்கு உயிரைக் கவரும் யமனுகவும் இருந்தது. அந்தக் குட்டையை விட்டால் அப்பகுதியில் குடிநீருக்கு வேறு வழி இல்லை, அதனுல் அங்குப் பல பிராணிககள் வருவது வழக்கம். கடமான் ஒன்று

எச்சரிக்கையோடு வந்து, நீர் அருந்திவிட்டு வேகமாக மறைந்தது. நீர் அருந்தும் முன்பு அது பல தடவை சுற்றும்முற்றும் விறைத்துப் பார்த்ததைக் காணச் சூரப்புலிக்கு அதிசயமாகவிருந்தது. கடமானின் காதுகள் ஒரு சிறிய ஓசையையும் கேட்பதற்குத் தயாராக முன்னும் பின்னும் அசைந்துகொண்டிருந்தன.

இந்தக் கடமான் சென்ற சில விநாடிகளில் இரண்டு சிறிய மான்கள் ஆணும் பெண்ணுமாக அங்கு வந்தன. பார்ப்பதற்குக் கடமானின் குட்டிகளோ என்று நினைக்கும்படி அவை அவ்வளவு சிறியவைகளாக இருந்தன. ஆனால் அவை கடமான் குட்டிகளல்ல; அவை இரலை என்று சொல்லப்படும் அழகான சிறிய மான்கள். அவை சாதாரணமாக அடர்த்தியில்லாத பகுதிகளில்தான் காணப்படும். செடிகளும் புல்லும் நிறைந்த காட்டுப்பகுதி அவற்றிற்குப் பிடித்தமான இடம். பெரிய காட்டு விலங்குகளின் பயமும் அங்குக் குறைவு. ஆனால், அந்த இரண்டு இரலைகளும் எப்படியோ இந்தப் பகுதிக்குத் தவறி வந்துவிட்டன. குடிநீர் கிடைக்காமல் துன்பப்பட்டு வந்தனவோ என்னவோ யார் சொல்லமுடியும் ?

மரக்கூட்டத்தைவிட்டு ஆண் இரலை முன்னால் வந்தது. பெண் இரலை சுற்றும்முற்றும் பார்த்துக்கொண்டு பின்னால் அடியெடுத்து வைத்தது. அது மரங்களைத் தாண்டிக் குட்டையிலிருக்கும் வெட்ட வெளிக்கு வந்துவிடவில்லை. திடீரென்று ஒரு மலைப்பாம்பு மரத்தின் கிளைகளிலிருந்து அதன்மேல் தாவி, மின்னல் வேகத்தில் அதன் உடம்பைத் தன்னுடைய வலிமையான நீண்ட தேகத்தால் சுற்றிக் கொண்டது. சுற்றச் சுற்ற இரலையின் எலும்புகள் படபடவென்று நொறுங்கின. மலைப்பாம்பு தனது தலையால் இரலையின் தலையில் ஓங்கி மோதிற்று. பரிதாபமாகக் கத்திக்கொண்டு பெண் இரலை உயிரை விட்டது. ஆண் இரலையால் என்ன செய்யமுடியும் ? காட்டெருமைக்குள்ள பலமிருந்தால் அது சண்டைபோட்டிருக்கும். ஆனால் மலைப் பாம்புக்கு முன்னால் அந்தச் சிறிய பிராணி என்ன செய்யமுடியும் ? திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே அது தண்ணீர்கூடக் குடிக்காமல் கானகத்திடையே புகுந்து மறைந்துவிட்டது. மலைப்பாம்பு தனது வலிமையான தசை நார்களால் இறுக்கி எலும்பை நொறுக்கியதும் அகன்ற வாயைத் திறந்து இரலையை விழுங்கத் தொடங்கியது.

சூரப்புலிக்கு அந்த இடத்தில் இருக்கவே முடியவில்லை. அதற்கு ஒரே பயம். எப்படியாவது அங்கிருந்து தப்பித்துக்கொண்டு போய் விட வேண்டுமென்று தோன்றிற்று.

அடர்ந்த கானகத்திலே வசிக்க வேண்டுமானால் எந்த நிமிஷத்திலும் ஆபத்தை எதிர்பார்த்து எச்சரிக்கையோடிருக்க வேண்டுமென்று அதற்குத் தெரிந்தது. கானகத்திலே அன்பு என்பதில்லை. இங்கே பலமொன்றே உயிரைக் காப்பாற்றும். பலத்தோடு கூர்மையான காதுகளும் கண்களும் மின்னல் வேகத்தில் காரியம் செய்யும் சக்தியும் இருக்கவேண்டும். பலமில்லாவிட்டாலும் மற்றவை இருந்தால் உயிர் பிழைக்கலாம். தன்னிலும் வலிமை குறைந்த பிராணிகளை ஈவிரக்கமில்லாமல் கொல்லவேண்டும். வலிமை யினால் தனக்கு மீறிய பிராணிகளுக்கு அகப்படாமல் தந்திரமாகத் தப்ப வேண்டும். ஓடிப் பிழைப்பதற்குக் கால்களாவது வேகமுள்ளவைகளாக இருக்கவேண்டும்.

கானகத்தின் கொடுமையைப் பார்த்த பிறகு பாக்கு வியாபாரியின் மகனுடைய தொல்லையும், காவல்காரர்களுடைய மூங்கில் தடிகளும் சூரப்புலிக்கு அற்பமாகத் தோன்றின. மனிதர்களைவிட்டுக் காட்டில் வாழ்வதிலே இப்பொழுது அதற்கு அத்தனை உறுதியில்லை. எந்த மனிதனாவது அன்போடு ஆதரிப்பானானால் அவனோடு இருந்துவிடலாம் என்கிற மனப்பான்மையோடுதான் அது புதரைவிட்டு வெளியே நகர்ந்தது. குட்டைக்குச் சென்று தண்ணீர் குடிக்க அதற்குத் தைரிய மில்லை. பக்கத்திலே இரலையை விழுங்கிக்கொண்டிருக்கும் மலைப் பாம்பை மறுபடியும் கண்ணெடுத்துப் பார்க்க அது விரும்பவில்லை. மறுதிசையிலே மர அடர்த்தி குறைந்த பகுதியை நோக்கி அது விரைந்தது. அதற்குள் நல்ல வெளிச்சமாகிவிட்டபடியால் சூரப் புலிக்கு அதிக சிரமமிருக்கவில்லை,

குட்டைப்பகுதியை விட்டு வெகுதூரம் வந்த பிறகுதான் சூரப் புலிக்குப் பசியுணர்ச்சி மீண்டும் ஏற்பட்டது; தாகமெடுத்தது. அடிபட்ட உடம்பிலும் வலி தோன்றிற்று. எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு அது கால்போன திசையில் ஓடிக்கொண்டிருந்தது.

அப்படி ஓடும்பொழுதுதான் அந்த மனிதன் எதிர்ப்பட்டான். எங்கிருந்தோ அவன் திடீரென்று தோன்றினான். காட்டிலே மரங்களின் பின்னாலிருந்து வரும்போது எங்கிருந்து வந்ததாகக் கண்டு கொள்ளவே முடியவில்லை,

சூரப்புலி திடுக்கிட்டுத் தயங்கி நின்றது. ஒரு நாயை அந்தக் காட்டுக்குள் அந்தப் பகுதியில் பார்த்து அந்த மனிதன் ஆச்சரியப் பட்டான். பிறகு மெதுவாக அதைக் கூப்பிட்டான். "நாயிருந்தால் நமக்கு இந்தக் காட்டிலே ரொம்ப உதவியாகத்தானிருக்கும்" என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். அந்த எண்ணத்தோடு சூரப்புலியிடம் அன்புகாட்டி அவன் அழைத்தான். சூரப்புலியும் மனிதனோடு செல்லத் தயாராக இருந்ததல்லவா? அதனால் உடனே வாலைக் குழைத்துக்கொண்டு அவன் பின்னால் சென்றது.

அந்த மனிதன் சூரப்புலியை அழைத்துக்கொண்டு நடந்தான். அந்தப் பக்கத்துக் காடுகளிலே அவனுக்கு நல்ல பழக்கம் உண்டு என்று தோன்றியது. ஏனென்றால், அவன் தயக்கமில்லாமல் அந்தக் காட்டினுள்ளே புகுந்து மரக்கூட்டங்களுக்கிடையேயும் புதர்களுக் கிடையேயும் முட்செடிகளுக்கிடையேயும் வழி கண்டுபிடித்துச் சென்றான். உண்மையில் அங்கு வழியொன்றும் இருக்கவில்லை. அடிக்கடி நடந்த பழக்கத்தினால் அவன் சற்றும் மலைக்காமல் சென்றான்.

கடைசியில் அவன் பாறைகள் நிறைந்த ஓரிடத்திற்குப் போய்ச் சேர்ந்தான். ஒரு பக்கத்திலே ஒரு செங்குத்தான சிறு குன்று இருந்தது. ஆனால், சுற்றிலும் உயர்ந்து வளர்ந்திருந்த மரக் கூட்டத்தினால் தூரத்திலிருந்து பார்த்தபோது அது கண்ணுக்குப் புலப்படவில்லை. குன்றின் வலப்புறத்திலே சிலுசிலுவென்று தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. மேலே எங்கோ உயரமான பகுதியிலிருந்து ஊற்றெடுத்து அப்படி வந்துகொண்டிருக்க வேண்டும். தண்ணீர் அதிகமாக இல்லாவிட்டாலும் எப்பொழுதும் வற்றாமல் ஓடிக்கொண் டிருந்தது, இந்த நீரோடைக்கு அருகிலேயே குன்றின் இடுக்கிலே சற்று சிரமத்தோடு குனிந்து நுழைந்து சென்றால் ஒரு வளைவைத் திரும்பிய பிறகு உட்பகுதியிலே ஒரு சிறிய குகை உண்டு. அந்தக் குகை யாருடைய பார்வையிலும் படாதிருந்தது. குன்றின் இடுக்கிலே சாமர்த்தியமாக நுழைந்தவர்கள்தாம் அதை அடையமுடியும். குகைக்கு முன்னால் சிறிதளவு திறந்த வெளியும் இருந்தது. அங்கே மூன்று மூன்று கற்களை வைத்து அடுப்புக் கூட்டியிருந்தார்கள். அந்த மனிதன் சூரப்புலியை அழைத்துக்கொண்டு குகைக்குள் சென்றான். அங்கே அவன் வரவை எதிர்பார்த்திருந்தவன் போல, தாடிக்காரன் ஒருவன் கருகருவென்று குதிர்போல அமர்ந்திருந்தான். "ஏண்டா

கருப்பா, ஏன் இவ்வளவு நேரம்?'' என்று தாடிக்காரன் கொஞ்ச கோபத்தோடு கேட்டான்.

''இந்த நாய்க்குட்டி வழியிலே கிடச்சுது. அதைக் கூட்டிக் கிட்டு வர நேரமாயிட்டது'' என்று கருப்பன் பொய் சொன்னுன். சூரப்புலியைக் கூட்டிக்கொண்டு வந்ததினுல் நேரமாகிவிடவில்லை.

''இது குட்டியா? சோத்துக்குச் செத்த நாயல்லவா இது? உனக்கு இது எதற்கு?'' என்று உறுமினுன் தாடிக்காரன்.

''இங்கே காவலுக்கு இருக்கட்டும்; நம்ம காரியத்திற்கு இது உதவியாக இருக்கும்'' என்ருன் கருப்பன்.

''சோத்துக்குத்தான் கேடு; இது உனக்கு என்ன உதவி செய்யப்போகிறது?'' என்று சொல்லிக்கொண்டே தாடிக்காரன் சூரப் புலியின் முதுகில் ஓங்கித் தட்டினுன். சூரப்புலி வீல் என்று கத்திக் கொண்டு ஓடைப் பக்கம் ஓட்டம் பிடித்தது.

தாடிக்காரன் சிரித்துக்கொண்டே, ''நல்ல சூரப்புலி உனக்குக் கிடைத்ததடா, சரி, இட்டலி எங்கே? எடு சீக்கரம், ரொம்பப் பசிக்கிறது'' என்ருன்.

கருப்பன் தான் கொண்டுவந்திருந்த மூட்டையை அவிழ்த் தான். அதற்குள்ளே ஒரு பாத்திரத்தில் நிறைய இட்டலி இருந்தது. தாடிக்காரன் சட்டினியைத் தொட்டுக்கொண்டு இட்டலியை ஆவ லோடு வாயில் போட்டு அவசரம் அவசரமாக விழுங்கினுன். ''எங்கடா, ஈரல் கறி வாங்கி வரவில்லையா?'' என்று அவன் இட்டலியை வாயில் குதப்பிக்கொண்டே கேட்டான். சாப்பிடுவதிலே அவன் சூரப்புலி. ஈரல் என்ருல் அவனுக்குத் தனிப்பிரியம்.

''இந்நேரத்திலே ஈரல் கிடைக்குமா? எல்லாம் மத்தியானம் வரும்—பிரியாணியும் ஈரல் கறியும்'' என்று பதில் கொடுத்தான் கருப்பன்.

தாடிக்காரன் சூரப்புலியைக் கூப்பிட்டு அதன் முன்னுல் ஓர் இட்டலியை வீசியெறிந்தான். அவனிடம் ஆரம்பத்திலேயே அதற்கு வெறுப்பு ஏற்பட்டிருந்தாலும் பசியின் கொடுமையால் இட்டலியை ஆவலோடு தின்றது. தாடிக்காரன்குகைக்குள்ளே போய் ஒரு புட்டியை எடுத்துவந்தான். திறந்து மடக்குமடக்கென்று இரண்டு வாய் குடித்து விட்டு மறுபடியும் இட்டலியை விழுங்கத் தொடங்கினுன். தாடி



யெல்லாம் சட்னி மயமாக இருந்தது. அவன் அதைப் பொருட்படுத்த வில்லை. மறுபடியும் ஓர் இட்டலியை சூரப்புலிக்கு வீசினான். வேறோர் இட்டலியைக் கையில் எடுத்துக்கொண்டு சூரப்புலியை அருகிலே கூப்பிட்டான். சூரப்புலி கீழே கிடந்த இட்டலியைத் தின்றுவிட்டுப் பிறகு தயங்கித் தாடிக்காரனிடம் சென்று, அவன் கையில் இருந்த இட்டலியை வாயில் கௌவிற்று. "அப்படி வாடா, பயப்படாதே" என்று சொல்லிக்கொண்டே தாடிக்காரன் அதன் முதுகிலே ஓங்கித் தட்டினான். இப்படித் தட்டுவது அவனுடைய இயல்பு என்பதைத் தெரிந்துகொள்ள சூரப்புலிக்குப் பல நாட்கள் ஆயின. அவன் தட்டும் போதெல்லாம் ஏதோ ஒரு மரத் தடி முதுகின் மேலே விழுவது போன்ற உணர்ச்சியும் வலியும் ஏற்படும். அவன் போடும் சோற்றுக்காக அங் கேயே தங்க வேண்டுமானால் அவனுடைய கையின் கொடுமையைப் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று சூரப்புலிக்குத் தெளிவாகி விட்டது. காட்டுக்குள்ளே புகுந்து எதேச்சையாக வாழவும் அதற்குப் பயமாக இருந்தது. அதனால், தாடிக்காரனுடைய கொடுமையைச் சகித்துக்கொள்ள அது தீர்மானித்துவிட்டது. ஆனால், அவனுடைய கைக்கு எட்டாமல் கூடிய வரையில் வாழவேண்டுமென்று முடிவு செய்தது. அவன்மேல் ஏற்பட்ட வெறுப்பு வளர்ந்துகொண்டே இருந்தது.

இட்டலியைத் தின்றுவிட்டு நீரோடைக்குச் சென்று ஆவலோடு சூரப்புலி தண்ணீரைக் குடித்தது. அப்பொழுதுதான் அதற்குப் புதிய உயிர் வந்ததுபோல் தோன்றிற்று. பிறகு சூரப்புலி மெதுவாகச் சுற்றுப்புறத்தை ஆராயத் தொடங்கியது. குகைக்குள்ளேயும் சென்று பார்த்தது. தாடிக்காரனும் கருப்பனும் ஏதோ கணக்குப் பார்த்துக் கொண்டும், ரூபாயை எண்ணிக்கொண்டும் இருந்ததால் சூரப்புலியைப் பற்றிக் கவனிக்கவில்லை.

குகைக்குள்ளே ஒரே இருட்டாக இருந்தது. கொஞ்ச நேரம் உள்ளே இருந்தபிறகுதான் அங்கேயிருக்கும் பொருள்கள் கண்ணுக்குத் தென்படலாயின. ஒரு பக்கத்திலே நூற்றுக்கணக்கான கண்ணாடிப் புட்டிகள் அடுக்கப்பட்டிருந்தன. மற்றொரு பகுதியிலே பெரிய பெரிய தாழிகளும் மிடாக்களும் பானைகளும் இருந்தன. அவற்றிலிருந்து 'மொய்' என்ற சத்தம் மெதுவாக வந்துகொண்டிருந்தது. ஏதோ பொருள்கள் கொதிப்பதால் நுரை பொங்கி எழுவதும் கண்ணுக்குத் தெரிந்தது. அதிலிருந்து ஒரு வகையான நெடி எழுந்து மூக்கைத் துளைத்தது. மரப்பட்டைகளும் பனைவெல்லமும் மற்றொரு பக்கத்திலே கிடந்தன. எதற்காக இவையெல்லாம் அந்தக் காட்டுக்குள்ளே இருக்கின்றன என்பதைப்பற்றிச் சூரப்புலிக்கு யோசனை ஏற்படவில்லை. வேண்டியபோது பனைவெல்லம் தின்னக் கிடைக்கும் என்று மட்டும் யூகித்துக்கொண்டது. அப்பொழுதே ஒரு சிறு துண்டு வெல்லத்தையும் லபக்கென்று வாயில் கௌவிக்கொண்டு குகையின் மறைவிலிருந்து தின்னலாயிற்று. அரசாங்க உத்தரவை மீறித் திருட்டுத்தனமாகச் சாராயம் காய்ச்சுகின்ற கூட்டத்திற்கு வந்து சேர்ந்திருக்கிற விஷயம் சூரப்புலிக்கு அப்பொழுது தெரியாது. தெரிந்திருந்தாலும் அது அந்தக் கூட்டத்தைவிட்டுப் போயிருக்காது. அரசாங்கத்தினிடத்திலே அத்தனை விசுவாசமோ அல்லது சட்டத்திற்கு உட்பட்டு நடக்கவேண்டுமென்ற உணர்ச்சியோ அதற்கு ஏற்பட்டிருக்கவில்லை. ஆறறிவு படைத்த மனிதர்களுக்கே அவை இல்லாதபோது சாதாரணமான ஒரு நாயிடம் எதிர்பார்க்க முடியுமா?

தாடிக்காரன் குகையிலிருந்து எடுத்துவந்த புட்டி காலியாகி விட்டது. அதைக் காலி செய்வதிலே கருப்பனுக்கும் பங்கு உண்டு. புட்டி காலியாக ஆக அவர்களுக்குள்ளே வார்த்தை தாறுமாறாக எழுந்தது. காரணமின்றிச் சச்சரவு செய்துகொண்டு இருந்தார்கள். ஈரல் கறி கிடைக்கவில்லையென்று தாடிக்காரனுக்குப் புதிதாகக் கோபம் பிறந்தது. கருப்பன் சொன்ன சமாதானம் இப்பொழுது

அவனுக்குச் சரியானதாகப் படவில்லை. குடி வெறியால் கருப்பனும் ஏதேதோ தாறுமாருகப் பேசினுன்.

பிறகு இரண்டு பேரும் உளறிக்குளறிப் பேசிக்கொண்டே கீழே படுத்துத் தூங்கிவிட்டார்கள். சூரப்புலியும் சுகமாகப் படுத்துத் தூங்கிற்று. உச்சிநேரத்திற்கு நான்கு பேர் புதிதாக அங்கே வந்து சேர்ந்தார்கள். அவர்களிலே ஒருவன்தான் அந்தக் கூட்டத்திற்கு முதலாளி. மற்ற இரண்டு பேர் பெரிய பெரிய மூட்டைகளைத் தூக்கிக் கொண்டு வந்தார்கள். எல்லோருக்கும் வேண்டிய உணவு வகைகள் அந்த மூட்டைகளில் இருந்தன. முதலாளியின் குரலைக் கேட்டதும் தாடிக்காரன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான்; கருப்பனும் எழுந்து மரியாதையாக நின்ருன்.

"ஏண்டா தாடி, கணக்கெல்லாம் சரியாகப் பார்த்து வைத்திருக் கிருயா?" என்று அதட்டினுன் முதலாளி. அவனைக் கண்டால் தாடிக் காரனுக்கு ஒரே பயம். அதனுல் தடுமாறிப் பதில் பேசினுன்.

"எல்லாம் தயாராக இருக்குதுங்க. கணக்கெல்லாம் சரியாப் போச்சுது, பாக்கி யெல்லாம் கருப்பன் வசூல் செய்துகொண்டு வந்து விட்டான்," என்று தாடிக்காரன் சொல்லிக்கொண்டே ஒரு பணப் பையை முதலாளியிடம் நீட்டினுன். முதலாளி அதை வாங்கிக் கொண்டு, "சரி, சாப்பிட்டுவிட்டுக் கணக்கைப் பார்க்கலாம்" என்று கூறினுன்.

பிறகு சாப்பாடு நடந்தது. தாடிக்காரனுக்கு விருப்பமான உணவு வகைகளெல்லாம் கிடைத்தன. அந்தச் சோற்றுக்காகத்தான் அவன் இந்தக் கூட்டத்திலே தங்கியிருக்கிருன் என்பது முதலாளிக்குத் தெரியும். அதனுல், அவனுக்கு விருப்பமானவற்றைக் கொடுத்துவிட்டு அவனிடம் ஏராளமான வேலை வாங்கினுன் அவன். குகையில் எந்த நேரத்திலும் இருந்துகொண்டு சாராயம் காய்ச்சும் வேலையைச் செய்பவன் அவனே. மற்றவர்களெல்லாம் வேண்டிய சாமான்களைச் சேகரிப்பதும் சாராயப் புட்டிகளைத் திருட்டுத்தனமாக வெளியே கொண்டு போய் விற்பதும் ஆகிய காரியங்களில் ஈடுபட்டவர்கள். தான் செய்கின்ற வேலைக்குத் தகுந்த ஊதியம் கிடைக்கவில்லை என்று தாடிக்காரனுக்கு உள்ளுக்குள்ளே வருத்தம். இருந்தாலும் அதை முதலாளியிடம் சொல்ல அவனுக்குப் பயம், முதலாளி அவனை வாய்க்கு வந்தபடியெல்லாம் திட்டுவான். விருப்பமான உணவைக் கொடுப்ப

தோடு அவனை அடிக்கடி மிரட்டிக்கொண்டிருந்தால்தான் தனது காரியம் பலிக்கும் என்று முதலாளி அறிவான். ஒரு வேலையும் செய்யாமல் வரும்படியிலே பெரும்பகுதியை எடுத்துக்கொள்வதற்கு, இப்படி மற்றவர்களுடைய தன்மையை அறிந்து அவர்களை அடக்கி நடத்தும் திறமையே காரணமாக இருந்தது.

சூரப்புலிக்குப் புலால் உணவும் எலும்புகளும் நிறையக் கிடைத்தன. "இந்த நாய் எப்படிக் கிடைத்தது?" என்று முதலாளி சாப்பிட்டுக்கொண்டே கேட்டான். கருப்பன் அது கிடைத்த விவரத்தைச் சொன்னான். "குன்று மேலே தாடிக்காரனோடு இருந்து காவல் காக்க இதைப் பழக்கலாம்" என்றும் அவன் சொன்னான். முதலாளி இதை ஆமோதித்தான், "ஆமாம், எவனாவது இந்தப் பக்கம் வந்தால் மெதுவாக உறுமிக்காட்ட இதைப் பழக்கிவிட்டால் நமக்கு நல்லது. இந்தப் பக்கத்திற்கு இதுவரை யாரும் வரவில்லை. இருந்தாலும் எச்சரிக்கையாக இருப்பது நல்லது."

முதலாளி சொன்னதை மற்றவர்கள் ஆமோதித்தார்கள். சூரப்புலியைப் பழக்கும் பொறுப்பும் தாடிக்காரனுக்கு ஏற்பட்டது. கொஞ்ச நாட்களிலே சூரப்புலியும் அவனுடைய எண்ணத்தை அறிந்து நடக்கப் பழகிக் கொண்டது. தினமும் வேளை தவறாமல் நல்ல உணவு ஏராளமாகக் கிடைத்ததால் அது இப்போது மளமளவென்று வளரத் தொடங்கியது. இருந்தாலும், தாடிக்காரனுடைய கை அதன் முதுகின் மேல் தடாலென்று விழும்போதெல்லாம் வலி பொறுக்க முடியாமல் அது கத்துவது நிற்கவில்லை. முதலாளியிடம் இருக்கும் வெறுப்பையெல்லாம் தாடிக்காரன் சூரப்புலியிடம் காட்டுவான். சூரப்புலியை முதுகில் அடிக்கும்போது முதலாளியை அடிப்பதாக அவன் நினைத்துக் கொள்ளுவானோ என்னவோ? சூரப்புலி கைக்கு எட்டும் போதெல்லாம் அதை அடிப்பதில் அவன் உற்சாகத்தோடிருந்தான். சூரப்புலிக்கு தாடிக்காரனிடத்திலும் மற்றவர்களிடத்திலும் அன்பு பிறக்கவில்லை. இருந்தாலும், கிடைக்கும் சோற்றுக்கு நன்றியாக அது எச்சரிக்கையாகவே தனது காரியத்தைச் செய்துகொண்டு இருந்தது. அந்தக் கூட்டத்தார் குகையிலே சந்திக்கும்போது சூரப்புலி குன்றின் மேலே ஓர் உயரமான பாறையில் படுத்துக்கொண்டு, நாலு பக்கமும் பார்த்திருக்கும். வேற்று மனிதர் யாராவது தூரத்திலே வருவதாகத் தெரிந்தால் மெதுவாகக் குரைக்கும். அல்லது குகைக்குள்ளே ஓடி வந்து பரபரப்போடு முன்னும் பின்னும் திரியும். அதன் செய்கையிலிருந்து

குகைக்குள்ளிருப்பவர்கள் உஷாராகிவிடுவார்கள்; தங்கள் பேச்சையெல்லாம் நிறுத்திக்கொள்வார்கள். அதனால் அவர்களை யாரும் கண்டுகொள்ள முடியவில்லை. இவ்வாறு சூரப்புலி அவர்களுக்கு உதவியாக இருந்தது.

ஆனால், பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவானல்லவா? இந்தத் திருட்டுக்கூட்டமும் ஒரு நாள் அகப்பட்டுக்கொண்டது. சூரப்புலி அங்கு வந்து சேர்ந்து ஏழு மாதங்களாகிவிட்டன. அது நன்றாகக் கொழுத்து வளர்ந்துவிட்டது. ஒரு நாள் அவர்களுக்குப் போதைவெறி அளவு கடந்துவிட்டது. எப்போதும் நிதானம் தவறாமல் இருக்கும் முதலாளியும் அன்று வரம்பை மீறிக் குடித்துவிட்டான். அவர்களுக்குள்ளே பேச்சு வளர்ந்தது. ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்துக்கொண்டும், கூடி நின்று ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருந்தார்கள். தாடிக்காரனுக்கு அன்று ஈரல் கறி, தினமும் கிடைப்பதைப்போல இரண்டு மடங்கு கிடைத்துவிட்டது. அதனால் அவனுக்கு உற்சாகம் கரை கடந்துவிட்டது. ஒரு புட்டி சாராயமும் அவன் வயிற்றுக்குள்ளே புகுந்து அதன் வேலையைச் செய்துகொண்டிருந்தது. அவன் சூரப்புலியைப் பக்கத்திலே கூப்பிட்டான். அதைத் தன் இரு கைகளாலும் கட்டிப் பிடித்துக்கொண்டு ஒய்யாரமாக, “ராரி ராரி ராராரோ—என் கண்ணே நீ ராரி ராரி ராராரோ” என்று தொட்டில் பாட்டுப்பாட ஆரம்பித்துவிட்டான். அதைக் கண்டு மற்றவர்களுக்கும் சூரப்புலியிடம் அக்கறை பிறந்துவிட்டது. ஒருவன் அதன் வாலைப் பிடித்துமேலே தூக்க முயன்றான். ஒருவன், “டேய், என் குழந்தையைத் தொட்டால் உதைப்பேன்” என்றான். மற்றொருவன், “டேய் என் குழந்தைக்குப் பசிக்கிறது; பால் வார்க்கவேண்டும்” என்று சொல்லிக்கொண்டே சூரப்புலியைப் பிடித்து அதன் வாய்க்குள் ஒரு புட்டியிலிருந்த சாராயத்தை ஊற்றினான். சூரப்புலியால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அது லபக் லபக்கென்று இரண்டு வாய் குடித்துவிட்டது. அதன் தொண்டைக்குள் எங்கோ தீப்பற்றி எரிவது போலத் தோன்றிற்று. அது திமிறிக் குதித்துக்கொண்டு வெளியே ஓட முயன்றது. தாடிக்காரன் அதன் முதுகில் ஓங்கி ஒரு புட்டியை வீசினான். பிறகு, அதைத் துரத்திக்கொண்டே குன்றின்மீது தட்டுத் தடுமாறி ஏறி வந்தான்.

சூரப்புலிக்குத் தலைசுற்ற ஆரம்பித்தது. அது எப்படியோ தடுமாறித் தடுமாறிக் குன்றின் உச்சியில் வழக்கமாகக் காவலிருக்கும் இடத்திற்கு வந்துவிட்டது. தாடிக்காரனும் அங்கு வந்து சேர்ந்தான்.

அவனைக் கண்டதும் சூரப்புலி உர் என்று உறுமிற்று. அவன் அதைப் பொருட்படுத்தாமல் அருகிலே வந்தான், இப்பொழுது சூரப்புலி அவனைக் கண்டு பயப்படவில்லை. அதன் தோற்றத்திலே ஒரு புதிய மாறுதல் இருந்தது. தாடிக்காரன் வழக்கம்போலக் கையை ஓங்கினான். ஓங்கிய கையைத் தாவிப்பிடித்து சூரப்புலி கடித்துவிட்டது. "கடிக்கவா பார்க்கிறாய்? குடிகார நாயே" என்று கூவிக்கொண்டு தாடிக்காரன் ஒரு கல்லை எடுக்கப்போனான். ஆனால், அவனுக்கு குடி வெறி உச்ச நிலைக்குப் போய்விட்டது. அப்படியே விழுந்து தின்றதையெல்லாம் கக்கிக்கொண்டு கிடந்தான். சூரப்புலியும் தனக்கு வழக்கமான இடத்தில் படுத்தது.

ஆனால், அது அன்று காவல் காக்கவில்லை. வெறிக்க வெறிக்கப் பார்த்துக்கொண்டு கிடந்தது. பல நாட்களாக அந்தப் பக்கத்தில் வந்து தேடிக்கொண்டிருந்த போலீஸ்காரர்களுக்கு அன்று வெற்றி கிடைத்துவிட்டது. அந்தப் பகுதியிலேதான் திருட்டுச் சாராயம் காய்ச்சுகிறார்களென்று அவர்களுக்குத் தகவல் கிடைத்திருந்தது. அதனால், சாதாரண உடையிலே வந்து அந்தப் பகுதியில் புகுந்து பல தடவை தேடிப் பார்த்தார்கள். சூரப்புலியின் எச்சரிக்கையால் அவர்கள் முயற்சி இதுவரையிலும் பலிக்கவில்லை.

அன்று சூரப்புலி சாராய மயக்கத்தால் பேசாமல் படுத்திருந்தது. குகைக்குள்ளே ஆரவாரம் ஓயவே இல்லை. அந்த ஆரவாரத்தைக் கேட்டுப் போலீஸ்காரர்கள் குகைக்குள் வந்து சுலபமாக முதலாளியையும் அவனுடனிருந்தவர்களையும் பிடித்துக் கைது செய்துவிட்டார்கள். குகைக்குள்ளிருந்த பொருள்களையும் கைப்பற்றி எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

மறுநாள் காலையில்தான் தாடிக்காரன் மயக்கம் தெளிந்து எழுந்தான். கையிலே சூரப்புலி கடித்திருப்பதும் நன்றாகத் தெரிந்தது. அவன் கோபத்தோடு சூரப்புலியை அடிக்க ஓடினான். சூரப்புலி குகையை நோக்கிக் கத்திக்கொண்டு ஓடிற்று. தாடிக்காரன் அதைப் பின்தொடர்ந்து போனான்.

அங்கே போனதும் அவனுக்கு விஷயமெல்லாம் விளங்கிவிட்டது. குகையில் ஒரு பொருளும் இருக்கவில்லை. போலீசார்தான் அவற்றைக் கைப்பற்றியிருக்க வேண்டும் என்று அவன் யூகித்து அறிந்துகொண்டான். வேறு யாரும் இப்படித் தாழிகளையும் மிடாக்களையும் பானைகளையும் மற்ற பொருள்களோடு சேர்த்து எடுத்துச் செல்ல மாட்டார்கள். இது



நிச்சயமானவுடனே முதலாளியும் மற்றவர்களும் கைது செய்யப்பட்டிருப்பார்கள் என்பதும் அவனுக்கு விளங்கிவிட்டது.

சூரப்புலிமீது அவனுக்கு அடங்காத கோபம் உண்டாயிற்று. அது தன் கடமையைச் செய்யவில்லை என்று அவன் முடிவு செய்தான். அதற்குச் சரியான தண்டனை கொடுக்கவேண்டுமென்று அவனுக்குத் தோன்றிற்று. தான் தப்பித்துக்கொண்டாலும் இனிமேல் ஈரல் கறி கிடைக்காதென்று அவனுக்கு என்றுமில்லாத கோபம் வந்துவிட்டது.

தாடிக்காரன் மெதுவாகச் சூரப்புலியைக் கூப்பிட்டான். அங்கே கிடந்த எலும்புத் துண்டுகளைக் கையிலெடுத்து ஆசை காட்டினன். சூரப்புலி மெதுவாக அருகே வந்தது. சட்டென்று அவன் அதைப் பிடித்து ஒரு கயிற்றில் கட்டிவிட்டான். சூரப்புலி சந்தேகத்தோடு பார்த்தது.

பிறகு, தாடிக்காரன் நிதானமாக ஒரு பெரிய மரக்கொம்பை எடுத்து வந்தான். விறகுக்காக அது குகைக்கு வெளியே அடுப்படியில் கிடந்தது. அதைக் கொண்டு சூரப்புலியின் மண்டையிலே ஓங்கியடித்தான். அடிக்குத் தப்புவதற்காக அது எட்டிப் பாய்ந்தது. ஆனல் கட்டிக் கிடக்கும் அதனுல் ஓட முடியுமா? தலைக்கு வந்த அடி அதன்

பின்னங்கால்கள் இரண்டின் மேலும் பலமாக விழுந்தது. கால் எலும்பு கள் இரண்டும் நடுப்பகுதியில் முழங்கால்களுக்கு மேலே ஒடிந்து தொங்கின. சூரப்புலி வீல் என்று துயரந்தாங்காது கத்திற்று. பின்னங்கால்கள் ஒடிந்து போனதால் அதனால் தாடிக்காரனைத் தாக்கவும் முடியவில்லை. முன்னங்கால்களால் மட்டும் அது நடக்க முடியுமா? அது புலம்பிக்கொண்டு படுத்துக் கிடந்தது.

தாடிக்காரன், “இப்படியே கிடந்து சாவு,” என்று உறுமிவிட்டு அங்கிருந்து மறைந்து போனான்.

பொறுக்க முடியாத வேதனையோடு சூரப்புலி கத்திக்கொண்டும் புலம்பிக்கொண்டும் குகைக்குள்ளே கிடந்தது. அதனால் நகரவேமுடிய வில்லை. முன்னங்கால்களைக்கொண்டு நீந்துவது போல நகர முயன்றாலும் ஒடிந்த கால்களிலிருந்து வேதனை அதிகரித்தது. மேலும், கழுத்திலே கயிறு கொண்டு கட்டிக் கிடப்பதால் அந்த இடத்தை விட்டு வெளியே வரவும் முடியாதல்லவா? அதனால், அது என்ன செய்வதென்று தோன்றாமல் தவித்துக்கொண்டு கிடந்தது.

மூன்று நாட்கள் இரவு பகலாகச் சூரப்புலி இப்படி வேதனையோடு வாடிற்று. அழுது புலம்பி அதன் தொண்டை வரண்டுவிட்டது கொஞ்சம் தண்ணீர் கிடைத்தாலும் அதற்குச் சிறிது ஆறுதலாக இருக்கும். பக்கத்திலேயே ஓடை இருந்தும் அங்கு போக முடிய வில்லை. வயிற்றுப் பசியும் சேர்ந்துகொண்டு சூரப்புலியை வாட்டிற்று. சூரப்புலி தன் தலையைப் பின்னங்கால்களின் பக்கமாக நீட்டி அவற்றை நாக்கால் நக்க முயன்றது. அப்படிச் செய்வதால் ஒடிந்த பகுதியில் வலி மேலும் அதிகமாயிற்றே ஒழியக் குறையவில்லை. சூரப்புலியின் புலம்பலும் அழுகைக் குரலும் எப்போதும் கேட்டுக்கொண்டே இருந்தன. அதன் உள்ளத்திலே மறுபடியும் மனிதகுலத்தின் மீது அளவு கடந்த வெறுப்பு மேலோங்கிற்று. அந்தக் குகையைப் பயன்படுத்திய மனிதர்கள் எல்லோரிடத்திலும் அதற்குக் கோபம் பொங்கியது. தாடிக்காரனிடம் சொல்லவொண்ணாத வெறுப்பும் ஆத்திரமும் அதன் உள்ளத்திலே கொந்தளித்தன. அன்று சூரப்புலி தன் கடமையைச் செய்யாததற்கு யார் காரணம்? அந்த மனிதர்கள் சாராயத்தை அதன் வாயில் ஊற்றாமலிருந்தால் அது தன் கடமையில் தவறியிருக்காது. அதன் வாயில் போதைப் பொருளை வலிய ஊற்றி அதன் அறிவை யிழக்கும்படி செய்துவிட்டுப் பிறகு அதன் மேலே கோபம் கொள்வது நியாயமாகுமா? தாடிக்காரன் மிகுந்த கொடுமைக்காரன். சமயங்

கிடைத்தபோதெல்லாம் சூரப்புலியை ஓங்கியோங்கி அடிப்பது அவன் வழக்கம். அது வலி பொறுக்காமல் சத்தம் போடும்போதெல்லாம் அவன் சிரித்து மகிழ்ந்தான். அப்படிப்பட்டவனுக்கும் அது நன்றியோடு உழைத்து வந்தது. அவர்கள் சாராயத்தை அதன் வாயில் ஊற்றியிருக்காவிட்டால் அன்றைக்கும் அது அவர்களைப் போலீசாரிடமிருந்து காப்பாற்றியிருக்கும். அவர்கள் செய்த தவறுதலுக்காகச் சூரப்புலியைத் தாடிக்காரன் இவ்வாறு கால்கள் ஒடிந்து போகும்படி அடிக்கலாமா? மனிதன் இரக்கமற்றவன். அவன் சுயநலக்காரன். அவனோடு வாழ்வதைப்போலத் துன்பமான காரியம் வேறொன்றுமில்லை. அவனைக் கண்டால் கடித்துப் பழி வாங்க வேண்டும். இவ்வாறு பலப் பல எண்ணங்கள் அதன் உள்ளத்திலே தோன்றி அலை மோதின. தாடிக்காரனைக் கண்டால் பழிவாங்க வேண்டும் என்ற ஆத்திரம் அதன் உள்ளத்திலே எல்லாவற்றிற்கும் மேலாக நெருப்புப்போல் கொழுந்து விட்டது.

ஆனால் அது எப்படித் தாடிக்காரனைப் பார்க்கப் போகிறது? அவன் இனிமேல் அங்கு வரமாட்டான். சூரப்புலியாலும் அவனைத் தேடிப்போக முடியாது. அது பசியாலும் தாகத்தாலும் உடல் வலியாலும் துன்பப்பட்டு அந்தக் குகைக்குள்ளேயே கிடந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சாக வேண்டியதுதான். இதை நினைக்கும் போது சூரப்புலியின் உடம்பெல்லாம் கொதித்தது. அதன் தொண்டை வரண்டது. அது கோவென்று அலறி ஊளையிட்டது. அந்தக் குகைப்பகுதியில் மனித நடமாட்டம் முன்பு பலகாலமாக இருந்ததால் கொடிய வன விலங்குகள் நல்ல வேளையாக அங்கு வரவில்லை. வந்திருந்தால் சூரப்புலி அவற்றிற்கு இரையாகியிருக்கும்.

இப்படி அது பல முறை ஊளையிட்டுப் புலம்பிற்று. அந்தப் புலம்பல் எப்படியோ அந்தப் பக்கமாகத் தற்செயலாக மூன்றும் நாள் மாலையில் சென்ற ஒரு துறவியின் காதில் விழுந்துவிட்டது. அவர் சட்டென்று நின்று உற்றுக் கேட்டார். மறுபடியும் அந்த வேதனைக் குரல் கேட்டது. அவர் காட்டுக்குள்ளே புகுந்து போவதை நிறுத்தி மெதுவாக அந்தச் சிறிய குன்றைக் கவனித்தார். போலீசார் வந்து சென்றதால் ஓடைக்குப் பக்கத்திலிருந்த குறுகலான வழியில் செடிகள் ஒடிந்து தாறுமாறாகக் கிடந்தன. அதன் வழியாக அவர் உள்ளே நுழைந்து, குகைக்குள்ளே இருந்த சூரப்புலியைக் கண்டார். நாயின் பரிதாபமான நிலையைக் கண்டு மனம் வருந்தி அவர் அதன் அருகில் சென்றார்.

துறவியின் நீண்ட தாடியைப் பார்த்ததும் தாடிக்காரனின் மேலிருந்த ஆத்திரமெல்லாம் சூரப்புலியின் உள்ளத்திலே கொந்தளித்து எழுந்தது. முன்னால் இருப்பவர் யாரென்றுகூடக் கவனியாமல் அது அவர் அன்போடு நீட்டிய கையைப் பிடித்துக் கடித்தது. அதைக் கண்டு துறவி கோபம் கொள்ளவும் இல்லை பயமடையவும் இல்லை. அவர் சிரித்துக்கொண்டே தம் கையை விடுவித்துக் காயங்களிலிருந்து பீரிட்டு வந்த ரத்தத்தைத் தம் மேலே போட்டிருந்த நீண்ட மேலாடையை கிழித்துத் துடைத்துக் கொண்டார். காயங்களின்மீது ஏதோ மருந்தை வைத்துக் கட்டிக் கொண்டு மீண்டும் சூரப்புலியிடம் வந்தார். சூரப்புலி மறுமுறையும் அவரைக் கடிக்க முயன்றது. ஆனால், இந்தத் தடவை துறவி ஏமாற வில்லை. அவர் சாமர்த்தியமாகச் சூரப்புலியின் தலையைக் கீழே அழுத்திக்கொண்டு, அதன் வாயையும் கால்களையும், தமது மேலாடையை மேலும் கிழித்து அதன் உதவியால் கட்டி வைத்தார். சூரப்புலி துள்ளிப் புரண்டு கொண்டு ஓலமிட்டது. ஆனால், அதனால் வேறொன்றும் செய்ய முடியவில்லை. துறவி வெளியே கிடந்த பெரிய கட்டையொன்றை மெதுவாகக் குகைக்குள்ளே கொண்டு வந்து சூரப்புலியின் முன்னே போட்டார். பிறகு சில நீண்ட காட்டுக் கொடிகளைப் பிடுங்கிக்கொண்டு வந்தார். கொடி களின் உதவியால் சூரப்புலியைக் கட்டையோடு சேர்த்து நன்றாகக் கட்டிவிட்டார். சூரப்புலியால் இப்பொழுது உடம்பையும் அசைக்க முடியவில்லை. அது அசையாமல் கிடந்தது. புதிய விபத்து ஒன்று நேரப்போகிறது என்று பயந்து கத்திற்று.

பிறகு, நிதானமாக அந்தத் துறவி சூரப்புலியின் பின்னங்கால் களைத் தொட்டுத் தடவிப் பார்த்தார். ஒவ்வொரு காலிலும் எலும்பு ஒடிந்த பாகத்திலே அவர் தொட்டு அழுத்திப் பார்த்த பொழுது சூரப்புலி வீரிட்டுக் கத்திற்று. பின்னங்கால்கள் இரண்டிலும் துடைக்குப் பக்கத்தில் எலும்பு முறிந்து இருப்பதைத் துறவி கண்டு கொண்டார். அவர் கண்களிலே இரக்கம் தோன்றிற்று. யாரோ அதை அடித்து எலும்பை ஒடித்திருக்கிறார்கள் என்று அவருக்குத் தெரிந்துவிட்டது. நல்ல வேளையாக கால் எலும்பு ஒவ்வொன்றும் இரண்டு துண்டாக முறிந்ததே ஒழிய அவை நொறுங்கிப் போகவில்லை. அதை அறிந்ததும் துறவிக்குக் கொஞ்சம் ஆறுதல் ஏற்பட்டது. அவர் தம்மிடத்திலிருந்த சிறிய கத்தியைக் கொண்டு ஓடைக்கு பக்கத்திலே வளர்ந்திருந்த மூங்கிலொன்றை வெட்டி எடுத்து

கொண்டுவந்தார். அதைப் பிளந்து நான்கு பத்தைகள் தயார் செய்தார். ஒவ்வொரு காலிலும் எதிரெதிர்ப் பக்கமாக இரண்டு பத்தைகளை வைத்து ஒடிந்த எலும்புகளையும் சரியானபடி பொருத்தி வைத்துக் கட்டினார். பத்தைகளுக்கு மேலே அவருடைய மேலாடையிலிருந்து கிழித்த துணிதான் கட்டுவதற்குப் பயன்பட்டது. அந்தத் துணியையே சிறு நாடாக்களைப் போலக் கிழித்து அவற்றைக் கயிருகத் திரித்து, பத்தைகள் இடம் பிசகாதபடி நன்ருகக் கட்டி வைத்தார். அவர் கட்டும் போதெல்லாம் வலி தாங்கமாட்டாமல் சூரப்புலி வீரிட்டுக் கத்திற்று. அப்படிக் கதறும்போது அதை அன்போடு துறவி தடவிக்கொடுத்தார். இருந்தாலும் தாடி வைத்துக் கொண்டிருக்கிற அந்தத் துறவியின் மீது சூரப்புலிக்குக் கோபம் தணியவில்லை. மனித குலமே தன்னைத் துன்புறுத்துவதற்காகவே இருக்கிறது என்று சூரப்புலிக்குத் தோன்றிற்று, அதன் வாய்மட்டும் கட்டப்படாமல் இருந்தால் அது துறவியை நன்ருகக் கடிக்க முயன்றிருக்கும்.



உடம்பை அசைக்க முடியாத நிலையிலும் அது துறவியைக் கோபத்தோடு பார்த்து அடிக்கடி உறுமிற்று. "கோபப்படாதே. உனக்கு நல்லதுதான் செய்கிறேன்" என்று அவர் சிரித்துக் கொண்டே கூறினர். சூரப்புலி சீறிக்கொண்டு அவரைக் கனல் தெறிக்கப் பார்த்தது. "மனிதனைக் கண்டாலேயே உனக்குப் பிடிக்க

வில்லையா ? அப்படியானால் இனிமேல் உனக்கு முன்னாலேயே நான் வரவில்லை; பயப்படாதே'' என்று சொல்லிவிட்டு மறுபடியும் அவர் சூரப்புலியைத் தட்டிக்கொடுத்தார். இதற்குள் கட்டெல்லாம் கட்டி முடிந்துவிட்டது. அவர் தமது கையிலுள்ள கத்தியைக்கொண்டு சூரப்புலியின் வாயிலும் உடம்பிலும் கட்டியிருந்த கட்டுகளையெல்லாம் அறுத்தெறிந்தார். வாயிலுள்ள கட்டை அறுக்கும் முன்னதாகவே கழுத்தில் கட்டியிருந்த கயிற்றையும் அறுத்துவிட்டார். பிறகு வேகமாக அவர் அந்தக் குகையைவிட்டு வெளியேறிவிட்டார். சூரப்புலி குகைக்குள்ளேயே படுத்துக் கிடந்தது. இப்பொழுதும் அதனால் எழுந்திருக்க முடியவில்லை. வலியும் தணியவில்லை. அனர்த்திக்கொண்டே சூரப்புலி படுத்துக்கிடந்தது.

வெளியே உடைந்து கிடந்த பெரிய பானை ஓடுகள் இரண்டைத் துறவி எடுத்து வந்தார். தம் தோளிலே தொங்கிக்கொண்டிருந்த சோற்று மூட்டையை அவிழ்த்து ஓர் ஓட்டிலே கொட்டினார். மற்றோர் ஓட்டிலே ஓடையிலிருந்து தண்ணீர் கொண்டுவந்தார். இரண்டையும் சூரப்புலியின் அருகே கொண்டுவந்து வைத்துவிட்டு வேகமாக வெளியே வந்து மறைந்துவிட்டார். அன்று இரவு அவர் பட்டினி. ஆனால், துன்பப்படும் ஓர் உயிருக்கு உதவி செய்த மகிழ்ச்சியோடு அவர் அங்கிருந்து மறைந்தார்.

அடுத்த நாள் மாலையிலும் இருள் பரவுகின்ற சமயத்தில் அவர் எங்கிருந்தோ அங்கு வந்தார். கையிலே உணவு மூட்டை இருந்தது. அவர் தம் முகத்தைத் துணியால் மறைத்துக்கொண்டு குகைக்கு முன்னாலிருந்துகொண்டே உணவு மூட்டையை அவிழ்த்து உள்ளே போட்டார். தாம் கொண்டுவந்திருந்த கமண்டலத்தில் தண்ணீர் எடுத்துவந்து ஓட்டில் ஊற்றினார். இருள் பரவிக்கொண்டதாலும், துறவி தம் முகத்தை மூடியிருந்ததாலும் அவரை இன்னாரென்று சூரப்புலி கண்டுகொள்ளவில்லை. ஆனால், முந்தின நாள் வந்தவர்தான் என்று மட்டும் உணர்ந்தது.

இவ்வாறு பல நாட்கள் நடந்தன. முதலில் சில நாட்கள் மட்டும் துறவியின் உருவம் குகைக்கு முன்பு தோன்றியபோது சூரப்புலி குரைத்தது. பிறகு குரைப்பதை நிறுத்திவிட்டது. இந்த மனிதனால் தனக்கு ஆபத்தில்லை என்று மட்டும் அது தெரிந்துகொண்டிருக்க வேண்டும். இருந்தாலும் மனித இனத்தைப்பற்றி அதற்கிருந்த கோபம் ஆறிவிட்டதாகச் சொல்லமுடியாது. மனித இனத்தையே

அது வெறுக்கிறது என்பதை அந்தத் துறவி உணர்ந்துகொண்டிருந்தாரென்பது நிச்சயம். அதனால்தான் அவர் தமது முகத்தை அதற்குக் காட்டாமல் இருந்தார்.

பல நாள்களுக்குப் பிறகு சூரப்புலிக்குமெதுவாக எழுந்து நடமாட முடிந்தது. பின்கால்களில் கட்டிருந்ததால் அக்கால்களை நன்றாக எடுத்துவைக்க முடியவில்லை. ஆனால், அக்கால்களிலிருந்த வலி நீங்கிவிட்டது. குகையை விட்டு அது வெளியே வரமுடியும் என்று தெரிந்ததும் துறவி குகைக்கு முன்னாலிருக்கும் திருப்பத்திலேயே இருந்துகொண்டு உணவை வைத்துவிட்டுச் சென்றுவிடுவார். சூரப்புலி அந்த உணவைத் தின்றுவிட்டு, ஓடையிலே நீர் அருந்தித் தனது தாகத்தைத் தீர்த்துக்கொள்ளும்.

கால்கள் முற்றிலும் குணமடைந்த போது சூரப்புலிக்கு அந்தத் துறவியை நன்றாக அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. அன்று மாலையில் அவரது வருகைக்காகக் குகைக்கு முன்னாலிருந்த திருப்பத்திற்கு முன்னாலேயே நின்று காத்துக்கொண்டிருந்தது. ஆனால் அன்று அவர் வரவில்லை. அன்று முதல் அவர் வருவதை நிறுத்திவிட்டார். சூரப்புலி இனிமேல் தானாகவே உணவு தேடிக்கொள்ள முடியுமென்பதை அவர் அறிந்துகொண்டிருக்க வேண்டும். அதனாலேயே அவர் வரவில்லை.

சூரப்புலி மறுநாள் காலையில் ஓடையிலே ஓடி வருகின்ற தண்ணீரிலே தலையை உயர்த்தி வைத்துக்கொண்டு படுத்தது. பல நாள்களுக்குப் பிறகு தண்ணீரிலே இப்படி முழுகுவது அதற்கு மிகுந்த உற்சாகத்தைக் கொடுத்தது. பிறகு கரைக்கு வந்து மெதுவாகத் தன் பின்னங்கால்களிலிருந்த கட்டையெல்லாம் பல்லினால் கடித்து இழுத்தது. சிறிது நேரத்தில் சாமர்த்தியமாகத் துணிக் கயிற்றையெல்லாம் கடித்தெறிந்துவிட்டதோடு கட்டுத் துணிகளையும் கிழித்து அப்புறப்படுத்திவிட்டது. மூங்கில் பத்தைகள் தாமாகவே கீழே விழுந்துவிட்டன. சூரப்புலிக்குப் புதிய உயிர் வந்ததுபோல் இருந்தது. அதன் கால்கள் என்றும்போல உறுதி அடைந்துவிட்டன. அதனால் இப்பொழுது ஓடியாடித் திரியமுடியும். ஆகவே, சூரப்புலி குதூகலத்தோடு இரை தேடப் புறப்பட்டது. முன்பு காட்டெருமைப் போரையும் சிந்தையின் திறமையையும், மலைப்பாம்பின் கொடுமையையும் கண்ட காட்சிகள் அதன் நினைவிற்கு வந்தன. கானகத்திலே வாழ வேண்டுமானால் வஞ்சகமும் தந்திரமும் கொடுமையும் நிறைய

வேண்டும் என்று அது நினைத்தது. அதே சமயத்தில் தன் உயிர
காப்பாற்றிக்கொள்ள வேண்டிய வேகமும் எச்சரிக்கையும் அவ
மென்பதையும் அது நன்றுக அறிந்துகொண்டிருந்தது. இ
அறிவைக்கொண்டு அது ஜாக்கிரதையாகத் தனது கா
வாழ்க்கையைத் தொடங்கிற்று. அந்தக் குகையே அதற்கு ந
பாதுகாவலான இருப்பிடமாக அமைந்தது. அந்த இடத்தி
வேறு கொடிய வன விலங்குகள் வருவதில்லை. பல காலமா
கள்ளச் சாராயம் காய்ச்சுவோர்கள் அங்கு நடமாடியதால் வனவில
கள் அந்தப் பக்கத்தையே பெரும்பாலும் நாடுவதில்லை. அது சூ
புலிக்கு நன்மையாக முடிந்தது.

சூரப்புலி ஆரம்பத்தில் காட்டுக்கோழி, முயல், கீரி முதல
சிறு பிராணிகளைப் பிடித்துத் தின்னலாயிற்று. துறவியார் அதற்
கொடுத்தது மாமிசம் கலவாத உணவு. ஆனால் அது இப்பொழு
மாமிசத்தைப் புசித்தே உயிர் வாழலாயிற்று. மெதுவாக இன்
சற்றுப் பெரிய காட்டு விலங்குகளையும் அது கொல்லப் பழ
கொண்டது. தந்திரத்தினால் புள்ளிமான் போன்ற பிராணிகளை
அது கொன்று தின்றது.

கானக வாழ்க்கையின் பயனாக, சூரப்புலி மிகுந்த வலிமை
பயங்கரமான தோற்றமும் பெற்றுவிட்டது. சூரப்புலியின் த
சாதாரணப் பட்டி நாய் என்று முன்பே நமக்குத் தெரியும்; அ
தந்தை ஓர் ஆல்சேஷியன் என்று சொல்லப்படும் ஜெர்மன் போ
நாய். ஓநாயைப் போலத் தோற்றமளிக்கும் அந்த நாய்
இனத்தின் தன்மைக்கேற்றவாறு மிக உயரமாக வளர்ந்திருந்
அது அறிவிலே சிறந்தது. தந்தையான அதனுடைய உடற்கட்
அறிவும், தாயான பட்டி நாய்க்குரிய விசுவாசமும் காவல் காக்
திறமையும் சூரப்புலிக்கு வாய்ந்திருந்தன. பட்டி நாயின் காது
நுனியிலே சற்று மடிந்திருக்கும். ஆல்சேஷியன் நாயின் காது
எப்பொழுதும் நிமிர்ந்தே நின்று சிறிய ஒலியையும் கேட்கக்கூடி
வாய் அமைந்திருக்கும். தந்தையைப்போலவே சூரப்புலியின் கா
களும் சிறிதும் மடிப்பில்லாமல் நிமிர்ந்து நின்றன! வா
உரோமம் அடர்ந்து அழகாக இருந்தது. கானகத்திலே எப்பொ
தும் எச்சரிக்கையாக இருந்து பழகிப் பழகி அதன் காதுகளும்
களும் மிகுந்த கூர்மையடைந்துவிட்டன. மோப்பம் பிடிக்கும் த
யும் மிக ஆச்சரியமாகப் பெருகிவிட்டது. சிறிய ஒலியும் அத
நன்றுகக் கேட்டதோடு அந்த ஒலி எதனால் உண்டானதெ

அறிந்துகொள்ளவும் அதனால் முடிந்தது. கானகத்து மையிருட்டிலும் அது இப்பொழுது நன்றாகப் பார்த்தது. காற்றில் வருகின்ற வாடையைக்கொண்டே எந்த விதமான பிராணி தூரத்திலிருக்கிறது என்பதையும் அது அறிந்துகொள்ளும். இவ்வாறு சக்தியெல்லாம் பெற்று, நல்ல உடற்கட்டும் காளைப் பருவத்தின் கம்பீரமும் கொண்டு அது மிடுக்கோடு விளங்கிற்று.

மேலும், கானக வாழ்க்கையால் அது எத்தனையோ அனுபவங்களையும் ஆற்றலையும் பெற்றது. தந்திரம், வஞ்சகம், அஞ்சா நெஞ்சம், குரூரத் தன்மை, இரக்கமின்மை - இப்படி எல்லாம் அதற்கு அமைந்துவிட்டன, அது மனிதனோடு பழகிய நாள்களையே மறந்து காட்டு விலங்காகவே மாறிவிட்டது. மனிதனிடத்திலேற்பட்ட வெறுப்பும் ஆத்திரமும் மட்டும் மாறவேயில்லை. இப்பொழுது காட்டுக்குள்ளே யாராவது மனிதன் அதற்கு முன்னால் வந்திருந்தால் நிச்சயம் அவனைக் கடித்துக் கொல்லாமல் விடாது. குகைக்குத் திரும்பும் போதெல்லாம் மனிதன்மேல் ஏற்பட்டிருந்த வெறுப்பு வளர்ந்துகொண்டே யிருந்தது.

சில இரவுகளில் அது குகைக்குள்ளே தனியாகப் படுத்துத் தூக்கம் வரும் வரையில் பகலிலே நடந்த சம்பவங்களைப்பற்றி நினைத்துக்கொண்டிருக்கும். அன்றைய சம்பவங்களிலிருந்து மெதுவாகப் பழைய வாழ்க்கையைப்பற்றிய நினைப்பும் வரும். பவானி ஆற்றில் வந்த வெள்ளத்தைப்பற்றியும், பாக்கு வியாபாரியின் மாளிகையிலே தன் வாழ்க்கையைப்பற்றியும் அது எண்ணிக்கொண்டிருக்கும். அந்தச் சடைநாயை ஒரு நாள் பழிவாங்க வேண்டும் என்ற கோபமும் அப்போது உண்டாகும். உருளைக்கிழங்கு மண்டியிலே இருந்த காவல்காரர்களைப்பற்றியும் நினைக்கும். அதே சமயத்தில் தாடிக்காரனுடைய நினைவு வந்து அது குமுறும். அதன் கண்களிலே கோபக் கனல் கொழுந்துவிடும்.

இவற்றிற்கு மத்தியிலே அந்தத் துறவியைப்பற்றிய நினைவும் சில வேளைகளில் வராமற் போகாது. அந்த மனிதனைப்பற்றி அது ஒரு தனிப்பட்ட ஆச்சரியத்தோடு யோசித்துப் பார்க்கும். அவன் எதற்காக அதனிடத்திலே அன்பு காட்டினான்? மனிதரெல்லாம் அதற்குத் துன்பமே கொடுத்தார்கள். பாக்கு வியாபாரியின் மகனை சிறு பையன்கூடத் துன்பமே செய்தான். இந்த மனிதன் எதற்கு வேறு விதமாக நடந்தான்? அவன் எதற்காக அதன் எலும்புகளை



பொருத்தி வைத்துக் கட்டினுன்? எதற்காக அவன் உணவும் தண்ணீரும் கொண்டுவந்து கொடுத்தான்? முகத்தை மூடிக்கொண்டு ஏன் உதவி செய்தான்? பிறகு எங்கே போய்விட்டான்? அவன் மனிதனல்லவோ? வேறு வகையான ஒரு பிறவியா? அவனுக்கும் தாடிக்காரனைப்போலத் தாடியிருந்ததே! காட்டிலே வாழ்கின்ற ஆண் வரையாட்டிற்குக்கூடத் தாடியிருக்கிறது. ஆனல் அது மனித இனமல்ல. அது போல அவன் வேறு இனமா? அவனிடம் அன்பு நிறைய இருக்கிறது. அவனைப் பார்த்துப் பழகிக்கொள்ள வேண்டும். ஆனல் அவன் எங்கே இருக்கிருனே?

இவ்வாறு சூரப்புலியின் உள்ளத்திலே எண்ணங்களும், கேள்விகளும் எழும். துறவியைப்பற்றிய எண்ணம் பல தடவை வந்ததால் அவரைப் பார்க்க வேண்டும் என்று அது விரும்பியது.

இந்த விருப்பம் புதியதாக ஏற்பட்ட ஒரு சம்பவத்திற்குப் பிறகு மிக அதிகமாயிற்று. ஒரு நாள் சூரப்புலி ஒரு முள்ளம்பன்றியைக் கண்டது. அதனேடு குறும்பாகச் சண்டையிட ஆரம்பித்தது. காளைப் பருவத்துத் துடுக்கே இந்தச் சண்டைக்குக் காரணம். ஆனல் சூரப்புலி முள்ளம்பன்றியின் மேல் பாய முயன்றபோது முள்ளம்பன்றி தனது நீண்ட கூரிய முட்களில் ஐந்தாறை அதன் கழுத்திலும் மார்பிலும் தைக்கும்படி செய்துவிட்டது. அது உடம்பைச்

சிலிர்த்துக்கொண்டு உடம்பெல்லாம் முள்ளாக நின்றதைக் கண்டு சூரப்புலி பின்வாங்கியது. முள் தைத்த இடமெல்லாம் வலியெடுத்தது. அதனால் முள்ளம்பன்றியை எதிர்த்து நிற்காமல் குகைக்கு ஓடி வந்துவிட்டது.

அங்கே வந்து முட்களையெல்லாம் வாயில் கவ்வியும், கால்களால் தள்ளியும் எடுக்க முயன்றபோது துறவியின் நினைப்பு அதற்கு அதிக மாயிற்று. அந்த மனிதர் இப்பொழுது பக்கத்திலிருந்தால் முள்ளை யெல்லாம் பிடுங்கிவிடுவதோடு காயத்திற்கு மருந்தும் போடுவார் என்று அது நினைத்தது.

துறவியின் மேலாடையில் கிழித்த சில துணிகள் குகைக்குள்ளே கிடந்தன. அவற்றைச் சூரப்புலி நன்றாக முகர்ந்து பார்த்தது. அந்த மாதிரி மோப்பம் பிடித்து அவரைக் கண்டு பிடிக்க நினைத்தது. அவர் பக்கத்திலேயே எங்காவது இருப்பாரென்று எண்ணி நாள்தோறும் சுற்றுப்புறமெல்லாம் தேடித் தேடி அலைந்தது.

ஒருநாள் இவ்வாறு ஓடிக்கொண்டே அது வெகு தூரம் சென்று விட்டது. இதுவரையிலும் காணாத சிறிய ஆறு ஒன்று அங்கே தென்பட்டது. அதன் கரை ஓரமாகவே சூரப்புலி நீண்ட நேரம் ஓடிற்று. கடைசியாகத் திரும்பலாம் என்று நினைக்கும் சமயத்தில் ஆற்றின் கரையிலே நல்ல அழகான இடத்திலே ஒரு பர்ணசாலை கண்ணுக்குப் புலப்பட்டது. சூரப்புலி அதனருகே சென்றது. யாரும் அங்கிருக்கவில்லை. அதனால் அது மெதுவாகப் பர்ணசாலைக் குள் நுழைந்தது. உள்ளேயும் யாரும் இல்லை. அது காலியாக இருந்தது, சில கிழிந்த துணிகள் மட்டும் அங்குமிங்கும் கிடந்தன. அவற்றைச் சூரப்புலி முகர்ந்து பார்த்தது. அவை அந்தத் துறவிக்குச் சொந்தமானவை என்று அதற்குத் தெரிந்துவிட்டது. அதனால் அது அங்கேயே இருந்தது. துறவியைச் சந்திக்கத் தீர்மானித்தது. இரவு சூழ்ந்தது. ஆனால் யாரும் அங்கு வரவில்லை. சூரப்புலி பர்ணசாலைக்குள்ளேயே படுத்துக்கொண்டிருந்தது.

பர்ணசாலையிலேயே சூரப்புலி இரவு முழுவதும் படுத்திருந்தது மறுநாள் மாலை வரையிலும் அந்தப் பக்கத்திலேயே அங்குமிங்கும் உலாவிற்று. எப்படியாவது அந்தத் துறவியைக் காணவேண்டு மென்று அதற்கு ஆசை. ஆனால், மாலை வரையிலும் அங்கு யாரும் வரவில்லை. அதனால் மேலும் அங்கேயே இருந்து துறவியைக் காண

முடியாதென்று அதற்குத் தோன்றியது. அவர் வேறெங்காவது போயிருக்கலாம். அல்லது இருக்கையை மாற்றிக்கொண்டிருக்கலாம். இவ்வாறு நினைத்துக்கொண்டே சூரப்புலி அவரைத் தேடிப்போக எண்ணிற்று. பர்ணசாலைக்குள் சென்று நன்ருக மோப்பம் பிடித்தது. பிறகு, அவருடைய காலடி சென்றுள்ள பக்கமாக மோப்பம் பிடித்துக் கொண்டே சென்றது. ஆற்றை அடையும் வரையில் அதற்கு எவ் விதச் சந்தேகமும் ஏற்படவில்லை. அதுவரையிலும் நிச்சயமாக மோப்பம் பிடிக்க முடிந்தது. அதற்குமேல் கரையோரமாக மேலும் கீழும் ஓடிப்பார்த்தது. கொஞ்ச தூரத்திற்கு மோப்பம் கிடைத்ததே ஒழிய அதற்குமேல் ஒன்றும் புலனுகவில்லை. துறவி கரையோரமாக மேல்நோக்கியோ கீழ்நோக்கியோ செல்லவில்லை என்பது தெரிந்து விட்டது. அதனுல் அவர் ஆற்றைக் கடந்துதான் போயிருக்க வேண்டும்.

சூரப்புலி ஆற்றில் குதித்தது. ஆற்றில் ஆழம் அதிகமில்லை. அதனுல் நடந்தே அக்கரைக்குச் செல்ல முடிந்தது. அக்கரை சென்றதும் சூரப்புலி மீண்டும் மோப்பம் பிடித்துத் துறவி சென்ற சிறிய கால்நடைப் பாதையைக் கண்டு பிடித்துவிட்டது. அந்தப் பாதை குறுகலாக இருந்தாலும் அடிக்கடி பலர் நடந்த காரணத்தால் நன்ருகத் தெரிந்தது. அதன் வழியாகவே சூரப்புலி வேகமாக ஓடிற்று.

ஆனுல், இருள் பரவ ஆரம்பித்ததும் அது வேகத்தைக் குறைத்துக்கொண்டு காலடிச் சத்தம் கேட்காதவாறும், சுற்றுமுற்றும் பார்த்து எச்சரிக்கையோடும் நடக்கத் தொடங்கியது. போகப் போகக் காட்டின் அடர்த்தி குறையலாயிற்று. சில இடங்களில் மரங்களே இருக்கவில்லை; சில குற்றுச்செடிகளும் மலைப்புல்லுமே இருந்தன. அவற்றின் வழியாகப் போய்க்கொண்டிருக்கும்போது மெதுவாக ஏதுவோ அதிர்வது போல ஓசை கேட்டது, இன்னும் கொஞ்ச தூரம் போன போது அந்த ஓசை தடதடவென்று அதிகமாயிற்று. இதுவரையிலும் சூரப்புலி பல வகையான காட்டு ஒலிகளைக் கேட்டிருக்கிறது; அவை எப்படி அல்லது எதனுல் உண்டாகின்றனவென்றும் அதற்குத் தெரியும். சிறிய ஒலியிலிருந்தும் அது பிராணிகளை அறிந்துகொள்ளும். ஆனுல் இது போன்ற இடைவிடாத பெரிய ஓசையை அது இன்று வரையிலும் கேட்டதில்லை. அதனுல், மேலே நடவாமல் தயங்கி நின்றது. அடுத்த நாள் பகல் வெளிச்சம் வருமுன் இனி அடியெடுத்துவைக்கக்

டாது என்று அதற்குத் தோன்றிற்று. உடனே அங்கே ஒரு மறைவான புதரைக் கண்டுபிடித்து அதற்குள்ளே சென்று மெதுவாகப் படுத்தது. அப்படிப் படுத்ததும் அதற்குப் பழைய நினைவு வந்தது. முதன் முதலாக அது கானத்தில் புகுந்து ஒரு புதரிடையே இப்படித் தானே படுத்தது ? அந்த நினைவு வந்ததும் அதற்குத் தூக்கம் பிடிக்கவில்லை. விழித்துக்கொண்டே எச்சரிக்கையோடு விடியுமளவும் படுத்திருந்தது.

காலையிலே சூரிய கிரணங்கள் காட்டில் புகுந்து எங்கும் வெளிச்சம் ஏற்பட்டவுடன் சூரப்புலி மேற்கொண்டு தனது பிரயாணத்தைத் தொடங்கிற்று. வரவர தடதடவென்று அதிரும் ஓசை அதிகமாயிற்று. ஆனால், இரவிலே ஏற்பட்டது போன்ற அச்சம் இப்பொழுது ஏற்படவில்லை. எனினும் சூரப்புலி எச்சரிக்கையோடு சென்றது.

இப்பொழுது காதைத் தொளைக்கும்படியாகப் பேரிரைச்சல் கேட்கலாயிற்று. ஆனால் சிறிய பறவைகளையும் புனுகுபூனை முயல் போன்ற சிறிய விலங்குகளையும் தவிர வேறு பெரிய பிராணிகளின் அறிகுறியே தெரியவில்லை. சூரப்புலி ஆச்சரியப்பட்டுக்கொண்டே அடியெடுத்து வைத்தது.

ஒரு திருப்பத்திற்கு வந்து புதர் மறைவிலிருந்து இடப்பக்கமாகத் திரும்பும்போது திடீரென்று ஒரு மலையருவி கண்ணுக்குத் தோன்றிற்று. பர்ணசாலைக்குப் பக்கத்தில் ஓடிய அதே சிறிய ஆறு அங்கு ஒரு பாறையிலிருந்து கீழே அருவியாகச் சுமார் 15 அடி உயரத்திற்கு விழுந்துகொண்டிருந்தது. அந்த அருவியே தடதடவென்று ஓசையுண்டாக்குகிறது என்று சூரப்புலிக்குத் தெரிந்ததும் அது தன் சந்தேகத்தையெல்லாம் விட்டுவிட்டு வேகமாகக் கீழே செல்லலாயிற்று.

அருவியின் கீழ்ப்பகுதியிலே ஓரிடத்தில் அகன்ற பாறையொன்று சற்று உயரமாக ஒரு மேடையைப்போல அமைந்திருந்தது. அதன் மீது ஒரு காவி நிறமான பை அவிழ்ந்தே கிடந்தது. சூரப்புலி அப்பையை முகர்ந்து பார்த்து, அது துறவிக்குச் சொந்தமானதென்று கண்டுகொண்டது. உடனே, அது ஆவலோடு பைக்குள் தலையை விட்டுப் பார்த்தது. அதிலே சில புத்தகங்களும், ஒரு சிறிய கத்தியும் இருந்தன, அந்தக் கத்தியால் மூங்கில் பத்தைகளைச் சீவித் தன் கால்களில் வைத்துக் கட்டியதை சூரப்புலி உணர்ந்துகொண்டது. ஆதலால், துறவி அங்கேதான் பக்கத்தில் எங்காவது

இருப்பாரென்று அது மகிழ்ச்சியோடு அங்குமிங்கும் சுற்றிப் பார்த்தது. துறவியை எங்கும் காணேம். அங்கிருந்து மலேக் காட்டைவிட்டுக் கீழிறங்கிச் செல்லும் ஒற்றையடிப் பாதையிலே அவர் சென்றிருக்கவேண்டும் என்று மட்டும் அது மோப்பத்தால் அறிந்து கொள்ள முடிந்தது.

இருந்தாலும் அதற்கு ஒரு வீணை ஆசை. மறுபடியும் பர்ணசாலேக்குப் போனல் அங்கே ஒரு வேளே அந்தத் துறவி இருப்பாரோ ? பையை எடுத்துக்கொண்டு போய் அவருக்குக் கொடுக்க வேண்டும் என்று அது விரும்பிற்று. உடனே, வாயில் பையை நன்ருகக் கவ்வி, அதனுள்ளிருக்கும் பொருள்கள் கீழே விழாதவாறு பிடித்துக்கொண்டு, வந்து வழியிலேயே வேகமாகத் திரும்பிப் பர்ணசாலேக்குச் சென்றது.

சூரப்புலி எதிர்பார்த்ததுபோலத் துறவி அங்கிருக்கவில்லே. அது பர்ணசாலேக்குள் ஒரு மறைவிடத்தில் பையை வைத்துவிட்டு மீண்டும் அருவியை நோக்கிப் புறப்பட்டது. தூரத்திலேயே அருவியின் ஓசையைக் கேட்டு இந்த முறை அது பயமடையவில்லே. அருவியை அடைந்ததும் நாலாபக்கமும் ஆவலோடு மீண்டும் சுற்றிப் பார்த்தது, பிறகு ஒற்றையடிப்பாதை வழியாக அது மலேக்காட்டை விட்டுக் கீழிறங்கி நடக்கலாயிற்று. கொஞ்சங்கொஞ்சமாக நிலத்தின் தன்மை மாறிக்கொண்டே வந்து கடைசியில் பயிர்செய்யும் நிலப் பகுதியே வந்துவிட்டது. சூரப்புலி மோப்பம் பிடித்துக்கொண்டே தொடர்ந்து சென்றது. துறவியைக் கண்டுபிடிக்காமல் திரும்புவ தில்லே என்ற உறுதி அதன் உள்ளத்திலே ஏற்பட்டிருக்கவேண்டும்.

அன்று கதிரவன் மறைந்து இருள் கூடுகின்ற சமயத்திலே அது மேட்டுப்பாளேயம் வந்து சேர்ந்தது. அங்கு வந்ததும் பழைய நினேவுகள் எல்லாம் வரிசையாக எழுந்தன. அதன் இளமைப்பருவ நிகழ்ச்சிகள் அந்த ஊரில்தானே நடந்தன ? சூரப்புலி பல வீதிகளின் வழியாக யாதொரு நோக்கமுமில்லாமல் சுற்றிக்கொண்டிருந்தது. அங்கு வந்த பிறகு துறவியின் அடிச்சுவடுகளே மோப்பம் பிடித்து அறியமுடியவில்லே, காட்டுப்பாதையிலே நடமாட்டம் அதிகமாக இராததால் மோப்பம் பிடிப்பது சாத்தியமாயிற்று. இங்கு மக்கள் நடமாட்டம் அதிகம். துறவி அந்த வழியாகச் சென்று சில நாள்கள் ஆகியிருக்க வேண்டும். அதனல், சூரப்புலியின் மிக நுட்பமான மோப்பம் பிடிக்கும் சக்தியும் பயன்படவில்லே.

மூங்கில் தடியால் அடிபட்ட உருளைக்கிழங்கு மண்டியின் வழியாகச் சூரப்புலி இரவு பன்னிரண்டு மணி சுமாருக்குச் சென்றது. அந்த இடத்தைக் கண்டதும் அதற்குத் திடீரென்று கோபம் உண்டாயிற்று. சட்டென்று வீதியை விட்டு மண்டியின் முன்பகுதிக்குள் நுழைந்தது. அன்றிரவும் அங்கே தாழ்வாரத்தில் இரண்டு பேர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனல் நல்ல வேளை. அவர்கள் பழைய ஆசாமிகள் அல்ல. பழைய ஆசாமிகளைப் போலவே அவர்களும் தூக்கத்தில் சூரப்புலிகளாக இருந்தாலும் ஆட்கள் வேறு. அதனல் அவர்களைப்பற்றிச் சிந்திக்காமல் வெளியே வந்தது. மீண்டும் வீதிகளின் வழியாகச் சுற்றலாயிற்று. சிறிய குட்டியாக இருந்த போது அது இப்படித்தானே அந்த வீதிகளில் அலைந்தது ?

காலை வேளையிலே அது பாக்கு வியாபாரியின் மாளிகைக்கு முன்னல் வந்து நின்றது. உள்ளே நுழைய அதற்கு விருப்பமில்லை. ஆனல் உள்ளே உற்றுப் பார்த்துவிட்டு மாளிகையின் எதிர்ப்புறமாகச் சாலையோரத்தில் சென்று அங்கிருந்த ஒரு மரத்தடியில் படுத்துக் கொண்டது.

ஒரு மணி நேரத்திற்கு மேலாகியும் அது அந்த இடத்தை விட்டு அசையவில்லை. அதன் பிறகு மாளிகை வாயிலை ஒரு வேலைக்காரன் திறந்துவைத்தான். சடையன் வேகமாக வெளியே ஓடிவந்தது. அதன் வருகையைத்தான் சூரப்புலி எதிர்பார்த்துப் படுத்திருந்தது.

சடையனைக் கண்டதும் சூரப்புலி கோபத்தோடு எழுந்து அதனருகே சென்றது. சண்டையே அதன் நோக்கம் என்பது நிச்சயமாகத் தெரிந்தது. சடையன் ஏமாந்திருக்கும் சமயத்தில் அதனிடம் போரிட அது கருதவில்லை. எச்சரிக்கை செய்துவிட்டே முன் சென்றது. அதன் தோற்றத்தைக் கண்டதுமே மாளிகைக்குள் ஓடிவிடலாம் என்று சடையன் கருதியிருக்கவேண்டும். ஆனல் சூரப்புலி அதை விட்டுவிடவில்லை. மாளிகை வாயிற்பக்கமாக அது சட்டென்று சென்று சடையனை மடக்கிக்கொண்டது. சண்டையிடுவதைத் தவிரச் சடையனுக்கு வேறு வழியில்லை. நன்ருகக் கொழுத்திருக்கும் சடையன் தனது பருத்த உடம்பின் தோற்றத்தைக் கொண்டே இதுவரை பல நாய்களை மிரட்டி வந்தது. அந்த மிரட்டல் இப்பொழுது சூரப்புலியிடம் பலிக்கவில்லை. சூரப்புலியின் உடம்பெல்லாம் முறுக்கேறிய தசை நார்கள் மிகுந்திருந்தன. காட்டு விலங்குகளை எதிர்த்துப் போராடிக் கொல்லும் தினசரி வாழ்க்கையால்



அவைகள் மிகுந்த பலங்கொண்டிருந்தன. மேலும் சூரப்புலி எதிரியைத் தாக்குவதில் புதிய புதிய முறைகளைக் கற்றிருந்தது. அதனால் அது ஒரு நொடியிலே சடையனைக் கீழே வீழ்த்தி அதன் குரல் வளையைப் பிடித்துக் கடித்துப் பிய்த்தெறிந்துவிட்டது. மறுபடியும் சடையன், விழுந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவேயில்லை. சத்தங் கூடப் போடாமல் அப்படியே உயிரை விட்டுவிட்டது.

குட்டிப் பருவத்திலே தன்னைத் துன்புறுத்திய சடையனைப் பழி வாங்கிய குதூலத்தோடு சூரப்புலி அங்கிருந்து மிடுக்கோடு புறப்பட்டது. அதற்கு எங்கு போவதென்று புலப்படவில்லை. கால் போன போக்கிலே நடந்தது.

கடைசியாக அது மேட்டுப்பாளையத்திலிருந்து கோயம்புத்தூர் செல்லும் பெரிய சாலைக்கு வந்து சேர்ந்தது. அன்று அந்தச் சாலையிலே வண்டிகள் நிறையப் போய்க்கொண்டிருந்தன, கால்நடையாகவும் பல பேர் மூட்டை முடிச்சுகளுடன் சென்றுகொண்டிருந்தார்கள். உற்சாகமாக ஆண்களும் பெண்களும் பேசிக்கொண்டு போவதைப் பார்த்தால் ஏதோ ஒரு திருவிழாவுக்குச் செல்பவர்களைப் போலத் தோன்றிற்று. "கோவிந்த பாரக், கோவிந்த பாரக்" என்று கோஷமிட்டுக்கொண்டு தீப்பந்தத்தை ஏந்திய தாசர்கள் ஆவேசங்கொண்டவர்களைப்போல ஆடிக்கொண்டு சென்றார்கள். சூரப்புலிக்கு இந்த

மக்களைக் காணப் பிடிக்கவில்லை. மனித இனத்தின் மேலேயே அதற்கு வெறுப்பு ஏற்பட்டிருந்ததல்லவா? அதனால், அருகிலே யாராவது வந்துவிட்டால் அது 'உர்' என்று உறுமும். அடுத்த நொடியிலே அவர்கள்மீது பாயவும் தயாராக இருக்கும். ஆனால் அப்படிப் பாயவேண்டிய அவசியம் நேரவில்லை. அதன் தோற்றத்தை யும் சீற்றத்தையும் கண்டதுமே மக்கள் ஓட்டம் பிடித்தார்கள். அவர் கள் செய்கையைக் கண்டு சூரப்புலி ஆச்சரியம் அடைந்தது.

இவ்வாறு சுமார் இரண்டு மைல் தூரம் சென்ற பிறகு, சாலையின் ஒரு பக்கத்திலிருந்த ஒரு மரத்தடியில் அமர்ந்து, ஒரு கூட்டத்தார் தாங்கள் கொண்டுவந்திருந்த கட்டுச்சாதத்தை எடுத்துவைத்துச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள், முந்திய நாள் முதல் சூரப்புலி பட்டினி. அதற்குப் பசியெடுத்தது. அதனால் அது அந்தக் கூட்டத் திற்குள்ளே கம்பீரமாக நுழைந்தது. அதைக் கண்டதும் எல்லோரும் சாதத்தை எறிந்துவிட்டு ஓட்டம் பிடித்தனர். சூரப்புலிக்கு நல்ல விருந்து கிடைத்தது. அதை உண்ணும்பொழுதே சூரப்புலி, மனிதன் தன் கையில் தடியோ மற்ற ஆயுதமோ வைத்திருக்காவிட்டால் சக்தியற்றவன் என்று உணர்ந்துகொண்டது. தடி கையிலில்லாத மனிதனைத் தன் விருப்பம் போலத் தாக்கி மடக்கிவிடலாம் என்று அது தெரிந்துகொண்டது. இந்த உணர்வு வந்ததும் அது மனிதனிடம் பயப்படுவதை விட்டுவிட்டதோடு அவனிடம் வெறுப்புக்கொள்வதை யும் மறந்துவிட்டது. ஆனால் தாடிக்காரன் மேலிருந்த வெறுப்பு மட்டும் மாறவில்லை. அவனைத் தவிர மற்றவர்களைத் தனக்கு எதிரியாக நினைப்பதே இழிவானது என்று அதற்குத் தோன்றிற்று. மற்றவர் களெல்லாம் அதற்குப் பயந்தவர்கள்தாமே?

இந்த நினைப்போடு அது உணவை முடித்துக்கொண்டு மேற் கொண்டு நடந்தது. மேட்டுப்பாளையத்திலிருந்து இவ்வாறு ஆறு மைல் சென்று சூரப்புலி காரமடையை அடைந்தது. அந்த ஊருக்கு அருகில் போகப்போக மக்களின் கூட்டம் மிக நெருக்கமாக இருந்தது. அன்று அங்கே தேர்த்திருவிழா. அந்த ஊரிலுள்ள புகழ்பெற்ற ரங்கநாதருடைய பெரிய திருவிழா. ஆயிரக்கணக்கில் வண்டிகளும் மற்ற வாகனங்களும் வந்திருந்தன. ஆண்களும் பெண்களும் திரள் திரளாக நெருக்கியடித்துக்கொண்டு அங்குமிங்கும் சென்றுகொண் டிருந்தனர். சிறுவர்கள் வாயில் வைத்து ஊதுகின்ற ஊதிகளின் பல்வேறுவகைப்பட்ட ஒலிகளும், தப்பட்டை, கொம்பு முதலிய வாத்தியங்களின் ஒலிகளும் எங்கும் கேட்டன.

சூரப்புலி இத்தனை பெரிய மனிதக் கூட்டத்தைக் கண்டதேயில்லை—இருந்தாலும் அதற்கு இப்பொழுது அச்சம் தோன்றவில்லை. அதைக் கண்டுதான் மக்கள் பயந்து பயந்து விலகிப் போனார்கள். சூரப்புலி அவர்களுக்கிடையே கம்பீரமாக நடந்தது. எங்குப் பார்த்தாலும் வேடிக்கை விநோதங்களும், ஏமாற்று வித்தைகளும் நடந்தன.

இப்படிப்பட்ட திருவிழாக் கூட்டத்திலே பிச்சைக்காரர்களுக்குப் பஞ்சமே இருக்காது. அது ஓரிடத்திலே, ஒரு கண்ணில்லாத கபோதி கையேந்திக்கொண்டு நிற்பதைப் பார்த்தது. அவனுக்குப் பக்கத்திலே ஒரு தடிப்பையன் நின்றுகொண்டிருந்தான். அவனுடைய தோள்மீது கையை வைத்துப் பிடித்துக்கொண்டுதான் குருடன் நடந்தான். அவனில்லாவிட்டால் குருடனால் ஒன்றும் செய்ய முடியாது என்று சூரப்புலிக்குத் தெரிந்தது.

குருடன், "ஐயா, இந்தக் கண்ணில்லாத ஏழைக்கு ஒரு காசு போடுங்கள்" என்று உரத்துக் கூவிக்கொண்டிருந்தான். அவன் குரலிலே துயரம் கலந்திருந்தது. தடிப்பையன் அவனுக்காகக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. குருடன் பிச்சை வாங்கும் காசைக்கொண்டு அவன் நன்றாகத் தின்று கொழுத்திருந்தான். தன்னை விட்டால் குருடனுக்குக் கதியில்லையென்று அவன் தெரிந்துகொண்டு அவன் குருடனைத் தன் விருப்பம்போல ஆட்டிவைத்துக்கொண்டிருந்தான். அந்தப் பையனிடத்திலே எப்படியோ ஆரம்பத்திலேயே சூரப்புலிக்கு வெறுப்பும் குருடனிடத்தில் அன்பும் ஏற்பட்டன.

திருவிழாவுக்கு வந்த சிலர், தாங்கள் உண்டு மீதியாக இருந்த சோற்றைக் குருடன் கையிலே கொடுத்துச் சென்றார்கள்; சிலர், வாழைப்பழம் கொடுத்தார்கள். அந்தத் தடிப்பையன் பழங்களையெல்லாம் குருடன் கையிலிருந்து எடுத்துத் தானே ஒன்றுவிடாமல் தின்றுவிட்டான். சுவை மிகுந்த சோற்றையும் தன் வாயில் போட்டுக்கொண்டு குருடனுக்கு எஞ்சியவற்றைக் கொடுத்தான். குருடனுக்கு அவனிடம் கோபித்துக்கொள்ள முடியாது. அதனால் ஏதோ கிடைத்ததைத் தின்று அவன் பசியைத் தணித்துக் கொண்டான்.

சூரப்புலி மெதுவாகக் குருடனுக்குப் பக்கத்திலே சென்று அவன் காலருகில் நின்றது. "நாயைப் பாருடா, ரொம்ப சொந்தங் கொண்டாடுது. உதை போகட்டும்" என்று தடிப்பையன் அதட்டினான்.

"நாயா ? எங்கே ?" என்று கேட்டுக்கொண்டே குருடன் கீழே குனிந்து சூரப்புலியைத் தன் கைகளால் தடவிப் பார்த்தான்.

"நல்ல நாய். இதற்குக் கொஞ்சம் சோறு போடு" என்றான் குருடன்.

"உனக்குச் சோறு கிடைத்தால் பத்தாதா ? அதற்கு வேறு சோறா ?" என்று சீறினான் பையன்.

"அப்பா, அப்படிச் சொல்லாதே. பெருமாள் புண்ணியத்திலே இந்தத் திருவிழாவிலே சோற்றுக்குக் குறைவில்லை. அதற்கும் போடு, பாவம், வாயில்லாத சீவன்" என்றான் குருடன்.

"உனக்கு வேலையில்லை. நான் மாட்டேன் போ" என்று சொல்லிவிட்டுப் பையன் அந்த இடத்தைவிட்டுக் கொஞ்சம் விலகிப் போய்விட்டான்.

குருடன் கீழே அமர்ந்து சூரப்புலியை மீண்டும் தடவிக்கொடுத்தான். பிறகு மெதுவாகச் சுற்றிலும் கையால் தொட்டுப்பார்த்துச் சோற்றுத் தகர டப்பாவை எடுத்தான். அதிலிருந்த சாதத்தை அன்போடு சூரப்புலிக்கு வைத்தான். "இந்தா, சாப்பிடு" என்று பரிவோடு சொன்னான்.



சூரப்புலி முன்பே நல்ல விருந்து சாப்பிட்டிருக்கிறது. இருந்
லும், குருடன் கொடுத்த உணவை அது விருப்பத்தோடு தின்று

அந்த நேரம் முதல் அது குருடனுடனேயே இருக்க விரும்பிற்று
அவனுக்கு உதவி செய்யவும் அது ஆசைகொண்டது. இதுவரை
யிலும், இப்படிப்பட்ட அன்பை அது உணர்ந்ததில்லை. குருட
காட்டிய அன்பு அதைக் கவர்ந்தது. பட்டி நாயான தாயின் எஜமா
விசுவாசம் மேலெழுந்தது. சூரப்புலி அவன் செல்லுமிடங்களு
கெல்லாம் கூடவே சென்றது. குறும்பு செய்கின்ற தடிப்பையன்
அது வெறுக்கலாயிற்று. இருந்தாலும், அந்தப் பையனுடை
உதவி குருடனுக்கு வேண்டுமென்று அது தெரிந்துகொண்டு, த
வெறுப்பை வெளிக்குக் காட்டாமல் இருந்தது.

சூரப்புலி இதுவரையிலும் எந்த மனிதனிடத்திலிருந்து
அன்பைப் பெற்றதில்லை. அது சிலருடன்தான் வாழ்க்கை நடத்
யிருக்கிறதென்றாலும் அந்தச் சிலரிலும் அதனிடம் அன்புகாட்டி
வர்கள் ஒருவர்கூடக் கிடையாது. தாடிக்காரனோடு குகையி
வசித்த பொழுது நல்ல உணவு கிடைத்ததென்னவோ உண்மை
தான். அந்தக் குடிகாரர்கள் அலட்சியமாக வீசியெறியும் எலும்பு
துண்டுகளும், கறித்துண்டுகளும் குவிந்து போகும். அதனால் சூர
புலிக்கு நல்ல உணவு கிடைத்தது. ஆனால் யாரும் அதனிட
அன்பு காட்டி உணவு போட்டதாகக் கூற முடியாது. அடிக்கவு
உதைக்கவுமே அவர்கள் விரும்பினார்கள். தாடிக்காரே
கொடுமையே உருவானவன். பின்னங்கால்கள் ஒடிந்து கிடந்
சமயத்திலே வந்து சிகிச்சை செய்த துறவியிடத்திலே
அன்பிருந்தது. ஆனால் அவர் அந்த அன்பை வெளிப்படையாக
காட்டிக்கொள்ளவில்லை. தம் முகத்தைக்கூடக் காட்டாமல் உண
கொண்டுவந்து கொடுத்தார். மேலும், அவரை இப்பொழு
காணமுடியவில்லை.

இந்த நிலையிலேயே சூரப்புலிக்குக் குருட்டுப் பிச்சைக்கா
னுடைய தொடர்பு ஏற்பட்டது. அவன் அதனிடம் அன்பு காட்டினன்
அன்பு என்பது இன்னதென்றே அவன் மூலமாகத்தான் அதற்கு
தெரிந்தது. பட்டி நாயாகிய அது தாயின் அன்பை அறியு
ஆனால், மனிதனுடைய அன்பை அது குருடனிடத்தில்தா
முதல்முதலாக உணர்ந்தது. அவன் தன் கண்ணற்ற முகத்தி
யும் உணர்ச்சி தோன்ற அதைக் கட்டிப் பிடித்துத் தடவி

கொடுக்கும் பொழுது அது என்றும் காணாத ஓர் இன்பத்தைக் கண்டது. குருடனுக்கும் தன் அன்பு உணர்ச்சியை வெளிப்படுத்த ஓரிடம் தேவையாக இருந்தது போலும். மனித இனத்திலே ஒருவரிடமும் அவன் அன்பு செலுத்த முடியவில்லை. அந்தத் தடிப்பையன் ஏதோ பிச்சையெடுப்பதற்கும் சோறு வாங்கித் தின்பதற்கும் இடம் விட்டு இடம் போவதற்கும் உதவியாக இருந்தானே ஒழிய அன்பைப் பெறுவதற்கு வேண்டிய குணம் அவனிடத்திலே இல்லை. வேலை செய்யாமல் குருடன் வாங்குகின்ற பிச்சையிலே காலத்தைக் கழிக்க வேண்டுமென்ற எண்ணத்தோடுதான் அவன் குருடனோடு இருந்தான். ஒருவனுடைய உதவி மற்றவனுக்கு வேண்டியிருந்தது. அதனால் அவர்கள் சேர்ந்திருந்தார்கள். அன்பு அவர்களைச் சேர்த்து வைக்கவில்லை. எனவே, குருடன் அந்தப் பையனிடம் தனது அன்புணர்ச்சியை வெளிப்படுத்த முடியவில்லை. அவனுடைய அன்புணர்ச்சியைச் சூரப்புலியிடம் வெளிப்படுத்தினான். அதனால் மகிழ்ச்சியடைந்த சூரப்புலி அவனோடு கூடவே இருக்க விரும்பிற்று.

காரமடைத் திருவிழா முடிந்த பிறகு குருடன் தனது முக்கிய இருப்பிடமாகிய கோயம்புத்தூருக்குப் புறப்பட்டான். தடிப்பையன் ஒரு மூங்கில் குச்சியின் ஒரு நுனியைப் பிடித்துக்கொண்டு மற்றொரு நுனியைக் குருடன் கையில் அலட்சியமாக வைத்தான். குருடன் அதைத் தன் வலக்கையிலே கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். இடக்கையிலே மற்றொரு கோலைப் பிடித்து நிலத்திலே ஊன்றிக் கொண்டு நடக்கத் தயாராயினான். பையன் பலவிதமான குறும்புகள் செய்துகொண்டு முன்னால் நடந்தான். சூரப்புலி குருடனோடு பக்கத்திலேயே நடந்தது.

அடுத்த நாள் மாலையிலிருந்து கோயம்புத்தூரிலே சூரப்புலியின் வாழ்க்கை தொடங்கிற்று. சிறுவனுடைய உதவியைக்கொண்டு குருடன் வீதிவீதியாகச் சென்று பிச்சையெடுப்பான். சூரப்புலி கூடவே செல்லும். உச்சிவேளை வரையிலும் உணவுக்காக வீட்டுப் பக்கங்களிலே பிச்சையெடுப்பார்கள். மாலையிலே கடைவீதியிலே குருடன் காசு கேட்டுக் கையேந்தி நிற்பான். ஆனால் மாலை ஐந்தரை மணியானவுடன் தடிப்பையனுக்கு அன்றைய வரும்படியில் ஐம்பது காசு கொடுத்துவிடவேண்டும். கூடையிலே பலகாரம் விற்கும் கிழவியிடத்திலே காரவடை, சுண்டல், முறுக்கு வாங்கித் தின்பதற்கும் சினிமாவுக்குப் போகவும் இந்தப் பணம் அவனுக்கு. ஒரு நாள் கொடுக்கத் தவறினாலும் பையன் இடக்குச் செய்ய ஆரம்பித்து

விடுவான். மறுநாள் காலையிலே சோறு வாங்கச் செல்வதற்கு அவன் குருடனை அழைத்துச் செல்ல மறுப்பான். குருடன் கெஞ்சிக் கொஞ்சிப் பேசி அவனைச் சமாதானப்படுத்தவேண்டும். அவனை விட்டால் குருடனுக்கு வேறு வழி? மற்றொரு பையனைத் தேடிப்பிடிக்க அவனால் முடியாது. இந்தப் பையனே தானாக வந்து சேர்ந்தவன்.

தடிப்பையன் சினிமாவுக்குப் போவதில் ஒரு நாள் தவற மாட்டான். அங்குப் போகவே ஒரு தனி உடுப்பு அவனுக்குண்டு. குருடன் கொடுக்கிற எட்டணாவுக்கு மேலாக இவனே குருடன் கையிலிருந்து ஏமாற்றி எடுத்துக்கொள்கிற பணமும் உண்டு. பிச்சை போடுகிறவர்களுக்குச் சில்லறை மாற்ற வேண்டுமானால் குருடன் கையிலிருக்கிற காசை அந்தப் பையன்தான் எடுத்துக்கொடுப்பான். சில்லறை கொடுக்கும் பாவனையில் சில காசுகளையும் தட்டிக்கொள்வான்.

இவ்வாறு, குருடனுடைய பிச்சையால் பிழைத்தாலும் அவன் செய்கின்ற குறும்புகளுக்கும் பேசுகின்ற விதண்டாவாதப் பேச்சுகளுக்கும் அளவே இராது. சினிமாவில் பார்த்துவந்த பல மோசடி வித்தைகளையும் அவன் குருடனிடத்தில் காட்டுவான். அவற்றையெல்லாம் குருடன் பொறுமையோடு சகித்து வந்தான்.

தினமும் பையன் சினிமாவுக்குப் போவதால் குருடன் அவன் இரவு 10 அல்லது 11 மணிக்குத் திரும்பும் வரையில் கடைவீதியிலே ஒரு மூலையில் குந்திக்கிடப்பான். பையன் திரும்பிய பிறகுதான் அவன் தங்குமிடமாகிய பாழடைந்த சத்திரத்திற்குச் செல்லமுடியும். அதுவரையிலும் குருடன் பசியோடு கிடப்பான். சத்திரத்திற்குப் போனபிறகுதான் காலையில் பிச்சையெடுத்துவந்த உணவில் மீதியிருப்பதை அவன் உண்பான்; சூரப்புலிக்கும் போடுவான். தடிப்பையன் மாலையிலேயே வயிறு புடைக்கச் சுண்டலும், வடையும் தின்றிருப்பதால் அவன் இரவில் சாப்பிடமாட்டான். மேலும், பழைய சோறு அவனுக்குப் பிடிக்காது. பல இரவுகளில் சாயா குடிக்கவேண்டுமென்று மேலும் கொஞ்சம் காசைப் பிடுங்கிக்கொண்டு போவான். பிறகு, காலை நேரம் வரையில் அவனைக் காணமுடியாது. குருடனுக்குச் சூரப்புலிதான் துணையாகப் பக்கத்திலிருக்கும். குருடன் சூரப்புலியை அன்போடு அணைத்துக்கொள்வான் "நீ வாயில்லாச் சீவன்; நான் கண்ணில்லாச் சீவன். உனக்கு நான் துணை, எனக்கு நீ துணை" என்று பரிவோடு அதனிடம் பேசுவான். அவன் காட்டும் அன்பிலே சூரப்புலி பெரிதும் மகிழ்ச்சியடைந்தது.

இவ்வாறு ஒரு மாதம் சென்றது. தடிப்பையனுடைய குறும்புகள் அதிகமாகிக்கொண்டே இருந்தன. குருடனை அவன் அலட்சியமாகத் தன் விருப்பம்போல ஆட்டிவைப்பதைக் கண்டு சூரப்புலி உள்ளுக்குள்ளே கோபமடைந்தது. சில சமயங்களிலே அது பையனைப் பார்த்து உறுமும்; கோபத்தோடு அவனைப் பார்க்கும். ஆனால் அவன் இதைப்பற்றிக் கவலைப்படவில்லை.

ஒருநாள் குருடனுக்குக் காய்ச்சல் கண்டது. அவனால் எழுந்திருக்கவே முடியவில்லை. காலையில் எப்படியோ சிரமப்பட்டுக் காய்ச்சலோடே சென்று சோறு வாங்கி வந்தான். ஆனால் அதை அவன் தொடவேயில்லை. காய்ச்சலால் அவன் மயங்கிப் படுத்திருந்தான். தடிப்பையன்தான் சோற்றைத் தின்றான். அன்று புதிதாக ஒரு தமிழ்ச் சினிமாப்படம் வந்திருந்தது. முதல் நாளிலேயே அதைப் பார்க்க வேண்டுமென்று அவன் தீர்மானித்துவிட்டான். அதனால் அன்று பகல் 2 மணிக்கே குருடனைக் கடைவீதிக்குப் புறப்படும்படி வற்புறுத்தினான். "என்னால் எழுந்திருக்கவே முடியவில்லை" என்று குருடன் மெதுவாகச் சொன்னான்.

"நீ வராவிட்டால் மருந்துக்குக் காசு வேண்டாமா? வா போகலாம்" என்றான் பையன்.

"இன்றைக்கு மருந்தே வேண்டாம். நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்" என்று கவலையோடு சொன்னான் குருடன்.

"நாளைக்கா? நாளைக்கு உனக்கு யமன்தான் கூடவருவான். நான் வரமாட்டேன். உன்னுடைய தொல்லையே எனக்கு வேண்டாம்" என்று சீறினான் தடியன்.

குருடனுக்கு வேறு வழியில்லை. தட்டுத் தடுமாறி எழுந்து பையன் பின்னாலேயே கடைவீதியை நோக்கி நடந்தான். குருடன் கையில் ஐம்பதுகாசு சேர்ந்தவுடனே பையன் அதை எடுத்துக் கொண்டு வேகமாகப் புறப்பட்டான். "மருந்து வாங்கி வரவா போகிறாய்?" என்று குருடன் ஆயாசத்தோடு கேட்டான். பதில் கூறுவதற்குப் பையன் அங்கில்லை. சினிமாவுக்கு நேரமாகிவிட்டது. புதிய படம் ஆரம்பிக்கும் முதல் நாளாகையால் கூட்டம் அதிகமாக இருக்கும். அதனால், விழுந்தடித்துக்கொண்டு முன்னால் போய் டிக்கட் வாங்க வேண்டும். அதனால், அவன் ஓடிப்போய்விட்டான். பதில் ஒன்றும் கிடைக்காததால் ஏமாற்றமடைந்த குருடன் சோர்வோடு நிலத்தில் சாய்ந்தான். வயது முதிர்ந்த அவன் தோற்றம்

கன்னம் ஒடுங்கி வயிறொட்டிப் பார்ப்பதற்குப் பரிதாபகரமாக இருந்தது. நிலைமையை உணர்ந்துகொண்ட சூரப்புலி அவனருகிலே வந்து அன்போடு அவன் முகத்தை நக்கிற்று. அவன் உடம்பு காய்ச்சலால் கொதித்துக்கொண்டிருந்தது. "அம்மா அப்பா" என்று அனர்த்திக் கொண்டே குருடன் படுத்திருந்தான்.

பொழுது விழுந்து மின்சார விளக்குகள் கோயம்புத்தூர்க் கடை வீதியிலே விதவிதமாகப் பிரகாசிக்கத் தொடங்கின. திடீரென்று மேல்காற்று வீசத் தொடங்கிற்று. வானத்திலே கருமேகங்கள் திரள் திரளாக வந்து கவிந்தன. சுற்றிலும் மின்னல் மின்னிற்று; இடி இடித்தது. பெருமழையும் வந்து சடசடவென்று பொழியலாயிற்று. குருடன் மழையில் நனைத்து நடுங்கினான். "அடே பையா, எங்கே போய்விட்டாய்? வந்து என்னைச் சத்திரத் திற்குக் கூட்டிப்போடா" என்று இரக்கத்தோடு கூவினான். சினிமாக் கொட்டகையில் மற்ற பையன்களோடு சேர்ந்துகொண்டு சீழ்க்கை அடித்தும், ஆடியும் பாடியும் ஆர்ப்பாட்டம் செய்யும் தடியனுக்கு அவன் குரல் கேட்கவா போகிறது?

சூரப்புலி குருடனைச் சுற்றிச்சுற்றி வந்தது. பரபரப்பாக அங்குமிங்கும் ஓடிப் பார்த்தது. கோபத்தோடு சீறிக்கொண்டு தடியன் போன திசையைப் பார்த்தது. பிறகு அது வேகமாகக் குருடனிடத்திலே வந்து அவனை வழி நடத்திக் கூட்டி வருவதற்காக உபயோகப்படுத்தும் மூங்கில் தடியை வாயால் கவ்வி எடுத்தது. அதன் ஒரு முனையைக் குருடன் கையில் வைத்து அழுத்திற்று. குருடன் அதைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். மற்றொரு முனையை அது தன் வாயில் கவ்விக்கொண்டது. குருடன் சூரப்புலி யையும் மூங்கில் தடியையும் கையால் தடவிப் பார்த்தான். சூரப்புலி வாலைக் குழைத்துக்கொண்டும், முறுமுறுத்துக்கொண்டும் தான் புறப்படுவதற்குத் தயாராக இருப்பதாகக் காண்பிக்க முயன்றது. குருடன் அதன் கருத்தை உணர்ந்துகொண்டான். பிறகு தள்ளாடி மெதுவாக எழுந்து நடக்கத் தயாரானான். மூங்கில் தடியை வாயில் கவ்விக்கொண்டே சூரப்புலி சத்திரத்தை நோக்கி மெதுவாக நடக்கத் தொடங்கியது. மழையிலேயே நடந்து குருடன் சத்திரத்தை அடைந்தான். குருடன் அங்குச் சென்று படுத்ததும் சூரப்புலியை அன்போடு கட்டிப்பிடித்து அதன் உச்சியிலே முத்தம் கொடுத்தான். சூரப்புலி அவனுடைய அன்பை அறிந்து குதூகலத்தோடு பலவாறு சத்தமிட்டது. தடியன் இரவு முழுவதும் அங்கு வரவில்லை.



மறுநாள் காலையில் குருடனைச் சூரப்புலி எங்கோ அழைத்துச் செல்லத் தயாராயிற்று. மூங்கில் தடியைக் கவ்வி எடுத்துக் குருடன் கையில் வைத்தது. குருடன் அதன் எண்ணத்தை அறிந்துகொண்டான். மூங்கில் தடியின் மற்ற நுனியைக் கவ்விக்கொண்டு நடப்பதற்குச் சூரப்புலிக்குச் சிரமமாக இருக்குமென்று அவனுக்குத் தோன்றியது. அதனால் அவன் ஒரு புதிய ஏற்பாட்டைச் செய்தான். பழங்கந்தையாகக் கிடக்கும் அவனுடைய மேல் துண்டை எடுத்து, அதன் ஒரு நுனியை சூரப்புலியின் கழுத்திலே சுற்றிக் கட்டினான். மற்றொரு நுனியைத் தனது இடக்கரத்திலே சுற்றிப் பிடித்துக்கொண்டான். வலக்கரத்திலே மூங்கில் தடியை ஊன்றிக்கொண்டு நடக்கத் தயாரானான்.

இந்த ஏற்பாடு சூரப்புலிக்கு மிகவும் வசதியாக இருந்தது. அது குருடனுக்கு நல்ல பாதையை நடப்பதற்கு விட்டு, அவன் கைக்கு எட்டிய தூரத்தில் அருகிலேயே நடந்தது. வீதிகளைக் கடந்து போகும்போதும் வேறு வீதிகளில் திரும்பும் போதும் ஜாக்கிரதையாகச் சென்றது. அது எங்கு அழைத்துப் போகிறதென்று குருடனுக்குத் தெரியாது. ஆனால், அதன் விருப்பப்படியே அதன் பின்னால் செல்லத் தீர்மானித்து அவன் நடந்தான்.

சூரப்புலி அவனைக் கோயம்புத்தூர் நகராட்சிக் கழகத்தின் இலவச மருத்துவசாலைக்கு அழைத்துச் சென்றது. முன்னால் ஒரு

தடவை தடியன் அவனை அங்கு அழைத்துச் சென்றிருந்த போது சூரப்புலி கூடவே சென்றிருந்தது. அந்தத் தடவை குருடனுடைய முழங்காலில் பெரிய காயம் ஏற்பட்டிருந்தது. தடியன் குறும்புக்காகக் குருடனை, சாலையில் குழிகள் நிறைந்த இடத்தின் வழியாக அழைத்துச் சென்றான். குருடன் சிறு குழிகளில் காலை வைத்துத் தடுமாறுவதைப் பார்ப்பதிலே அவனுக்கு ஒரு மகிழ்ச்சி. பல தடவை குருடன் கால் இடறித் தடுமாறினான். அதைக் கண்டு சிறுவன் சத்தம் போடாமல் பல்லைக் காட்டி நகைத்துக்கொண்டே போனான். குருடன் வேறோர் ஆழமான குழியில் காலை வைக்கவே கையில் ஊன்றியிருந்த கோலையும் மீறி அவன் கீழே விழுந்துவிட்டான். தரையிலே முழங்கால் வேகமாக மோதவே பெரிய காயம் ஏற்பட்டது. "ஏண்டா என்னை இப்படி வதைக்கிறாய் ?" என்று கிழவன் தன் காலைப் பிடித்துக்கொண்டே கதறினான். அந்தக் காயத்திற்கு மருந்து போட்டுக் கட்டுவதற்காகத் தடியன் மருத்துவச்சாலைக்கு அழைத்துச் சென்றான். இப்பொழுது காய்ச்சலுக்கு மருந்து வாங்க, சூரப்புலி அழைத்துச் சென்றது. ஆனால் அது மருத்துவசாலை என்று குருடனுக்கு எப்படித் தெரியும்? சூரப்புலி அங்கேயே நின்றதால் அந்த இடத்தைப் பற்றி விசாரித்துத் தெரிந்துகொள்ளக் குருடன் முயன்றான் பக்கத்திலே சிலர் பேசிக்கொண்டே சென்றார்கள். "ஐயா இது என்ன இடம் ?" என்று குருடன் கேட்டான். அவன் நிலைமையை உணர்ந்த ஒருவர், "இது ஆஸ்பத்திரி, என்ன வேண்டும் ?" என்றார். 'ஐயா புண்ணியவானே, எனக்குக் காய்ச்சல், மருந்துக்காக வந்தேன்" என்றான் குருடன். அவர் உதவியால் மருந்து கிடைத்தது. குருடன் மருந்தைக் குடித்துவிட்டு மீண்டும் சத்திரத்தை அடைந்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம் தடியன் அங்கே வந்தான். ஆனால், சூரப்புலி அவனைக் குருடன் பக்கத்தில் வர அனுமதிக்கவில்லை. அது அவன் மேலே சீறிப் பாய்ந்து விரட்டியது. என்ன செய்தும் தடியன் மறுபடியும் குருடனுக்குப் பக்கத்தில் வர முடியவேயில்லை.

அன்று முதல் குருடனுக்கு வழிகாட்டியாகச் சூரப்புலி அமைந்தது. பிச்சை வாங்கத் தடியன் அழைத்துப்போன இடங்களெல்லாம் அதற்குத் தெரியும். மாலையில் கடைத்தெருவிற்குப் போய் நிற்கவேண்டிய இடங்களும் தெரியும். அங்கெல்லாம் சூரப்புலி குருடனை அழைத்துச் சென்றது. நாய் வழிகாட்டி வருவதைக் கண்ட மக்கள் அதிகமான பரிவு காட்டினார்கள். வேடிக்கையாக நினைத்துக் காசு தந்தவர்களும் உண்டு. குருடன் வாழ்விலே ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. அவன் சூரப்புலிக்கு ஓர் அழகான

தோல்பட்டை வாங்கிக் கழுத்திலணிந்தான். அந்தக் கழுத்துப் பட்டையில் மாட்டிய ஒரு நீண்ட தோல் நாடாவை அவன் பிடித்துக் கொள்ளுவான். இவ்வாறு அவன் பிச்சை எடுக்க வருவான்.

ஆறு மாதங்கள் ஓடி மறைந்துவிட்டன, குருடன் தன் வாழ்விலே இன்பத்தைக் கண்டான். சத்திரத்தைவிட்டு அவன் போத்தனூர்ச் சாலையிலே வாளாங்குளத்திற்கு அருகிலிருந்த ஒரு பழமையான இடிந்த கோயிலுக்குத் தன் இருப்பிடத்தை மாற்றிக் கொண்டான். அங்கே வேறு யாரும் இல்லை. கையில் தினமும் நிறையப் பணம் மீதியாயிற்று. அந்தப் பணத்தை ஒரு பையிலே போட்டுக் கோயிலின் ஒரு மூலையிலே இருளடைந்த பகுதியிலே குழி தோண்டிப் புதைத்து வைத்தான். தினமும் அந்தப் பணமூட்டை பருத்துக்கொண்டே வந்தது. பணம் சேரச் சேரக் குருடன் அதைக் கையால் தொட்டுத் தொட்டுப் பார்த்து இன்பமடைந்தான். அப்படிப் பணம் சேரக் காரணமாயிருந்த சூரப்புலியின்மீது அதிக அன்பு காட்டினன். அதை "மகனே" என்றுதான் அவன் கூப்பிடுவான். மகன் இருந்தால்கூட அவன் அவ்வளவு அன்பு காட்டியிருக்க மாட்டான். கோயில் மண்டபத்தில் படுத்து இரவிலே அவன் சூரப் புலியைக் கட்டியணைத்துக்கொண்டு கொஞ்சுவான். தினமும் அதைக் குளிப்பாட்டுவான். எலும்புகளும், மாமிச உணவுகளுமாக அதற்கு வாங்கி வைப்பான். சூரப்புலியே அவனைக் கடைகளுக்கெல்லாம் அழைத்துச் செல்லும். தாயோடு விளையாடும் குட்டியைப் போலச் சூரப்புலி குருடனோடு விளையாடும். மகனே என்று கூப்பிட்டால் எங்கிருந்தாலும் அது வேகமாக அவனிடத்திலே ஓடி அவன் மேலே பிரியத்தோடு உராய்ந்துகொண்டிருக்கும். குருடனோடு ஒரே படுக்கையிற் படுத்துத் தூங்கும். அந்தக் கோயிலில் வேறு யாரும் இல்லாததால் அது அவர்களுக்குத் தனி வீடாயிற்று.

சில இரவுகளில் குருடன் கோயில் மண்டபத்தில் படுத்து உறங்கிய பிறகு சூரப்புலி வெளியே வந்து வாளாங்குளத்துக் கரையிலே உலாவும். கானகத்திலே திரிந்துகொண்டிருந்த அதற்கு இவ்வாறு தனித்துத் திரிய வேண்டும் என்ற ஆசை அடிக்கடி உண்டாகும். அப்பொழுதெல்லாம் குளக்கரைக்கு வரும். இரவு வேளைகளில் அங்கு யாரும் இருக்கமாட்டார்கள் பக்கத்திலுள்ள வயல் களிலிருந்து நரிகள் ஊளையிடும் சத்தமும், ஏரியிலுள்ள தவளைகளின் குரலுந்தான் அங்குக் கேட்கும். அந்தப் பரந்த ஏரியின் கரையிலே ஒருவிதமான ஏகாந்தமிருந்தது.

கானகத்திலே மரக்கூட்டங்களுக்கு இடையேயிருந்த ஏகாந்து ஒருவகை. பரந்த நீர்ப்பரப்பின் அமைதியிலே காணப்படும் ஏகாந்து ஒருவகை. இதையும் சூரப்புலி ஓரளவிற்கு விரும்பிற்று. அதனு அடிக்கடி இவ்வாறு வந்து ஏரிக்கரையிலும், வயல் வரப்புகளின்மீது உலாவும். வயல் எலிகளையும் நண்டுகளையும் பிடித்துத் தின்னும்.

இவ்வாறு சூரப்புலி ஏரிக்கரையிலே திரிந்துகொண்டிருந்த ஒரு நாள் இரவு சமயம் பார்த்து நான்கு பேர் கோயிலுக்குள்ளே நுழைந் தார்கள். அங்கே மண்டபத்தில் படுத்துறங்கிக்கொண்டிருந்த குருடனை எழுப்பி, அவன் வைத்திருக்கும் பணத்தையெல்லாம் கொடுத்துவிடும்படி மிரட்டினார்கள். குருடன் தன்னிடம் பணம் இல்லை என்று சொன்னான். "நானோ பிச்சைக்காரன். என்னிடம் பணம் ஏது?" என்று அவன் கூறினான். ஆனால் அவர்கள் அவனை விடுவதா இல்லை. பணம் இருப்பதை அறிந்தே அவர்கள் வந்திருந்தார்கள்.

"உயிர் பிழைக்க வேண்டுமானால் பணமிருக்கிற இடத்தை சொல்லிவிடு" என்று ஒருவன் உறுமினான். குருடன் தன்னிடம் ஒன்றுமில்லையென்று வாதாடினான். அதே சமயத்தில் சூரப்புலியைக் கூப்பிடுவதற்காக 'மகனே' என்று சத்தம் போட்டான்.

"நாயையா கூப்பிடுகிறாய்?" என்று ஒருவன் சீறினான்.

திருடர்களுக்குக் கோபம் வந்துவிட்டது. ஒருவன் தான் கொண்டுவந்திருந்த குறுந்தடியால் குருடனுடைய மண்டையில் ஓங்கியடித்தான். குருடன் 'மகனே' என்று மறுபடியும் கூவிக் கொண்டு தரையில் விழுந்தான். அடி பலமாகப் பட்டுவிட்டதால் மண்டையிலிருந்து இரத்தம் பொங்கி வழிந்தது. குருடன் உணர்வு கலங்கிற்று. அவன் அப்படியே கிடந்து உயிர் துறந்தான்.

இதற்குள்ளே சூரப்புலி பாய்ந்தோடி வந்துவிட்டது. தடியை ஓங்கும்போதே அப்படி ஓங்கியவன் யாரென்று வரும் வேகத்திலேயே கண்டுகொண்டது. மண்டபத்தில் பாய்ந்து நுழைந்தது. நுழைந்ததும் அந்தக் கொலைகாரன்மீது ஆவேசத்தோடு பாய்ந்தது. அவன் குரல்வளையைக் கடித்து ஒரு கணத்திலே அவன் உயிரை வாங்கிவிட்டு மற்றவர்களின் மேல் பாயத் தொடங்கியது. அதனுடைய ஆவேசத்தைக் கண்டு மற்ற மூன்று பேரும் போத்தனூர்ச்சாலையிலே ஓட்டம் பிடித்தார்கள். ஒருவனை அது கோயிலுக்குள்ளேயே மறித்து அவனுடைய மார்பில் பாய்ந்து கடித்தது. அவன் கீழே விழுந்தான். அவனுடைய தொடையைப் பிடித்துச் சதையைப் பிய்த்தெடுத்தது.



அவன் அலறித் துடித்துக்கொண்டு ஏதும் செய்ய முடியாமல் கிடந்தான்.

இதற்குள் மற்றொருவன் போத்தனூர்ச்சாலை வழியாகக் கொஞ்ச தூரம் ஓடிப் பக்கத்தில் குளக்கரையிலிருந்த ஒரு பெரிய அரச மரத்தடியில் ஒளிந்துகொண்டான். வேறொருவன் போத்தனூரை நோக்கிச் சாலை வழியாகவே ஓடினான். அப்படி ஓடுகிறவனைச் சூரப் புலி பார்த்துவிட்டது. உடனே அவன்மேல் பாயப் புறப்பட்டது. அந்தச் சமயத்தில் அரச மரத்தடியில் ஒளிந்திருந்தவன், தன் கையிலிருந்த குத்தீட்டியை அதன்மீது குறி பார்த்து வீசினான். அந்த ஈட்டி சூரப்புலியின் வயிற்றிலே பாய்ந்துவிட்டது. சூரப்புலி ஈட்டியை வாயால் கவ்வி எடுக்க முயன்றது. ஆனால், அதற்குள் அதற்கு மயக்கமேற்பட்டது; தலை சுழன்றது. அப்படியே மூச்சுத் திணறி நடுச்சாலையில் தளர்ந்து விழுந்தது. வயிற்றிலிருந்து ரத்தம் குபுகுபுவென்று பொங்கிச் சாலையில் வழியலாயிற்று.

சூரப்புலி தன் உணர்வை இழக்கும் தறுவாயில் திடீரென்று ஒரு மோட்டார்கார் சாலையின் வழியாக வேகமாக வந்து அதற்குச் சற்று முன்னால் நின்றது. கானகத்திலே குகைக்கு வந்து உதவி செய்த அதே துறவி காரிலிருந்து அவசரம் அவசரமாகக் கீழே இறங்கிச் சூரப்புலியின் அருகில் ஓடிவந்தார். அதன் வயிற்றுப்

பகுதியிலே பாய்ந்திருந்த ஈட்டியைப் பிடுங்கி எறிந்தார். காயத்தில் வேகமாகப் பொங்கும் ரத்தத்தை மேலாடையைக்கொண்டு தடுத்தார். ஈட்டிக் காயத்தின்மேல் மேலாடையை அழுத்திப் பிடித்துக்கொண்டு வேறொருவருடைய உதவியையும் எதிர்பாராமல் சூரப்புலியைத் தூக்கினார். இதற்குள் காரை அருகே கொண்டுவந்து நிறுத்திவிட்டு மோட்டார் ஓட்டியும் உதவிக்கு வந்தான். சூரப்புலியைக் காரில் எடுத்து வைத்ததும் காரை வேகமாக ஓட்டும்படி துறவி பணித்தார்.

கோயம்புத்தூரிலே செல்வர்கள் வாழும் ஒரு நாகரிகமான பகுதியில் உள்ள ஒரு மூன்றடுக்கு மாடி வீட்டிற்கு வந்து கார் நின்றது. சூரப்புலியின் சிகிச்சைக்கு வேண்டிய ஏற்பாடுகளைத் துறவி உடனே கவனித்தார். அந்த வீட்டின் சொந்தக்காரர் பயபக்தியோடு துறவியின் ஏவுதலைச் செய்வதில் முனைந்தார். விலங்குகளுக்குச் சிகிச்சை செய்யும் சிறந்த வைத்தியர் ஒருவர் கொஞ்ச நேரத்திற் கெல்லாம் அங்கு வந்து சேர்ந்தார்; காயத்தைப் பரிசோதித்தார். நல்ல வேளையாக உணவுப் பையிலோ குடலிலோ காயம் ஏற்பட வில்லை. வயிற்றின் மேல் தோலும் தசைநார்களும் இரண்டங்குல அகலத்திற்குமேல் கிழிந்திருந்தன. விலா எலும்புகளில் கடைசி எலும்பை மூடியிருந்த சவ்வுப் பகுதியிலும் ஈட்டி பாய்ந்து மேலே பொத்துக்கொண்டு வந்திருந்தது. வைத்தியர் கிழிந்த பகுதிகளையெல் லாம் தைத்து மருந்து போட்டுக் கட்டினார். துறவி பக்கத்திலேயே இருந்து அக்கறையோடு கவனித்துக்கொண்டிருந்தார். "எப்படி இதற்குக் காயம் ஏற்பட்டது?" என்று வைத்தியர் காயத்தைக் கட்டிவிட்டுக் கேட்டார்.

"எப்படி ஏற்பட்டதோ தெரியாது நான் பழனிக்குப் போய் விட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தேன். வாளாங்குளத்திற்கு அருகிலே சாலையின் நடுப்பகுதியிலே இது விழுந்து துடித்துக் கொண்டிருந்தது. வயிற்றிலே ஈட்டியொன்று பாய்ந்திருந்தது. அவ்வளவுதான் எனக்குத் தெரியும்" என்றார் துறவி.

வைத்தியர் சிகிச்சை செய்துகொண்டிருக்கும் போதே துறவி போலீஸுக்குத் தகவல் கொடுத்தார். இரவிலேயே போலீஸார் அவர் குறிப்பிட்ட பகுதிக்குச் சென்று சுற்றிலும் துருவிப் பார்த்தார் கள். பாழடைந்த கோயில் மண்டபத்திலே குருட்டுப் பிச்சைக் காரன் தலையிலே அடிபட்டு இறந்து கிடப்பதையும், நாயால் கடியுண்டு மற்றொருவன் இறந்து கிடப்பதையும் அவர்கள் கண்டார்கள்.

மறுநாள் கோயம்புத்தூர் நகரம் முழுவதும் குருட்டுப் பிச்சைக்காரன் கொலையுண்டதைப்பற்றியே பேச்சாக இருந்தது.

அவனைக் கொலை செய்வதற்கு என்ன காரணம் இருந்திருக்க முடியு மென்று எல்லோரும் ஆச்சரியமும் திகைப்பும் அடைந்தார்கள். அவனிடம் பணம் இருக்கிற விஷயமும், அதற்கு ஆசைப்பட்டுச் சில பேர் வந்ததும் அவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது ? இதில் ஏதோ மர்மம் இருக்க வேண்டுமென்று மட்டும் மக்கள் பேசிக் கொண்டார்கள். சூரப்புலியின் விசுவாசத்தைப்பற்றியும், அது கொலை செய்தவனைத் தாக்கிக் கொன்றதையும்பற்றிப் புகழாதவர் களே கிடையாது. இந்தக் கொலையில் இன்னும் சிலர் சம்பந்தப் பட்டிருப்பார்கள் என்று எல்லோருக்கும் நிச்சயமாகத் தெரிந்தது. ஒருவனாவது கொலையுண்டவனோடு நிச்சயமாக வந்திருக்க வேண்டும். கொலையுண்டவனே சூரப்புலியை ஈட்டியால் குத்தியிருந்தால் அவனைச் சூரப்புலி கொன்றிருக்க முடியாது. வேறு ஒருவன்தான் அதைக் குத்திவிட்டுத் தப்பி ஓடியிருக்க வேண்டும் என்பதும் வெளிப்படை யாக எல்லோருக்கும் தெரிந்தது. சூரப்புலிக்கு உதவி செய்ய எதிர் பாராது தோன்றிய துறவியைப்பற்றியும் மக்கள் பேசிக்கொண்டார் கள். அவருடைய ஆழ்ந்த பக்தியைப்பற்றியும் யோக சாதனை களைப்பற்றியும் முன்பே பல பேருக்குத் தெரியும். அவரை ஒரு மகான் என்று பலர் போற்றித் தொழுவதுண்டு.

அன்று காலையிலிருந்து மக்கள் கூட்டங்கூட்டமாக அந்தப் பாழடைந்த கோயிலுக்கு வந்தார்கள். மேற்கொண்டு துப்புக் கண்டு பிடிப்பதற்காக அந்தப் பகுதியிலே மற்றவர்களின் காலடி படக் கூடாதென்று போலீஸார் ஏற்பாடு செய்திருந்தார்கள். யாரையும் அருகே விடாமல் தடுக்கப் பலர் அந்த இடத்தைச் சுற்றிலும் காவல் புரிந்தார்கள். கொலைக் குற்றத்தில் சம்பந்தப்பட்ட மற்றவர்களையும் கண்டுபிடிக்கப் போலீஸார் தீவிரமான நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

மூன்றாவது நாள் வரையிலும் போலீசாருடைய முயற்சி வெற்றி பெறவில்லை. இரண்டு நாட்களாக வேதனையோடு பாலோ கஞ்சியோ கூடக் குடிக்காமல் படுத்துக்கிடந்த சூரப்புலி மூன்றாம் நாளன்று மெதுவாக எழுந்து நடக்கலாயிற்று. அப்படி எழுந்து நடமாடுவதை வைத்தியர் விரும்பாவிட்டாலும் சூரப்புலியை அவரால் தடுக்க முடிய வில்லை. அதனுடைய உள்ளக் கருத்தையும் வேதனையையும் நுட்ப மாக அறிந்துகொண்ட துறவி, அதை அதன் விருப்பம் போல விட்டு விடும்படி சொல்லிவிட்டார். எழுந்து நடப்பதற்குத் தயாராக இருந்த சூரப்புலியின் முன்னால் ஒரு வட்டில் நிறையப் பாலை வைத்தார்.

சூரப்புலி பாலை உற்று நோக்கிற்று. அந்தப் பாலை வட்டிலில் ஊற்றிய துறவியையும் கூர்ந்து கவனித்தது. நீலகிரி மலைச்சாரலிலே குகைக்குள்ளே பின்னங்கால்கள் இரண்டும் ஒடிந்து தவித்துக்கொண்டிருந்த காலத்திலே தனக்கு உதவி செய்ய வந்த அதே துறவிதான் இவர் என்று அது முன்பே தெரிந்துகொண்டிருந்தது. அப்படித் தெரிந்ததால் வெளிப்படையாகச் சொல்ல முடியாத ஒரு மகிழ்ச்சியையும் நன்றியையும் கொண்டிருந்தது. ஆனால், அந்த உணர்ச்சிகள் மேலோங்கி நிற்க முடியாதவாறு அதன் உள்ளத்திலே குருட்டுப் பிச்சைக்காரனைப்பற்றிய எண்ணங்கள் குமுறிக்கொண்டிருந்தன. துறவிக்கு நன்றி தெரிவிக்கும் வகையிலே அவர் ஊற்றிய பாலைக் குடிக்க வேண்டும் என்று அது விரும்பியபோதிலும் அதனால் அப்படிக் குடிக்க முடியவில்லை. குருட்டுப் பிச்சைக்காரனுடைய நினைப்பு அதைத் தடுத்துவிட்டது. அவன் படுத்திருந்த மண்டபத்திற்கு உடனே போக வேண்டுமென்ற ஆர்வம் பசியையும் உடல் வேதனையையும் சோர்வையும் நன்றி உணர்ச்சியையும் மீறிக்கொண்டு மேல் எழுந்தது. சூரப்புலி மெதுவாக அந்த மாடி வீட்டை விட்டு வெளியே புறப்பட்டது.

அந்தப் பகுதியிலெல்லாம் சூரப்புலிக்கு நல்ல பழக்கம் உண்டு. சோறு பிச்சையெடுக்கக் குருடனோடு பல முறைகள் அங்கு வந்துள்ளது. ஆகவே, அங்கிருந்து வாளாங்குளத்திற்கு அருகிலுள்ள பாழடைந்த கோவிலுக்குப் போவதில் எவ்வித இடையூறும் அதற்குக் கிடையாது. ஈட்டிக் குத்தால் ஏற்பட்ட காயத்தினால் உண்டாகும் வலியைப் பொருட்படுத்தாமல் அது நடந்தது. துறவியும் விலங்கு வைத்தியரும் பின்தொடர்ந்தார்கள். துறவியின் ஏற்பாட்டின்படி அவர் வாளாங்குளத்தை அடைவதற்குள் போலீஸ் இன்ஸ்பெக்டரும் வேறு சில போலீஸ்காரர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். சூரப்புலி ஆவலோடு கோயில் மண்டபத்திற்குள் நுழைந்தது. சுற்றிச்சுற்றி முகர்ந்து முகர்ந்து பார்த்தது. குருடனுடைய மண்டையிலிருந்து வெளிப்பட்ட ரத்தம் தோய்ந்த பகுதியைக் கண்டதும் அது தலையை நிமிர்த்திக்கொண்டு ஓவென்று ஊளையிட்டு அழுதது. துறவி அதைக் கட்டி அணைத்துக்கொண்டு முகத்தின் மேலே தடவிக் கொடுத்தார். துறவியின் கண்களிலே என்றுமில்லாதவாறு கண்ணீர்த்துளிகள் முத்துக்களைப்போலப் பிதுங்கின. அந்தக் கண்ணீர் சூரப்புலிக்குப் பெரிய ஆறுதல் அளித்திருக்க வேண்டும். அது மறுபடியும் ஓவென்று நீண்ட சோகக்

குரலில் கூவிற்று. "இனிமேல் அவரை இந்த உலகத்திலே பார்க்க முடியாது. அவருக்குப் பதிலாக நானிருக்கிறேன், கவலைப்படாதே" என்று குழந்தைக்குச் சொல்வது போலத் துறவி பரிவோடு தம்மை மறந்து பேசினர். சூரப்புலியின் உள்ளத்திலே அவருடைய வார்த்தைகள் புதிய உணர்ச்சியை உண்டாக்கியிருக்க வேண்டுமென்று தோன்றிற்று. அது அந்த இடத்திலே குருடன் வழக்கமாகப் படுக்கின்ற பகுதிகளுக்குச் சென்று, கொஞ்ச நேரம் மௌனமாக அசைவின்றிப் படுத்திருந்தது. அதற்குக் கொடுக்கப் பால் கொண்டுவந்து வைக்கும்படியாக முன்னதாகவே துறவி ஏற்பாடு செய்திருந்தார். குத்தீட்டியால் குத்தப்பட்டு ரத்தம் வழிந்ததாலும் காயத்தின் வலியாலும் மூன்று நாள்களாக உணவருந்தாததாலும் அது மிகவும் சோர்ந்திருந்தது. அதைக் கருதியே பால் கொண்டுவரும்படி துறவி ஏற்பாடு செய்திருந்தார். ஆனால், அப்பொழுதும் சூரப்புலி பாலைத் தொடவில்லை. நன்றியறிதலோடு துறவியைப் பார்த்துக்கொண்டு ஒன்றிரண்டு முறை மெதுவாக வாலைக் குழைத்தது. பிறகு மெதுவாக எழுந்து, கோயிலைவிட்டு வெளியே வந்து, போத்தனூர்ச் சாலையிலே மோப்பம் பிடித்துக்கொண்டே சென்றது. போலீஸார் பத்திரமாக எடுத்து வைத்திருந்த ஈட்டியை அதன் முன்னால் போட்டார்கள். அதை அது பல தடவை நன்றாக முகர்ந்து பார்த்தது. பிறகு அந்த ஈட்டியை வீசியவன் மறைந்திருந்த மரத்தடியில் சென்று மோப்பம் பிடித்தது. மீண்டும் கோயிலுக்கு முன்பாக வந்து, அது முன்பு மார்பிலும் துடையிலும் கடித்த மனிதன் விழுந்துகிடந்த இடத்திலே மோப்பம் பிடித்தது. அங்கிருந்து சாலையோரமாகக் குளத்திற்குப் போடப்பட்டிருக்கும் உயரமான மண்கரையின் வழியாகக் குனியமுத்தூரை நோக்கி நடந்தது. துறவியும் வைத்தியரும் இன்ஸ்பெக்டரும் அதைப் பின் தொடர்ந்தார்கள். சூரப்புலி மோப்பம் பிடித்துக்கொண்டே தயங்காமல் சென்றது. சில இடங்களிலே அது குளத்திற்கு உள்ளேயிறங்கித் தண்ணீர் வற்றி வண்டல் படிந்திருக்கும் பகுதியின் வழியாக நடந்தது. அங்கு வந்ததும் இரண்டு பேர் நடந்து சென்றிருந்த காலடிச் சுவடுகளையும், ஏதோ ஒன்றை அவர்களுக்கு மத்தியில் இழுத்துக்கொண்டு போனதுபோல் தோன்றும் தரையையும் துறவியும் இன்ஸ்பெக்டரும் மற்றவர்களும் கண்டார்கள் யார் கண்ணிலும் படாமல் செல்வதற்காக அப்படிக் குளத்திற்குள் இறங்கி நடந்திருக்கிறார்கள் என்று தோன்றிற்று. ரத்தக்கறைகளும் ஒரு சில இடங்களில் காணப்பட்டன.

சூரப்புலி குனியமுத்தூருக்கு அருகிலுள்ள ஒரு காட்டுக் குடிசையை நோக்கிச் சென்றது. அந்தக் குடிசையின் கதவு பூட்டப் பட்டிருந்தது. அங்கே யாரும் கண்ணுக்குப் புலப்படவில்லை. சூரப்புலி கதவின் முன்னால் நின்று குரைத்தது. அதன் கருத்தை உணர்ந்த இன்ஸ்பெக்டர் பூட்டையுடைத்துத் திறக்குமாறு போலீஸாருக்கு உத்தரவிட்டார். போலீஸார் உடனே அவர் உத்தரவை நிறை வேற்றினார்கள். சூரப்புலி முன்னால் குடிசைக்குள் நுழைந்தது.

அங்கே இருளடைந்த ஒரு மூலையிலே ஒரு கட்டிலிலே ஒருவன் சுயநினைவு இல்லாமல் கிடந்தான். கோபத்தோடு சூரப்புலி அவனருகில் சென்றது. துறவி அதைத் தடுத்து நிறுத்திக்கொண் டார். கட்டிலில் கிடந்த மனிதனுடைய மார்பிலும் துடையிலும் சூரப்புலி கடித்த காயங்கள் தென்பட்டன. விலங்கு வைத்தியர் அவன் முகத்திலே தண்ணீரைத் தெளித்து, ஒருவாறு முதலுதவி செய்து அவனுக்குச் சுய நினைவு வருமாறு செய்தார். கண்களைத் திறந்து அவன் அச்சத்தோடு எல்லோரையும் பார்த்தான். சூரப்புலி யையும் போலீஸ்காரர்களையும் பார்த்தவுடன் அவனுக்கு விஷயம் விளங்கிவிட்டது. அதே சமயத்தில் அவனுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

"ஐயா! நான் எல்லாவற்றையும் சொல்லிவிடுகிறேன். அந்தப் பாவிகள் இரண்டு பேரும் நான் சாகட்டுமென்று என்னை இங்கே விட்டுவிட்டுப் போய்விட்டார்கள்," என்று கூவினான். அவன் தன்னை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய்விடும்படி அவனைத் தூக்கி வந்த மற்ற இருவரையும் கேட்டுக்கொண்டானும். ஆனால் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுசென்றால் விஷயம் வெளியாகிவிடுமென்று அவர்கள் அவனுடைய விருப்பத்தை நிறைவேற்ற மறுத்துவிட்டார்கள். அந்தக் காட்டுக் குடிசைக்குக் கொண்டுவந்து ஏதோ பச்சைத்தழைகளை இடித்து வைத்துக் கட்டினார்கள். குறித்த நேரத்தில் உணவுகூடச் சரியாக அவனுக்குக் கொடுக்கவில்லை. இரவு நேரத்தில் மட்டும் அங்கு வந்து அவனை ஓரளவு கவனித்தார்கள். அதனால் கடியுண்ட வனுக்கு அவர்கள் மேல் மிகுந்த கோபம். ஆகவே, அவன் விஷயத்தையெல்லாம் சொல்லிவிட்டான். மற்ற இருவர்களும் யாரென்றும் கூறிவிட்டான். போலீஸார் அவனை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்ல ஏற்பாடுசெய்தனர் மற்ற இருவரையும் சுலபமாகக் கைது செய்துகொண்டு வந்தார்கள்.

சூரப்புலியின் செயலை அறிந்து கோயம்புத்தூர் நகரம் முழுதும் அதையே புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தது. துறவி சூரப்புலியைக்

காரில் வைத்து மாடிவீட்டிற்குத் திரும்பக் கொண்டுவந்து சேர்த்தார். அங்கே வந்ததும் அன்போடு அதற்குப் பால் வைத்தார். இந்தத் தடவை அது வாலைக் குழைத்துக்கொண்டு நன்றியறிதலோடு பாலைக் குடித்தது.

பதினைந்து நாள்கள் சென்றன. சூரப்புலி அனேகமாகக் குணமடைந்துவிட்டது. அதனுடைய உடற்சோர்வும் பெரிய அளவிற்கு நீங்கிவிட்டது. இந்தப் பதினைந்து நாள்களும் அது தினமும் அந்தப் பாழடைந்த கோயிலுக்குச் செல்ல விரும்பியதை உணர்ந்த துறவி, அதைக் காரில் வைத்து அங்கு அழைத்துச் சென்று வந்தார். ஒரு தடவை அவ்வாறு அதை அழைத்துச் சென்றபோது, சூரப்புலி ஒரு மூலையிலே கால்களால் பறித்து, அங்குப் புதைத்து வைக்கப்பட்டிருந்த பணப்பையை வாயினால் கவ்வி எடுத்து வந்து, துறவியின் பாதங்களுக்கு அருகில் வைத்தது. இந்தப் பணப்பைதான் குருடனுடைய சாவுக்குக் காரணம் என்பதைத் துறவி அறிந்துகொண்டார். அதை வெறுப்போடு பார்த்தார். பிறகு அதை எடுத்துச்சென்று போலீஸாரிடம் ஒப்புவித்தார். சூரப்புலி அவருடைய செயலைக் கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தது.

சில நாள்களில் விசாரணை முடிந்தது. குருட்டுப் பிச்சைக்காரனைக் கொலை செய்தவனோடு சேர்ந்துகொண்டு திருட முயன்றதற்காக மூவருக்கும் சிறைத்தண்டனை கிடைத்தது. கொலை செய்தவனுக்குத் தண்டனை முன்பே சூரப்புலியால் கிடைத்துவிட்டதல்லவா? அதனால் மற்றவர்கள் சிறைத்தண்டனையோடு தப்பினார்கள், விசாரணைக்குப் பிறகு போலீஸார் பணப்பையைத் திருப்பித் துறவியிடம் கொடுத்தார்கள். கோயம்புத்தூரில் சுற்றிக்கொண்டிருந்த பிச்சைக்காரர்களையெல்லாம் வரவழைத்து, அவர்களுக்கு அந்தப் பணத்தைத் துறவி பகிர்ந்து வழங்கினார். சூரப்புலி ஆச்சரியத்தோடு அவரைப் பார்த்துக்கொண்டிருந்தது.

சூரப்புலிக்காகத் துறவி தமது பர்ணசாலைக்குப் போவதை இருபத்தைந்து நாள்கள் தள்ளிவைத்தார். சூரப்புலி முற்றிலும் குணமடைந்துவிட்டது. விசாரணையும் முடிந்துவிட்டது. அதனால் துறவி நீலகிரி மலைச்சாரலுக்குப் புறப்பட்டார். போவதற்கு முன்பு, கோயில் மண்டபத்திற்குச் சூரப்புலியை அழைத்துச்செல்ல மறக்கவில்லை. அங்குச் செல்லும் பொழுதெல்லாம் சூரப்புலி வருத்தத்தோடு ஊளையிட்டுக் கதறும். குருட்டுப் பிச்சைக்காரனுடைய அன்பை நினைந்து ஏங்கும். கடைசி முறையாக அது மண்டபத்திற்கு வந்த



பொழுது, இனிமேல் கோயம்புத்தூரையே விட்டுப் போகப் போகிறதைக் குறிப்பாக உணர்ந்துகொண்டிருந்தது. அதனுல் அன்று அதனுடைய ஏக்கம் மேலும் அதிகமாக இருந்தது. அன்று மாலை நீலகிரி மலைச்சாரலில் பர்ணசாலையைத் துறவி அடைந்த பொழுது அவர் அறிவித்திருந்தவாறு அவருடைய சிஷ்யர்க்ள் நான்கு பேரும் முன்னதாகவே வந்திருந்தார்கள். சூரப்புலி அங்கு வந்ததும் பர்ணசாலைக்குள் வேகமாகச் சென்று, அது மறைத்து வைத்திருந்த துறவியின் கைப்பையை எடுத்துக்கொண்டு வந்து அவர் முன்னுல் வைத்தது. அந்தப் பையைக் கண்டதும் துறவி தன்னைத் தேடிக்கொண்டு சூரப்புலி முன்பே அங்கு வந்திருந்ததையும், அருவியருகே சென்று அங்கு தாம் மறதியாக விட்டுச்சென்ற கைப் பையை எடுத்துவந்து பர்ணசாலையில் வைத்ததையும் ஊகித்து அறிந்துகொண்டார். அப்படி அறிந்ததும் அன்போடு சூரப்புலியைத் தட்டிக்கொடுத்தார். அது குதூகலத்தோடு பலவாறு சப்தமிட்டுக் கொண்டே அவரைச் சுற்றிச்சுற்றித் துள்ளிக் குதித்துக்கொண் டிருந்தது. மறுபடியும் கானகத்து ஏகாந்தத்திற்கு வந்ததையும் துறவியை எதிர்பாராதவிதமாகக் கண்டுகொண்டதையும் அது நினைத்து மிகுந்த மகிழ்ச்சி அடைந்தது. துறவியினுடைய பற்றற்ற அன்பிலே அது மெதுவாக வசப்படலாயிற்று. அவரிடத்திலே ஒரு தனிப்பட்ட சக்தி இருப்பதை அது விரைவில் உணர்ந்துகொண்டது.

சீடர்கள் தங்களுக்குள்ளே வகுத்துக்கொண்ட திட்டத்தின்படி ஆசிரமப் பணிகளைக் கவனித்தார்கள். குறிப்பிட்ட நேரங்களில் துறவி சீடர்களுக்குத் தத்துவங்களை விளக்குவார். பிறகு தனிமையில் அமர்ந்து உலகத்தையே மறந்து தியானம் செய்வார். சூரப்புலி அவருக்குப் பக்கத்திலே அமைதியோடு படுத்திருக்கும். இரவு நேரங்களிலே கானகத்திலே உலாவி வரும். இவ்வாறு மீண்டும் அதன் கானக வாழ்க்கை தொடங்கியது.

முன்னல் அதன் கானக வாழ்க்கையிலிருந்து இது பல வகைகளில் வேறுபட்டது. முன்பு குகையில் கள்ளச் சாராயம் காய்ச்சுவோரிடம் சேர்ந்து வாழ்ந்தது. அது ஒரு வகையான அனுபவம். அதை உண்மையான கானக வாழ்க்கையாகக் கொள்ள முடியாது. அந்தக் குகை காட்டிற்குள் இருந்ததைத் தவிரச் சூரப்புலிக்குக் காட்டோடு வேறு தொடர்பு அதிகமாக இல்லை. அந்த மனிதர்கள் பிடிபட்ட பின்புதான் அதற்கு உண்மையான காட்டு வாழ்க்கை தொடங்கிற்று. காட்டின் கொடுமையும், வாழ்க்கைப் போராட்டமும் அப்பொழுது அதற்குத் தெரிந்தது. எந்தக் கணத்திலும் ஆபத்து நேரக்கூடிய வாழ்க்கையிலே எச்சரிக்கையோடும் தைரியத்தோடும் திறமையோடும் இருக்க அது பழகிக்கொண்டது. ஒவ்வொரு நாளும் தனது உணவுக்காக மற்ற விலங்குகளுடன் போராடவும் அது கற்றுக்கொண்டது. இப்பொழுது தொடங்குகின்ற கானக வாழ்க்கை அந்த வாழ்க்கையிலிருந்து மாறுபட்டது. உணவுக்காக அது அலைய வேண்டியதில்லை; போராட வேண்டியதில்லை. கானகத்திற்குள் நுழையாமல் ஆசிரமத்திற்குள்ளேயே வேண்டுமானலும் இருந்து அது வாழலாம். துறவியோ அவருடைய சீடர்களோ அதற்கு எவ்விதமான பணியும் இடவில்லை. ஆனல் அது தானகவே பல பணிகளில் கலந்துகொண்டது. விறகு சேகரிக்கச் சீடர்கள் போகும்போது அது கூடவே செல்லும். ஆசிரமத்திலே பூஜை நடக்கும்போது சூரப்புலி கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கும். இரவு நேரங்களிலே துறவி சில சமயங்களில் நீண்ட நேரம் தம்மை மறந்து மரத்தடியிலும், வேறு இடங்களிலும் தியானத்தில் அமர்ந்திருப்பார். அப்பொழுதெல்லாம் சூரப்புலி எச்சரிக்கையோடு அவர் அருகில் படுத்துக்கொண்டிருக்கும்.

ஆசிரமத்திற்கு வந்த தொடக்கத்திலே சூரப்புலி பகல் நேரங்களில் வெகுநேரம் கானகத்திற்குள் புகுந்து சுற்றிவரும். அப்படிச்

சுற்றும்போதே ஏதாவது பிராணிகளைப் பிடித்துக் கொன்று தின்னும். ஆனால் இரவு நேரங்களில் அது துறவியை விட்டுப் பிரிய விரும்பவில்லை. அப்படி விட்டுப் பிரிந்தால் அவருக்கு ஏதாவது தீங்கு நேர்ந்துவிடும் என்று அது நினைத்திருக்கவேண்டும். குருட்டுப் பிச்சைக்காரனை அது இரவு நேரத்தில் பிரிந்து சென்றதாலேயே அவன் உயிரிழக்க நேரிட்டது என்று அது உணர்ந்திருந்தது. மீண்டும் அதே பிழையைச் செய்ய அது விரும்பவில்லை.

பகல் வேளையில் இவ்வாறு கானகத்தில் சுற்றிக்கொண்டிருந்த ஒரு நாள் அது ஒரு கரடிக்குட்டியை வாயில் கவ்வி எடுத்துக்கொண்டு ஆசிரமத்திற்கு வந்துவிட்டது. கரடிக்குட்டி பிறந்து சுமார் இரண்டு மூன்று வாரங்களுக்குக் கண் திறவாமல் படுத்துக் கிடக்கும். அப்படிக் கண் திறவாத குட்டிதான் அது. மாலை நேரம் வெப்பமில்லாமல் குளிர்ச்சியாக இருந்ததால் தாய்க்கரடி தன் குட்டியைத் தனியாக விட்டுவிட்டு இரை தேடப் போயிருந்தது. அந்தச் சமயத்தில் மரக் கூட்டங்களுக்கிடையே புகுந்து உல்லாசமாகச் சுற்றிக்கொண்டு தற்செயலாக அங்கு வந்த சூரப்புலி கரடிக்குட்டியைக் கண்டு அதைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டது. அவ்வாறு அது செய்ததைத் துறவி ஆமோதிக்கவில்லை. குட்டியைக் கண்டதும் உடனே அதைத் திருப்பி எடுத்துப்போய் அது இருந்த இடத்திலேயே விட்டு வரும்படி அவர் சூரப்புலிக்கு உத்தரவிட்டார். துறவி கோபக்குறியொன்றும் காட்டா விட்டாலும் தன்செய்கை அவருக்குப் பிடிக்கவில்லை என்று சூரப்புலிக்குத் தெரிந்துவிட்டது. அது உடனே கரடிக்குட்டியை மீண்டும் வாயில் கவ்விக்கொண்டு திரும்பிப் போகத் தொடங்கிற்று. அந்தச் சமயத்தில் தாய்க்கரடியே அங்கு வந்துவிட்டது.

கரடிக்குப் பொதுவாகவே கண்பார்வை சற்று மங்கல்; ஆனால் மோப்பம் பிடிக்கும் சக்தி அதிகம். சூரப்புலி வந்த வழியை மோப்பம் பிடித்துக்கொண்டே பின்னாலேயே தாய்க்கரடி வந்துவிட்டது. சூரப் புலியின் வாயில் கவ்வியிருந்த குட்டியைக் கண்டதும் அது கோபத் தோடு சீறிக்கொண்டு சூரப்புலியின் மேல் பாய்ந்தது. சூரப்புலி கரடிக்குட்டியைக் கீழே விட்டுவிட்டுப் போருக்குத் தயாராயிற்று.

கரடி மிக வலிமையுடைய பிராணி. அதை எதிர்ப்பது சுலபமல்ல. அதிலும் தாய்க்கரடி தன் குட்டிக்கு ஆபத்து என்று கருதினால் மிகுந்த ஆவேசத்தோடும் மூர்க்கத்தோடும் சண்டை யிடும்; எதற்கும் அஞ்சாது. தனது வலிமையான முன்னங்காலினால் ஓங்கியடித்து எதிரியைக் கொன்றுவிடும். உரோமம் அடர்ந்த

அதன் உடம்பிலே எளிதில் காயம் செய்யமுடியாது. இது வரையிலும் சூரப்புலி கரடியோடு போரிட்டதில்லை. அதனால் அதனுடைய பலத்தை யறியாமல் சண்டையிட்டது. ஆனால் வெகு சீக்கிரத்தில் அது கரடியின் பிடியில் அகப்பட்டுக்கொண்டது. கரடி பலமாக உறுமிக்கொண்டு அதன் மண்டையில் ஓங்கியடிக்கத் தயாராயிற்று.

அந்தச் சமயத்திலே துறவி தம் கையிலே ஒரு தீப்பந்தத்தைச் சுழற்றி வீசிக்கொண்டு வேகமாக ஓடி வந்தார். கோபத்தோடு தாய்க்கரடி வந்து சூரப்புலியைத் தாக்கத் தொடங்கியதைக் கண்டதும் அவர் ஆசிரமத்திற்குள் ஓடி, ஒரு நீண்ட மூங்கிற்கழியில் பெரிய பந்துபோலத் துணியைச் சுற்றி, அதில் மண்ணெண்ணெயை விட்டுத் தீமூட்டி எடுத்துக்கொண்டு வந்தார். கரடிக்குப் பக்கத்திலே வந்து அந்தத் தீப்பந்தத்தைக் காட்டி அதை மிரட்டினார். "உஸ், உஸ், ஓடு, ஓடு" என்று பலவாறு உரத்துச் சத்தமிட்டார். சூரப்புலியை அடிப்பதற்கு ஓங்கித் தயாராக இருந்த பாதத்திற்கு நேராகத் தீப்பந்தத்தை வேகமாக நீட்டினார். கரடி சட்டென்று சூரப்புலியை விட்டு விட்டுத் துறவியின்மேல் பாய எத்தனித்தது. துறவி கரடிக்குட்டி தரையிற் கிடக்கும் பக்கமாகப் பின்னாலேயே கால்களை வைத்துப் பின்வாங்கினார். கரடிக்குட்டியைத் தாண்டியதும் பயங்கரமாகக் குரல் கொடுத்துக்கொண்டு தீப்பந்தத்தைச் சுழற்றினார். கரடிக்கு என்ன தோன்றிற்றோ தெரியவில்லை. அது துறவியைத் தாக்கும் எண்ணத்தை விட்டுவிட்டுத் தன் குட்டியை வாயில் கவ்வி எடுத்துக்கொண்டு, கர்கர் என்று கோபமாக ஓசையிட்டுக்கொண்டும் சீறிக்கொண்டும் காட்டிற்குள் புகுந்து ஓடிவிட்டது.

வெவ்வேறு வேலைகளில் ஈடுபட்டிருந்த சீடர்களும் சத்தங்கேட்டு இதற்குள் அங்கு வந்து சேர்ந்தார்கள். துறவி அன்போடு சூரப்புலியைத் தட்டிக் கொடுத்துவிட்டு ஆசிரமத்திற்குள் நுழைந்து தியானத்தில் அமர்ந்தார். அடுத்த கணத்தில் அவர் உலகை மறந்தார். அவருடைய மெய்மறந்த நிலையைக் கண்டு சூரப்புலி ஆச்சரியத்தோடு அவரையே உற்று நோக்கிக்கொண்டு எதிரில் படுத்திருந்தது. அதன் உள்ளத்திலே பல விதமான எண்ணங்கள் எழுந்து மறைந்துகொண்டிருந்தன.

தனது உயிருக்கு ஏற்பட்ட ஆபத்தை அது நினைத்தது. துறவி தமக்கு ஏற்படக்கூடிய தீங்கையும் கவனியாமல் கரடியை விரட்டித்

தன்னைக் காப்பற்றியதை எண்ணி எண்ணிக் குதூகலம் அடைந்த அவருடைய அன்பின் அளவை அதனால் புரிந்துகொள்ளவே முடி வில்லை. குருட்டுப் பிச்சைக்காரன் அதனிடத்தில் அன்பு செலுத்தின யோசித்துப் பார்த்தால் அந்த அன்பில்கூடக் கொஞ்சம் சுயநல கலந்திருந்தது. அவனுக்குச் சூரப்புலி பெரிய உதவியாக இருந் தல்லவா ? சூரப்புலி இல்லாவிட்டால் அவன் வாழ்வதே சிரம மேலும், அவனுடைய பேராசைக்குக் காரணமான பணமும் அதனு தான் கிடைத்தது. அதனால்தான் அவனுடைய அன்பில் சுயநல இருந்ததென்று சொல்ல முடிகிறது. ஆனால், துறவி சூரப்புலியி மிருந்து எவ்வித உதவியையோ பயனையோ எதிர்பார்த்ததாக தெரியவில்லை. பணத்திலே அவருக்குப் பற்றில்லை என்பது ப சமயங்களிலே நன்றாக வெளியாயிற்று. காணிக்கையாக மக்க கொடுக்கும் பணத்தைக்கூட அவர் அப்படியே ஏற்றுக்கொள்வ தில்லை. தம்மிடம் வருகின்றவர்கள் மகிழ்ச்சி யடையட்டும் என் எண்ணியே ஒரு சிறு நாணயத்தை அவர் எடுத்துக்கொண் மற்றவற்றைத் திருப்பிக் கொடுத்துவிடுவார். அவர் தம் உடல் பற்றியோ பாதுகாப்பைப்பற்றியோ சிந்திப்பதாகவும் தெரியவில் இருந்தாலும், சூரப்புலியிடம் அளவற்ற அன்பு கொண்டிருந்தா ஆனால் அந்த அன்பை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ள அவ விரும்பவில்லை. அவருடைய அன்பிலே சுயநலம் என்பது அணுவளவ கூட இல்லை. சுயநலம் என்பதையே வென்றுவிட்டவர் அவ அவருடைய அன்பைப் போல உயர்ந்த அன்பு வேறெங்கும் இருக் முடியாது. அந்த அன்பைச் சூரப்புலியால் முற்றிலும் புரிந்துகொள் முடியவில்லையென்றாலும் அந்த அன்பு சூரப்புலியை அடியோ கவர்ந்துவிட்டது. சூரப்புலி அந்த அன்பிலே தன்னை முழுமையா அர்ப்பணம் செய்ததால் அது பெரிய மகிழ்ச்சியை அடைந்தது. அே சமயத்தில் அந்த அன்புக்குக் காரணமான துறவியும் குருட்டு பிச்சைக்காரனைப்போலத் தன்னை விட்டுப் பிரிந்து விடுவாரோ என் பயமும் கொண்டது. அவரை எப்பொழுதும் விட்டுப் பிரியாதிருக் வேண்டும் என்று ஆவல் கொண்டது.

ஒருநாள் இரவு முழு நிலா அற்புதமாக வானத்தில் எழுந் வெள்ளிக்கிரணங்களைப் பொழிந்துகொண்டிருந்தது. அதன் மோகன ஒளியிலே கானகமே மயங்கி ஒரு புதிய அழகைப் பெற்று விள கிற்று. துறவி ஆசிரமத்தை விட்டு வெளியே வந்து ஆற்றை கடந்து ஒற்றையடிப் பாதையிலே நடக்கலானார். சூரப்புலி தயாராக பக்கத்திலே வந்துகொண்டிருந்தது. துறவி தம்மையே மறந் ஏதோ ஒரு சக்தியால் கவரப்பட்டவர்போல நடந்தார். அவருடை

நண்கள் உலகப் பொருள்களைப் பார்த்ததாகத் தோன்றவில்லை. கால்நள் மட்டும் பழக்கத்தாலோ என்னவோ பாதையில் சரியானபடி நடந்து அருவியை நோக்கிச் சென்றன.

துறவியின் நிலையைக் கண்டு சூரப்புலிக்குப் பயம் பிடித்துக் கொண்டது. கொடிய விலங்குகள் நடமாடும் அந்த இரவிலே மெய் மறந்து செல்லும் துறவியைக் காப்பது தனது கடமை என்ற உணர்ச்சியோடு அது நாலு பக்கமும் திரும்பித் திரும்பி எச்சரிக்கை யோடு பார்த்துக்கொண்டே நடந்தது. அதன் காதுகள் சிறிய ஒலியையும் கேட்கும்படியாக நெரித்துக்கொண்டு நிமிர்ந்து நின்றன. கரடியொன்று கறையான் புற்றைப் பறித்து, அதில் தன் வாயை வைத்துக் கறையான்களை வேகமாக உறிஞ்சித் தின்னும் சத்தம் பக்கத்திலே பயங்கரமாகக் கேட்டுக்கொண்டிருந்தது. துறவி மெது வாக அருவியின் கீழ்ப்பகுதியை அடைந்து, தமக்கு விருப்பமான அந்த மேடைபோன்ற பாறைமீது அமர்ந்தார். சூரப்புலி அவருக்கு இடப்பக்கத்திலே அவர் கைக்கு அருகில் படுத்தது. அதன் கண்கள் சுற்றிலும் ஊடுருவிப் பார்த்துக்கொண்டிருந்தன. தடதடவென்று அதிரும் நீர்வீழ்ச்சியின் ஒலிக்கு மாறுபட்ட வேறு ஒலி ஏதாவது உண்டாகின்றதா என்றும், மரக்கூட்டத்தினிடையே அசைவு உண் டாகின்றதா என்றும் அது உற்றுக் கவனித்துக்கொண்டிருந்தது.

நிலவின் ஒளிபட்டு மேலிருந்து கீழே வெண்ணுரையோடு விழுகின்ற ஆறு ஒரு மாயக்காரிபோல விளங்கியது. மாயக்காரி ஏதோ மந்திரத்தை வேகமாக முணுமுணுப்பதுபோல அதன் ஓசை கேட்டது. சுற்றிலும் இருந்த மரக்கூட்டங்கள் அந்த மந்திரத்திலே கட்டுப்பட்டு அசைவற்று நின்றன. தனிமையின் வசீகர சக்தி அந்த இடத்திலே நன்ருக விளங்கியது. அந்தத் தனிமையிலே கலந்து விட்டவர்போலத் துறவி தம்மை மறந்து இயற்கையோடு இயற்கை யாக மாறி அசைவற்றிருந்தார். ஓம் ஓம் என்ற மந்திரம் அவருடைய வாயில் இருந்து ஒவ்வொரு சமயத்தில் வெளிப்பட்டு அருவியின் முழக்கத்தோடு கலந்து எங்கும் ஒரு சாந்தியை உண்டாக்கியது.

அந்தச் சமயத்திலே இரண்டு புலிகள் ஆணும் பெண்ணுமாக எதிர்க்கரையிலே மரக்கூட்டத்திற்கிடையே தோன்றின. இயற்கை அழகிலே மெய்ம்மறந்து அதனுடன் கலந்திருக்கும் துறவியையும் அவர் பக்கத்திலே படுத்திருக்கும் நாயையும் அவை உற்றுப் பார்த்தன. அவற்றின் காதுகள் நெரிந்தன. வால் நுனிகள் சுருண்டு பாய்வதற்குத் தயாராகிக்கொண்டிருந்தன. சூரப்புலி இவற்றை

யெல்லாம் கவனித்தது. புலிகளோடு போரிடுவதற்குத் துணிந்தது. துறவியைப் புலிகளிடமிருந்து காப்பாற்ற வேண்டும் என்ற ஒரே எண்ணம்தான் அதன் உள்ளத்திலே அந்தச் சமயத்தில் மேலோங்கி இருந்தது. அதன் அடர்ந்த உரோமம் சிலிர்ப்பதையும், அதன் தசை நார்கள் முறுக்கேறுவதையும் துறவி கவனித்தார். அடுத்த கணத்தில் சூரப்புலி வேகமாக எழுந்து முன்னால் பாய்ந்தோடியிருக்கும். ஆனால் துறவியின் இடக்கை மெதுவாகச் சூரப்புலியின் முதுகிலே பட்டது. "பேசாமல் படுத்திரு, கவலைப்படாதே" என்று கூறுவது போல அவருடைய இடக்கை நடுவிரல்கள் மூன்றும் சூரப்புலியின் முதுகில் இலேசாகத் தட்டிக்கொடுத்தன. அவருடைய இடக்கையின் அசைவோ விரல்களின் அசைவோ வெளியில் தெரியாதவாறு அவ்வளவு நளினமாகத் துறவி தமது விருப்பத்தைச் சூரப்புலிக்குத் தெரிவித்தார். சூரப்புலியும் அதைத் தெரிந்துகொண்டது. முன்னால் படுத்திருந்தவாறே மெதுவாகத் தலையைச் சற்றுத் திருப்பித் துறவியை உற்று நோக்கிற்று. அவருடைய முகத்திலே கவலையோ அச்சமோ ஒரு சிறிதும் தென்படவில்லை. இதழ்களில் அரும்பியிருந்த புன்னகை கொஞ்சம்கூட மாறவில்லை. கண்கள் பழையபடியே இயற்கையழகில் லயித்திருந்தன. சூரப்புலி தன் உள்ளத்திலே தோன்றிய கவலையை மறந்தது. என்ன நேர்ந்தாலும் துறவியின் கட்டளையின்படியே நடப்பதென்று தீர்மானித்துப் பேசாமல் படுத்திருந்தது. அதன் கண்கள்மட்டும் புலிகளையே மாறாமல் உற்று நோக்கிக்கொண்டிருந்தன.

துறவியையும் சூரப்புலியையும் கண்டவுடன் சட்டென்று நின்ற புலிகள் இப்பொழுது ஆற்றை நோக்கி அடியெடுத்து வைத்தன. ஓடும் நீரிலே நடந்தன. மகிழ்ச்சியோடு ஆற்று நீரிலே விளையாடின. துறவியையும் நாயையும் அவை முற்றிலும் மறந்துவிட்டனபோல் தோன்றியது. வெகுநேரம் நீரிலே விளையாடிக் களித்துவிட்டுத் துறவி இருந்த பக்கமாக ஆற்றின் கரையிலேறி மரக்கூட்டங்களுக்கிடையில் புகுந்து அவை மறைந்துவிட்டன.

சூரப்புலிக்கு உண்டான ஆச்சரியத்திற்கு அளவே இல்லை; போரிட்டிருந்தால் புலிகளை நிச்சயமாக வெல்ல முடியாது என்பது அதற்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் துறவியைக் காப்பதற்காக அது தன் கடமையைச் செய்ய வேண்டுமென்று முன்பு கருதியிருந்தது. தனது பலத்தைவிட மிக மேலான பலம் துறவியிடம் இருக்கிறதென்று அதற்கு இப்பொழுது தெரிந்தது. துறவியினுடைய



பலம் அவருடைய அன்பினால் ஏற்பட்டது. தமது உடம்பைப்பற்றிய எண்ணம் சிறிதும் இல்லாமல் அன்புமயமாக இருக்கின்ற துறவியின் பெருமையைச் சூரப்புலி அந்த நிமிஷத்தில் எப்படியோ உணர்ந்தது. மனிதர்களுக்கும் எட்டாத அந்த உண்மை அதற்குத் தெரிந்து விட்டது. அதனால் அது தன்னையே துறவியிடம் முழுமையாக அர்ப்பணம் செய்துவிட்டது. விளக்க முடியாத ஒரு பெரிய இன்பக் கிளர்ச்சியோடு அவருடைய முகத்தைப் பார்த்துத் தன்னை மறந்தது. மெதுவாகத் தனது தலையை அவருடைய பாதங்களிலே வைத்தது. சூரப்புலியின் உணர்ச்சிகளையெல்லாம் உணர்ந்தவர்போல அதை அன்போடு தலையிலிருந்து உடம்பு முழுவதும் ஒருமுறை துறவி தடவிக் கொடுத்தார்.

மேற்கிலே உயர்ந்து நிற்கும் மலைகளுக்குப் பின்னால் முழுநிலா மறைகின்ற தருணத்தில் துறவி அருவியைவிட்டு ஆசிரமத்திற்குப் புறப்பட்டார். சூரப்புலி அவரைத் தொடர்ந்து சென்றது.

அந்த இரவு முதல் சூரப்புலியின் வாழ்க்கையில் மற்றொரு புதிய மாறுதல் தோன்றலாயிற்று. உணவிற்காகக் காட்டுப் பிராணிகளைக் கொல்லுவதைக் கொஞ்சங்கொஞ்சமாக அது தவிர்த்துவிட்டது. ஆசிரமத்தில் சீடர்கள் தயாரிக்கும் உணவையே அது விரும்பி உண்டது. துறவிக்கு எது விருப்பமோ அதுவே தனக்கும் விருப்பமாக

இருக்குமாறு அது பழகலாயிற்று. துறவியின் ஒவ்வொரு செயலும் பார்வையும் அதற்குப் புதிய புதிய உண்மைகளைக் கூறுவதாக அமைந்தன. ஆனால் துறவி அதற்காகத் தனி முயற்சி செய்ததாகத் தெரியவில்லை. இயல்பாக அவர் எப்பொழுதும் போலவே நடந்து வந்தார். சூரப்புலிதான் அவருடைய நடத்தையிலே புதிய பொருளைக் கண்டது.

சூரப்புலி கானகத்திலே தனியாக உலவும்போது பல தடவைகளில் வேறு பிராணிகளைச் சந்திக்கும். ஆனால் அவற்றைக் கொல்ல இப்பொழுது அது முயல்வதில்லை. ஒரு நாள் அது இரண்டு சிறுத்தைக்குட்டிகளை ஒரு புதர் மறைவிலே கண்டது. அவ்வாறு முன்பு கண்டிருந்தால் அவற்றை உடனே கொன்று தின்றிருக்கும். ஆனால் இன்று அப்படிச் செய்யவில்லை. அந்தக் குட்டிகளோடு நெடு நேரம் விளையாடிக்கொண்டிருந்தது. அப்படி விளையாடிக்கொண்டிருக்கும் சமயத்தில் இரை தேடச் சென்றிருந்த தாய்ச் சிறுத்தை திரும்பி வந்துவிட்டது. அது கோபத்தோடு சீறிக்கொண்டு சூரப்புலியைப் பார்த்தது. ஆனால் மறுகணத்தில் அதன் கோபம் மறைந்துவிட்டது. தன் வருகையையும் கவனியாமல் குட்டிகள் அதனோடு உற்சாகமாக விளையாடிக்கொண்டிருப்பதை அறிந்த தாய் தனது சீற்றத்தை மாற்றிக்கொண்டு மெதுவாக அருகே வந்தது அப்பொழுது சூரப்புலி தரையில் படுத்துக் கிடந்தது. சிறுத்தைக் குட்டிகள் அதன் மார்பிலேறிக் குதித்துக்கொண்டிருந்தன. நாயும் குட்டிகளும் மகிழ்ச்சியோடு பல வகையாகக் குரல் கொடுத்துக் கொண்டிருந்தன. பிறகுதான் அவை தாய்ச் சிறுத்தையைக் கவனித்தன. குட்டிகள் அதனருகே துள்ளியோடின. சூரப்புலி மகிழ்ச்சியோடு ஆசிரமத்திற்குத் திரும்பியது.

இவ்வாறு சூரப்புலியினிடத்தில் மாறுதல் ஏற்பட்டுக் கொண்டிருந்த நாள்களில் ஆசிரமத்திற்குப் பலர் வருவதும் போவதுமாக இருந்தார்கள். துறவி எங்கோ புறப்படுவதற்கு ஆயத்தம் செய்வதுபோலத் தோன்றியது. மக்கள் அன்போடு காணிக்கையாக அவருக்கு நிறையப் பொருள் கொடுக்க முன்வந்தார்கள். ஆனால் அவர்கள் கொடுக்கும் பொருள்களை அவர் சிறிதும் விரும்பவில்லை. அன்பின் அறிகுறியாக வழக்கம்போல ஒரு சிறு நாணயத்தை ஒவ்வொருவரிடமிருந்தும் ஏற்றுக்கொள்வார். தன்னை விட்டுப் பிரிந்து போய்விடுவாரோ என்ற ஏக்கம் சூரப்புலியின் மனத்தில் மீண்டுந் தோன்றியது. ஆனால் அந்த ஏக்கம் நீடிக்குமாறு துறவி விடவில்லை. ஒருநாள் அதிகாலையிலே துறவி பிரயாணத்திற்குத் தயாரானார்.

சூரப்புலியையும் கூடவே அழைத்துச் சென்றார். சீடர்களும் ஆசிரமத்தைக் காலி செய்துவிட்டுப் புறப்பட்டனர். கானகத்திற்கு வெளியே மேட்டுப்பாளையம் சேரும் சாலையிலே ஒரு மோட்டார் கார் தயாராக வந்து நின்றது. துறவியும் சீடர்களும் சூரப்புலியும் கோயம்புத்தூருக்குக் காரில் சென்றனர்.

கோயம்புத்தூருக்கு வந்ததும் சூரப்புலியை வாளாங்குளத்திற்கு அருகிலிருக்கும் பாழுடைந்த கோயிலுக்குக் கூட்டிச் செல்லத் துறவி மறக்கவில்லை. ஆனால், இந்தத் தடவை சூரப்புலியின் நடத்தையில் வேறுபாடிருந்தது. குருட்டுப்பிச்சைக்காரனை நினைத்து அது வருந்திய தென்றாலும் முன்போல ஊளையிட்டுக் கதறவில்லை. அந்த இடத்திலே சிறிது நேரம் நின்றுவிட்டுத் துறவியிடம் ஓடிவந்துவிட்டது. "நீங்கள் தாமே இப்பொழுது எனக்கு எல்லாம்" என்று அது துறவியைப் பார்த்துச் சொல்லுவதுபோல் பார்த்தது. துறவி அதன் உள்ளத்தைத் தெரிந்துகொண்டவர்போலக் காணப்பட்டார்.

அன்று மாலையே அவர் நீலகிரி எக்ஸ்பிரஸில் சென்னைக்குப் பயணமானார். சீடர்கள் நால்வரும் மாலைவரையில் கூடவே இருந்து விட்டுப் பிறகு அவருடைய பாதத்தில் விழுந்து வணங்கி விடை பெற்றுக்கொண்டார்கள். துறவியைப் பிரிகின்ற வருத்தம் அவர்களுடைய முகத்திலே தெளிவாகத் தெரிந்தது. துறவி நீண்ட நாள்களுக்கு அவர்களையெல்லாம் விட்டுப் பிரிகின்றார் என்பது சூரப்புலிக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. தன்னையும் கோயம்புத்தூரில் அந்தப் பெரிய மூன்றடுக்கு மாடி வீட்டிலேயே விட்டுச் சென்று விடுவாரோ என்று அதற்கும் பயம் உண்டாயிற்று. அதனால் அது துறவியை விட்டுச் சிறிது நேரமும் பிரியாமல் காலடியிலேயே இருந்தது. பல பேர் துறவியைக் கண்டு வணங்க வந்தார்கள் ஒவ்வொருவரும் காணிக்கை சமர்ப்பிக்கத் தவறவில்லை. துறவி வழக்கப்படி ஒரு சிறு நாணயத்தை ஒவ்வொருவரிடமிருந்து ஏற்றுக்கொண்டார். "இந்த நீண்ட பிரயாணச் செலவுக்காவதும் கொஞ்சம் அதிகமாக ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று சிலர் பணிவோடு கேட்டுக்கொண்டார்கள். "எனக்கு எதற்குப் பணம்? கயிலாசபதி இருக்கிறார். அவர் இருக்கும்போது எனக்கு என்ன குறைச்சல்?" என்று சிரிப்போடு கூறிவிட்டு அவர் அவர்கள் கொடுத்த பொருளை வாங்க மறுத்துவிட்டார்.

மாலையில் ரயில் நிலையத்திலே சூரப்புலி பெரிய அதிர்ச்சி யடைந்தது. அதைத் துறவியிடமிருந்து பிரித்துத் தனியாக ஒரு



பெட்டியில் விட முயன்றார்கள். நாய்களை ஏற்றிச் செல்லும் ரயில் பெட்டி அது. துறவி பிரயாணம் செய்யும் பெட்டியில் அதை ஏற்றிச் செல்ல இயலாதாகையால் இந்த ஏற்பாடு செய்தார்கள். ஆனால் சூரப்புலி அந்தப் பெட்டிக்குள் செல்ல அறவே மறுத்துவிட்டது. துறவியிடமிருந்து தன்னைப் பிரித்து எங்கோ கொண்டுபோக நினைக்கிறார்கள் என்று அது பயந்தது. துறவி அதன் பயத்தை உணர்ந்துகொண்டார். மெதுவாக அதைத் தட்டிக்கொடுத்தார். "வா, இதில் ஏறிக் கொள். பயப்படாதே" என்று அவர் கூறிக்கொண்டே நாய் வண்டிக்குள் தாம் முதலில் ஏறினார். சூரப்புலியின் பயம் நீங்கிவிட்டது. உடனே உள்ளே சென்று படுத்தது. "இங்கே இரு. காலையில் வந்து உன்னைக் கூட்டிச்செல்கிறேன்" என்று சொல்லி மீண்டும் ஒரு முறை தட்டிக் கொடுத்துவிட்டுத் துறவி கீழே இறங்கினார். சூரப்புலி மகிழ்ச்சியோடு பெட்டியில் தங்கிற்று.

பிறகுதான் அந்தப் பெட்டியை அது ஆராய்ந்து பார்த்தது. தங்குவதற்கு வசதியாகத்தான் இருந்ததென்றாலும் அந்த மாதிரி பெட்டிக்குள் அடைபட்டு இரவைக் கழிப்பது அதற்கு ஒரு புதிய அனுபவம். மேலும் ரயில் கடகடவென்று பலவகையாக இரைச்சல் இட்டுக்கொண்டும் ஆடிக்கொண்டும் சென்றது. அந்த நிலையில் தூங்குவதும் அதற்கு ஒரு புதிய அனுபவம்.

சென்னையில் மேலும் பல புதிய அனுபவங்கள் காத்துக்கொண்டிருந்தன. அங்கே ஓர் எளிமையான சாதுக்களின் மடத்திற்குத் துறவி சூரப்புலியை அழைத்துக்கொண்டு சென்றார். ரயில் நிலையத்திலிருந்து மடத்திற்குச் செல்லும் வரையிலும் நூற்றுக்கணக்கான மோட்டார் வாகனங்களையும் வேறு வகையான வாகனங்களையும் சூரப்புலி பார்த்தது. பரபரப்புடனே மக்கள் வெவ்வேறு திசைகளில் நடத்தும் வாகனங்களிலேறியும் சென்றுகொண்டிருந்தார்கள். மிக உயரமான கட்டடங்கள் வீதியின் இரண்டு பக்கங்களிலும் காட்சி அளித்தன. நாகரிகமான புதிய புதிய வகைகளில் கட்டப்பட்ட மாளிகைகள் எங்குப் பார்த்தாலும் தென்பட்டன. இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டே சூரப்புலி மடத்தை அடைந்தது.

அன்று மாலை துறவி சூரப்புலியை அழைத்துக்கொண்டு கடற்கரைக்குச் சென்றார். பரந்த கடலையும் அதில் ஓயாமல் எழுந்து கரையை நோக்கி வரும் அலைகளையும் பார்த்துச் சூரப்புலி பிரமித்தது. துறவி முழங்கால் அளவு தண்ணீருக்குள்ளே நின்றுகொண்டு நீர்ப் பரப்பையே சற்று நேரம் கவனித்துக்கொண்டிருந்தார். எல்லையில்லாமல் பரந்து கிடக்கும் கடல் அவருக்குக் கடவுளின் நினைவை உண்டாக்கியிருக்கும். அந்த நிலையிலேயே மெய்ம்மறந்து தியானம் செய்தார். பிறகு சூரப்புலியைக் கடல் அலைகளோடு விளையாடுவதற்காக அழைத்தார். சூரப்புலியும் மகிழ்ச்சியோடு தண்ணீரில் இறங்கி அவரைச் சுற்றிச் சுற்றி ஓடியாடிக் களித்தது. பிறகு, சூரப்புலி மடத்திற்குத் துறவியுடன் திரும்பிற்று.

அன்றிரவு சூரப்புலி கால்போன போக்கிலே வீதி வழியாகவும் சந்து வழியாகவும் நடந்தது. ஒரு குறுகிய வீதியிலே இரண்டு பக்கங்களிலும் உயர்ந்த கட்டடங்கள் நின்றுகொண்டிருந்தன. கட்டடங்களோடு சேர்ந்தாற்போலக் குறுகிய நடைபாதைகளும் இருந்தன. ஆனால் அந்தப் பாதைகளிலே யாரும் நடக்க முடியாது. ஏனென்றால், அங்கே சில குடும்பங்கள் தமது சட்டிபானை, மூட்டை முடிச்சுகளுடன் நிரந்தரமாகக் குடியிருந்தன. குழந்தை குட்டி சொத்து சுகம் எல்லாம் அந்த இடத்தில்தான். சூரப்புலி அந்தப் பக்கத்திற்கு வந்தபோது சிறு தூறல் விழத் தொடங்கிவிட்டது. அந்தக் குடும்பங்கள் எல்லாம் நனைந்துகொண்டே குந்தியிருந்தன. நாள் முழுவதும் பாரவண்டி இழுத்த களைப்பாலும், கூடை சுமந்த களைப்பாலும் சில ஆண்களும் பெண்களும் மழையைக்கூடக் கவனியாமல் தூங்கிக் கொண்டிருந்தார்கள். நோயால் வாடும் குழந்தைகள் ஓயாமல்

அழுதுகொண்டிருந்தன. பெரிய கட்டடங்களெல்லாம் பூட்டப்பட்டிருந்தன. லட்சக்கணக்கில் வாணிகம் நடக்கும் இடங்கள் அவை. அவற்றிலே மழைக்காக ஒண்டக்கூட இடம் கிடையாது.

மனிதனுக்கு ஏற்படக்கூடிய துன்பத்தின் எல்லையைச் சூரப்புலி சென்னையில் கண்டது. பகட்டும் பணமும் கொழிக்கின்ற இடத்திலே மனிதன் சேற்றில் வாழும் பன்றியைப் போலவும், புழுவைப் போலவும் வாழ்வதை அது கண்டது. இந்த நகரத்திற்கு எதற்காகத் துறவி வந்தார் என்று அது ஆச்சரியமடைந்தது. கானகத்தின் இன்பத்தை விட்டு அவர் இந்தத் துன்பம் நிறைந்த இடத்திற்கு வந்ததை அதனால் புரிந்து கொள்ள முடியவில்லை,

சூரப்புலி மேற்கொண்டு அந்த வீதியில் நடவாமல் திரும்பி மடத்தை அடைந்தது. துறவி ஓரிடத்திலே அமர்ந்து தியானத்திலே தம்மை மறந்திருந்தார். இங்குகூட இவ்வாறு துறவி தம்மை மறந்த நிலையில் இருப்பதைக் கண்டு சூரப்புலி ஆச்சரியமடைந்தது.

அன்று மாலையிலே சூரப்புலிக்கு மற்றுமோர் அனுபவம் ஏற்பட்டது. பட்டணத்து உயர் நீதிமன்றத்துக்கு முன்னால் கடைவீதி வழியாகத் துறவி நடந்துகொண்டிருந்தார். திரளாகச் செல்லும் மக்களையும் ஓயாது செல்லும் கார் வரிசைகளையும் பார்த்துக்கொண்டே சூரப்புலி அவருக்குப் பக்கத்தில் சென்றுகொண்டிருந்தது. மடத்திலே பயிற்சி பெற்றுவரும் பிரம்மச்சாரிகள் இரண்டுபேர் துறவிக்காகக் கம்பளிகளும், கம்பளித் துணிகளும், வேறு சாமான்களும் வாங்குவதிலே ஈடுபட்டிருந்தார்கள்..சாமான்கள் வாங்குவதிலே ஒரு சிறிதும் அக்கறை இல்லாதவர்போல, துறவி சாலையோரத்திலே மெதுவாக நடந்துகொண்டிருந்தார், கூட்டம் நெருக்கமாக இருந்தது. பலவகையான சில்லறைச் சாமான்கள் விற்பவர்களும், வாங்குவோர்களும் நடைபாதையிலே குழுமியிருந்தார்கள். துறவி அவர்களிடையே புகுந்து குழந்தையைப் போல வேடிக்கை பார்த்துக் கொண்டு சென்றார். அந்தச் சமயத்திலே அவருடைய மேலங்கியின் அள்ளைப்புறத்திலேயிருந்த ஜேபியில் கைவிட்டு மிகச் சாமர்த்தியமாக அதற்குள்ளிருந்த பணப்பையை ஒருவன் எடுத்துவிட்டான். மிகத் திறமையோடு செய்த இந்த ஜேப்படித் திருட்டைத் துறவி கண்டுகொள்ளவேயில்லை. ஆனால் சூரப்புலி பார்த்துவிட்டது. பணப்பையோடு கூடிய கையை லபக்கென்று பிடித்துக்கொண்டது. ஜேப்படித் திருடன் தப்பியோட முயன்றான். சூரப்புலி அதற்கு இடம் கொடுக்கவில்லை. அவன் ஓட முயன்றதால் கையை அழுத்தமாகக்



கடிக்கத் தொடங்கியது. திருடன் பையைக் கீழே நழுவ விட்டுவிட்டு ஒன்றும் தெரியாதவனைப்போல் பாசாங்கு செய்தான். "யார் இந்தக் கடிநாயைக் கடை வீதியிலே கொண்டுவந்தது?" என்று அதட்டுகிற குரலில் அவன் கேட்டான். இதற்குள்ளே பெரிய கூட்டம் கூடிவிட்டது. துறவி சிரித்துக்கொண்டே தரையில் கிடக்கும் பணப்பையைக் கையில் எடுத்து, "அப்பா! இந்தப் பை வேண்டுமானால் எடுத்துக்கொண்டு போ! நாயின்மீது குற்றம் சொல்லாதே" என்று கூறிக்கொண்டே அவனிடம் நீட்டினார். போலீஸ்காரன் ஒருவன் இதற்குள் வந்து சேர்ந்தான். சூரப்புலியைத் தட்டிக்கொடுத்துவிட்டு அவன் ஜேப்படித் திருடனைப் பிடித்துக்கொண்டு போய்விட்டான்.

துறவிக்கு எத்தனையோ பேர் பணம் கொடுக்க ஆவலோடு முன்வந்ததைச் சூரப்புலி பல தடவை கண்டிருக்கிறது. ஆனால் அவரிடமிருந்து திருடுகிற மனிதனைச் சென்னையிலேதான் அது பார்த்தது. துறவி ஒரு செருப்புக் கடைக்குள்ளே சென்று தமக்காகப் பாதம் முழுவதையும் மூடும் ஒரு புது மாதிரியான பாதரட்சை ஒரு ஜோடி வாங்கிக்கொண்டார். சூரப்புலியின் நான்கு பாதங்களுக்கும் அளவெடுத்து அவற்றிற்கு ஏற்றவாறு தோலால் பாதரட்சைகள் செய்யுமாறு ஏற்பாடு செய்தார்.

அடுத்த நாள் காலையிலே சூரப்புலிக்கான பாதரட்சைகளை அதன் கால்களில் மாட்டிக் கட்டிய போது சூரப்புலிக்கு உண்டான ஆச்சரியத்

திற்கு அளவேயில்லை. அப்படிக் காலில் கட்டிவிட்டுத் துறவி சிரித்துக்கொண்டிருந்தார். அந்தப் பாதரட்சைகளின் உபயோகத்தை அறியாமல் சூரப்புலி மலைத்து நின்றது. இமயமலையில் உள்ள கயிலாசத்திற்கு அன்றே யாத்திரை புறப்படுகின்ற விஷயம் சூரப் புலிக்குத் தெரியாது. கம்பளிப் போர்வைகளும் உடைகளும் அந்த யாத்திரைக்காக வேண்டியிருந்தன என்பதும் சூரப்புலிக்குத் தெரியாது.

காலை பத்து மணிக்கே டெல்லி எக்ஸ்பிரஸில் சென்னையைவிட்டுப் புறப்பட்டதும் சூரப்புலி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தது. போகிற இடம் எது என்று அதற்குத் தெரியாது. இருந்தாலும் சென்னையை விட்டுப் புறப்பட்டது அதற்குத் திருப்தியளித்தது.

ஒருநாள் முழுவதும்கூட டெல்லியில் துறவி தங்கவில்லை. மறுபடியும் ரயில் பிரயாணம். நல்ல வெயில் காலத்தில் இவ்வாறு துறவி எங்கு செல்கிருரென்பது சூரப்புலிக்கு விளங்கவில்லை. ஆனல் இவ்வளவு நீண்ட பயணத்திலும் தன்னையும் கூடவே அழைத்துச் செல்வதை நினைத்து அது உள்ளம் பூரித்தது.

துறவி சூரப்புலியோடு வெப்பம் மிகுந்த கீழ்ப்பகுதிகளை யெல்லாம் கடந்து குளிர்ச்சியான அல்மோராவை அடைந்தார். இமயமலைச் சாரலிலே அது கடல் மட்டத்திற்கு மேல் சுமார் 5500 அடி உயரத்திலிருக்கிறது. காத்கோடம் வரையில் ரயிலிலும் பிறகு அல்மோரா வரையில் பஸ்ஸிலும் பிரயாணம் செய்யலாம். அவ்வாறு தான் துறவி சென்ருர். அதற்கு மேலே போக வேண்டுமானல் நடந்துதான் செல்ல முடியும். குதிரையில் ஏறியும் சில பகுதிகளைக் கடக்கலாம். அல்மோராவிலிருந்து சுமார் 250 மைலுக்கு மேல் சென்ருல்தான் கயிலாய கிரியைத் தரிசிக்க முடியும். உடல் துன்பத்தையும், பலவகையான ஆபத்துகளையும் பொருட்படுத்தாமல் செல்லுகின்றவர்களே கயிலாய யாத்திரை செய்ய முடியும். பனிப் பிரதேசத்திலேயே பல நாள்கள் செல்ல வேண்டும். நினைக்க முடியாத குளிரும், விபத்துகளும் உண்டு.

இவற்றையெல்லாம் தெரிந்தே துறவி அல்மோரா வந்திருக் கிருர். இறைவனுடைய நினைவிலேயே இருக்கின்ற அவருக்கு உடலைப்பற்றியும் அதற்கு நேரக்கூடிய ஆபத்துகளைப்பற்றியும் கவலை யேது? சூரப்புலிக்குக் கயிலாய யாத்திரை போகிற விஷயம் தெரியாது. எங்கோ நீண்ட பிரயாணத்திலிருப்பதாகமட்டும் அது

தெரிந்துகொண்டது. அதில் தனக்கும் பங்கு கிடைத்திருப்பதையும் துறவியின் அருகிலேயே இருப்பதையும் எண்ணி அது மகிழ்ச்சி கொண்டிருந்தது.

அல்மோரா இமயமலைச் சாரலிலே இருக்கும் பட்டணம்; குளிர்ச்சியான இடம்; ஆரோக்கியத்திற்காகப் பலர் இங்கு வருவார்கள். கயிலாய யாத்திரை செல்பவர்களும் பெரும்பாலும் இங்கு வந்துதான் வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொண்டு புறப்படுவார்கள். இராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த மடம் ஒன்று இங்கே இருக்கிறது. அதிலுள்ள சாதுக்கள் மிகவும் நல்லவர்கள். கயிலாய யாத்திரை செல்லுபவர்களுக்குத் தம்மாலான உதவிகளையெல்லாம் செய்வார்கள். அவர்களில் ஒருவர் நமது துறவி சூரப்புலியோடு அல்மோரா வந்திருப்பதைப்பற்றிக் கேள்விப்பட்டார். உடனே அவரை மடத்திற்கு அழைத்து வரச் சென்றார்.

அந்தச் சமயத்தில் துறவி சூரப்புலியோடு பாதாளதேவி கோயிலில் தங்கியிருந்தார். அக்கோயில் அல்மோராவுக்கு வடபுறத்தில் ஓர் அழகான பள்ளத்தாக்கில் இருக்கிறது. அங்கே பல பெரியோர்கள் தவம் செய்திருக்கிறார்களாம். அங்குச் சென்று துறவி தியானத்திலமர்ந்தார். இராமகிருஷ்ண மடத்துச் சாதுவின் அன்பான அழைப்புக்கிணங்கி அவர் மடத்துக்கு வந்தார்.

துறவியின் பெருமையை மடத்திலுள்ளவர்கள் விரைவில் அறிந்துகொண்டார்கள். கயிலாய யாத்திரைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொள்ளாமலேயே புறப்படத் தயாராக இருந்ததை அறிந்து எல்லா ஏற்பாடுகளையும் அவர்களே ஆர்வத்தோடு செய்தார்கள்.

"இங்கிருந்து கயிலாயம் போய்வர ஏழெட்டு வாரங்களாகும். அதனால் வேண்டிய உணவுப் பொருள்களையெல்லாம் எடுத்துக்கொள்ள வேண்டும்" என்று அவர்கள் வற்புறுத்தினார்கள்.

"வழியிலே உணவெல்லாம் அந்த ஈஸ்வரனே கொடுப்பான். நீங்கள் கவலைப்பட வேண்டாம்" என்று துறவி கூறினார்.

இருந்தாலும் அந்தச் சாதுக்கள் அவரை வெறுங்கையோடு அனுப்பச் சம்மதிக்கவில்லை. பல நாள்களுக்குக் கெட்டுப்போகாமலிருக்கும் உணவுப் பண்டங்களைத் தயாரித்துத் தகர டப்பாக்களில் அடைத்துத் தந்தார்கள். சூரப்புலிக்கு வேண்டிய உணவும் தயாரித்துக் கொடுத்தார்கள்.

"கம்பளிகளையும், உணவுப் பொருள்களையும் குதிரை மேலே ஏற்றிச் செல்ல வேண்டும். அதற்காகக் குதிரைக்காரன் ஒருவனையும் ஏற்பாடு செய்துவிட்டோம்" என்று அவர்கள் சொன்னார்கள்.

அவர்களுடைய அன்பிலே ஈடுபட்டுத் துறவி அந்த ஏற்பாட்டை மறுக்கவில்லை. ஆனால், அவருக்குச் சூரப்புலியைத் தவிர வேறு யாரும் தம்முடன் வருவது பிடிக்கவில்லை. இருந்தாலும் அவர் சாதுக்களின் விருப்பப்படியே நடக்கச் சித்தமானார். "சரி, உங்கள் விருப்பப்படியே செய்கிறேன். ஆனால் குதிரைக்காரனுடைய தொல்லை இமயமலையில் கிடைக்கும் சாந்தியையே தொலைத்துவிடுமே" என்று சிரித்துக்கொண்டே சொன்னார்.

"வழியிலே எத்தனையோ ஏற்றங்களும், இறக்கங்களும் இருக்கும். பல ஆறுகளைக் கடக்கவேண்டும். குதிரையில்லாமல் உங்களால் மூட்டையைச் சுமந்துகொண்டு இவற்றையெல்லாம் சமாளிக்க முடியாது" என்று சாதுக்கள் அவருக்கு எடுத்துக் காட்டினார்கள்.

"இந்த மூட்டையைவிடக் குதிரைக்காரனுடைய தொல்லைதான் பெரிய மூட்டையாக இருக்கும்" என்று துறவி அனுபவம் வாய்ந்தவர் போலப் பேசினார். ஆனால் குதிரைக்காரனை வேண்டாமென்று சொல்லவில்லை.

கயிலாய யாத்திரையை வேனிற்காலத்தில்தான் செய்யமுடியும். மற்றப் பருவங்களில் பத்துப் பன்னிரண்டாயிரம் அடி உயரத்திற்கு மேல் செல்வது மிகவும் கஷ்டம். எங்கும் உறைபனி மூடிக்கிடக்கும். கயிலாய கிரியை அணுக முடியாது. வேனிற்காலத்தில் உறைபனி உருகிக் கணவாய்களெல்லாம் வழி திறக்கும். அப்பொழுது திபெத்திலிருந்து வணிகர்கள் இந்தியப் பகுதிக்கு வரத் தொடங்குவார்கள். அவர்கள் வருவதை அறிந்த பிறகே யாத்திரை செல்லுபவர்கள் அல்மோராவிலிருந்து புறப்படுவார்கள். கயிலாய கிரி கடல் மட்டத்திற்கு மேல் 22000 அடி உயரத்திலிருக்கிறது. எப்பொழுதும் வெள்ளை வெளேரென்று அது பனியால் மூடப்பட்டிருக்கும். போகும் வழியிலே பல ஆபத்துகள் உண்டு. கல்லும், மண்ணும், பாறைகளும் சரிந்து விழுந்துகொண்டே இருக்கும், மிக வேகமாக ஓடி வரும் ஆறுகள் வழியிலே கொந்தளித்துக்கொண்டிருக்கும். சுமார் 250 மைல்களுக்கு மேல் மலைகளில் ஏறியும் இறங்கியும் ஆறுகளைக் கடந்தும் செல்ல வேண்டும். யாத்திரை செல்லுவோர் சிறு சிறு

கூட்டங்களாகச் செல்வார்கள், பனிப் பிரதேசத்துக்குச் சென்றதும் எல்லோரும் ஒருங்கு சேர்ந்து கூட்டமாகச் செல்லுவார்கள், அங்கே திருடர் பயம் உண்டு, வீடுகளோ ஊர்களோ எங்கும் இல்லை, ஒரே பனிப் பாலைவனமாக இருக்கும், இரவு நேரங்களில் கூடாரமடித்துத் தான் தங்க வேண்டும். காற்றும், புயலும், பனிக்கட்டி மழையும் பயங்கரமாக இருக்கும், கூட்டமாகச் சென்றால்தான் இவற்றை யெல்லாம் சமாளிக்க முடியும். ஆனால் நமது துறவி தனியாகவே சென்றார். சூரப்புலி அவர்கூட நடந்தது. இராமகிருஷ்ண மடத் தாரின் விருப்பப்படி குதிரை ஒன்று துறவியின் சாமான் மூட்டையைத் தூக்கிக்கொண்டு சென்றது. குதிரைக்காரன் அதைப் பிடித்து நடத்திச் சென்றான். 'கயிலாசபதிக்கு ஜேய்' என்று துறவி கோஷ மிட்டுப் புறப்பட்டார்.

துறவி புறப்படுகிற சமயத்தில் சிலர் யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். இவ்வளவு காலம் தாழ்த்துப் புறப்படுவதால் திரும்புவதற்குள் கயிலாயத்தில் பனி பெய்வது அதிகமாகிவிடுமே என்று இராமகிருஷ்ண மடத்துச் சாதுக்கள் கவலைப்பட்டார்கள். ஆனால், துறவி எவ்விதமானகவலையும் கொண்டதாகத் தெரியவில்லை. உள்ளத்தில் எப்பொழுதும்பொங்கிக் கொண்டிருக்கிற ஆனந்தம் இமயமலையைச் சேர்ந்ததும் மிக அதிக மாகப் பெருகிக் கரை புரண்டு ஓடுவதுபோல் அவருக்குத்தோன்றிற்று. உலகத்தைப் பற்றிய நினைவே அவரிடத்தில் இருப்பதாகத் தெரியவில்லை.

வழியிலே உள்ள செங்குத்தான ஏற்றங்களிலும் இறக்கங்களிலும் வழுக்கல் நிறைந்த இடங்களிலும் பனிப்பிரதேசங்களிலும் ஊன்றி நடக்க அவர் கூரான இரும்புப் பூண்போட்ட ஊன்றுகோல் ஒன்றை வாங்கிக்கொண்டார். தலையிலே நீண்ட சால்வையை நன்றாகச் சுற்றி வரிந்துகொண்டார். இராமகிருஷ்ண மடத்தார் அன்போடு வாங்கிக் கொடுத்த முக்கியமான உணவுப்பொருள்களையும் மருந்து வகை களையும் மூட்டையாகக் கட்டித் தோளிலே மாட்டிக்கொண்டார். 'ஜேய் கயிலாசபதி, ஜேய் கயிலாசபதி,' என்று கூவிக்கொண்டு உற்சாகமாக நடக்கலானார். சூரப்புலி பக்கத்தில் நடந்தது. துறவியின் முகத்திலே தாண்டவமாடும் தெய்விக ஒளியைக் கண்டு வழியில் எதிர்ப்பட்டவர்கள் எல்லோரும் அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கினார்கள். சூரப்புலி வெகுநாள் பழகி அவருடைய பெருமையை அறிந்துகொண்டிருந்தது. ஆனால் பார்த்தவுடனேயே

அவருடைய பெருமையை அறிந்த அந்த மக்களைப் பார்த்து அது ஆச்சரியமடைந்தது. அதனால் அது மிகுந்த மகிழ்ச்சியோடு பக்கத்திலே நடந்தது. குதிரைக்காரன் இவற்றையெல்லாம் கவனியாமல் தலையைச் சொறிந்துகொண்டு குதிரையை நடத்தி வந்தான்.

அல்மோராவைவிட்டு வெளியே வந்ததும் ஒற்றையடிப்பாதை ஒன்று தென்பட்டது. அதிலே நடந்துதான் செல்ல முடியும். வண்டிகள் போக முடியாது. மைல் கணக்காக எங்குப் பார்த்தாலும் ஓங்கி வளர்ந்திருக்கும் பைன் மரங்கள் தோன்றின. அந்த மரங்களிலிருந்து எடுக்கும் தைலவாசனை வீசிக்கொண்டிருந்தது இவ்வாறு சுமார் எட்டு மைல் நடந்து பரிச்சீனு என்ற இடத்தைத் துறவி அன்று மாலை அடைந்தார்.

இரண்டு பள்ளத்தாக்குகளுக்கு இடையிலேயுள்ள ஒரு மேட்டுப் பாங்கான பகுதியைச் சீனு என்று அழைப்பார்கள். கனேரிச் சீனு, கனுய், பெரிநாகு இவைகளெல்லாம் அடுத்து வருகின்ற இடங்கள். அங்கெல்லாம் சிறுசிறு ஊர்கள் உண்டு. வழி குறுகலாகவும் ஏறியும் இறங்கியும் சென்றது. ஊரைக் கண்டவுடனே குதிரைக் காரன் துறவிக்குத் தொந்தரவு கொடுக்கத் தொடங்கிவிடுவான். அவனுக்கு வெகுமதி கொடுத்துக்கொண்டே இருக்க வேண்டும். முதலில் கெஞ்சுவான்; பிறகு, "நான் திரும்பி அல்மோராவுக்குப் போய்விடுவேன்" என்று பயங்காட்டுவான்.

துறவி அவன் கேட்டபோதெல்லாம் இனும் கொடுத்துக் கொண்டே வந்தார். அவர் கொடுத்த தொகையைக் கணக்கிட்டுப் பார்த்தால் அவனுக்கு ஆஸ்கோட் என்ற ஊர் வரையிலும் செல்லு வதற்குப் பேசிய கூலியைவிட அதிகமாக இருக்கும். இவ்வாறு வெகுமதி கொடுக்கின்ற துறவியை அவன் பாராட்டியதாகத் தெரிய வில்லை. "இவருக்கு ஒன்றும் தெரியாது; இவரை விருப்பம்போல ஆட்டி வைக்கலாம்" என்று அவன் நினைத்தான்.

பெரிநாகிலிருந்து தால் என்ற ஊர் வரையிலும் பத்து மைல் நடக்க வேண்டும். அந்தப் பத்து மைலையும் கடப்பது சுலபம். ஆனால் தாலிலிருந்து டிட்டிஹட் வரையிலும் கடுமையான ஏற்ற முண்டு. அதனால் குதிரைக்காரன், "தாலுக்கு மேல் வரமுடியாது. குதிரை களைத்துப் போய்விட்டது" என்று பிடிவாதமாகப் பேச ஆரம்பித்தான். துறவி கொடுத்த வெகுமதியை வாங்கிக்கொண்ட பிறகே இப்படி அவன் சொன்னான். துறவி அவனைச் சமாதானப் படுத்த முயலவில்லை. "அப்பா, உன்னால் அங்கே வர முடியாதா?



சரி, இதுவரையிலும் உனக்குண்டான கூலியை வாங்கிக்கொண்டு போய்வா'' என்று சிரித்துக்கொண்டே சொன்னார். கூலியைப் பெற்றுக்கொண்டு குதிரைக்காரன் திரும்பிப் புறப்பட்டான். குதிரையின் மேல் போட்டிருந்த மூட்டையை அலட்சியமாக எடுத்து எறிந்துவிட்டுப் போனான். துறவி ''ஜாக்கிரதையாகப் போய் வா. உனக்கு எல்லா நன்மையும் உண்டாகட்டும்'' என்று கூறி ஆசீர்வாதம் செய்தனுப்பினார். திரும்பிப் போவதாகப் பாசாங்கு செய்தால் துறவி தினக்கூலியை அதிகப்படுத்துவார் என்பது அவனுடைய எண்ணம். ஆனால், துறவி அப்படி ஒன்றும் செய்யவில்லை. கவலையோ கோபமோ கொள்ளாமல் சிரித்துக் கொண்டே அவனுக்கு விடைகொடுத்து அனுப்பினார்.

குதிரைக்காரனுக்கு இது பெரிய ஏமாற்றமாகப் போய்விட்டது. இருந்தாலும் அதை வெளியே காட்டிக்கொள்ளாமல் அவன் குதிரையை நடத்திக்கொண்டு சென்றான். இதுவரை நடந்ததையெல்லாம் சூரப்புலி கவனமாகப் பார்த்துக்கொண்டிருந்தது. குதிரைக்காரன் முன்னால் ஒப்புக்கொண்டபடி செய்யாமல் திரும்பிப் போகிறான் என்பதை அது உணர்ந்துகொண்டது. அவன் பல தடவைகளில் துறவியிடம் பணம் பறித்ததையும் அது பார்த்திருந்தது. அப்பொழுதெல்லாம் அது கோபங்கொள்ளும். இருந்தாலும் சிரித்த

முகத்தோடு துறவி இனும் கொடுப்பதைப் பார்த்து அது சும்மா இருந்துவிடும். இப்பொழுது அது சும்மா இருக்க விரும்பவில்லை. தாலை விட்டுக் கொஞ்ச தூரம் குதிரைக்காரன் சென்றதும் சூரப்புலி அவனுக்கு முன்னால் பாய்ந்து ஓடி வழி மறித்துக்கொண்டது. குதிரையையும் குதிரைக்காரனையும் மேலே செல்லவிடாமல் தடுத்தது. அவன் போக முயன்றால் கடிக்கப் போவதுபோல நடித்தது. குதிரையையும் கடிக்கப் போவதுபோல நடித்து அதை மிரட்டித் தாலை நோக்கி ஓடும்படி செய்தது.

அதனால் குதிரைக்காரன் அசந்துபோனான். மேலும் அவனுக்குத் திரும்பிப் போகவும் விருப்பம் கிடையாது. சூரப்புலியின்மேல் குற்றம் சொல்லிக்கொண்டு துறவி இருந்த இடத்திற்குத் திரும்பி வந்தான். "சுவாமி, இது பொல்லாத நாய். என்னை அல்மோரா போக விடவே யில்லை" என்று சொல்லிக்கொண்டே அவன் சிரித்தான். துறவியும் சிரித்தார். மேலும் ஓர் ஐந்து ரூபாய் இனும் கொடுத்தார். குதிரைக்காரன் அதை வாங்கிக்கொண்டு ஊருக்குள்ளிருக்கும் பலகாரக்கடையை நோக்கிச் சென்றான்.

ஆனால் அவனுடைய தொந்தரவு அத்துடன் முடியவில்லை. தாலைவிட்டு டிட்டிஹட்டை நோக்கிச் செல்லும் வழியிலேயே அவன் மீண்டும் பிணங்கத் தொடங்கினான். ஐந்து மைல் தூரத்திற்கு ஒரே செங்குத்தான மலையின்மீது ஏற வேண்டும். அதிலே கொஞ்ச தூரம் சென்றவுடனே நந்தா தேவி, பஞ்சசூலி, பிண்டாரி என்ற சிகரங்களின் காட்சிகள் தென்பட்டன. அவைகள், இமயத்திலே இருக்கும்படியான உயர்ந்த சிகரங்கள். நந்தாதேவியின் உயரம் 25,000 அடி. இதைப் போலவே மற்ற சிகரங்களும் மிக உயரமானவை. அவைகள் எப்பொழுதும் உறைபனி மூடிக்கிடக்கும். பார்ப்பதற்கு அழகான தெய்விகக் காட்சியாக இருக்கும். அவற்றைக் கண்டதும் துறவி தம்மை மறந்து தியானத்தில் அமர்ந்துவிட்டார். உலக நினைவே அவருக்கு அற்றுப்போய்விட்டது.

அவருடைய நிலைமையைக் கண்டு சூரப்புலி ஆச்சரியத்தோடு படுத்திருந்தது. பிறகு மெதுவாக எழுந்து சுற்றிலும் உள்ள அடர்ந்த மரங்களுக்கிடையே உலாவிற்று. மிக உயர்ந்த மரங்கள் வானத்தை முட்டுவதைப்போல அடர்ந்து இருந்தன. மரக்கூட்டங்களுக்கிடையே வழியே இருக்கவில்லை. செடிகளும் புதர்களும் நெருக்கமாக இருந்தன. காட்டிற்குள்ளிருந்து பலவகையான கொடிய விலங்குகளின் ஒலி முழக்கம் சூரப்புலியின் காதுக்கு

எட்டியது. சூரப்புலி எச்சரிக்கையோடு சுமார் இரண்டு மணி நேரம் காட்டிற்குள் நுழைந்து கவனித்துவிட்டுத் துறவி இருக்கும் இடத்திற்குத் திரும்பிற்று. அப்போதும் துறவி எதிரே காட்சி அளிக்கும் பனிமலைச் சிகரங்களைப் பார்த்துக்கொண்டே அமர்ந்திருந்தார். புறப்பட்டுப்போக வேண்டும் என்று குதிரைக்காரன் அவரை நச்சரித்துக் கொண்டிருந்தான்.

அவன் போடுகின்ற கூப்பாட்டினால் தியானம் கலைந்து துறவி புறப்படத் தயாரானார். ஆனால் கானகத்தைச் சுற்றிவிட்டு வந்த சூரப்புலி அவர் புறப்படுவதைத் தடுத்தது. அவருடைய மேல் அங்கியைப் பிடித்து இழுத்து அங்கேயே இருக்கும்படி வாதாடிற்று. அப்படி அது வாதாடுவதில் ஏதோ ஒரு கருத்து இருக்க வேண்டுமென்று அவர் உணர்ந்தார். துறவிக்கும் அந்த இடத்திலேயே இருந்து பனிச்சிகரங்களைப் பார்த்துகொண்டே இருக்க விருப்பம். அதனால் அவர் குதிரைக்காரனைப் பார்த்து, "அப்பா, இப்பொழுது உச்சி நேரத்திற்கு மேலாகிவிட்டது, இந்த ஏற்றத்தில் ஏறி டிட்டிஹட் போவதற்குள் இருட்டாகிவிடும். ஆகையால் அதோ தெரிகின்றதே அந்தக் குகையிலே தங்கி நாளைக்குக் காலையில் புறப்படலாம்" என்று அவர் சொன்னார், ஆனால், குதிரைக்காரன் அதற்கு இணங்குவதாக இல்லை. உடனே புறப்பட வேண்டும் என்று பிடிவாதம் செய்தான். அங்கேயே தங்க வேண்டுமென்று சூரப்புலி பலவிதமாகத் தன் விருப்பத்தைத் தெரிவித்தது. துறவி அதன் கருத்தைத் தெளிவாக உணர்ந்துகொண்டு அங்கேயே இருக்கத் தீர்மானித்தார்.

"நீங்கள் இங்கேயே இருப்பதானால் நான் குதிரையை மட்டும் ஓட்டிக்கொண்டு புறப்படுகிறேன். நீங்கள் மெதுவாக நாளைக்கு வரலாம். நான் இங்கே இருக்க முடியாது" என்று குதிரைக்காரன் கோபமாகச் சொன்னான்.

"அப்படியானால் நீ குதிரையை ஓட்டிக்கொண்டு போ. டிட்டிஹட்டில் நீ தங்கியிருந்தால் நாளைக்கு நான் வந்து சேருகிறேன்" என்று அமைதியாகச் சொன்னார் துறவி.

"ஒரு நாள் அதிகமானால் சாப்பாட்டுக்கு என்ன செய்வது?" என்று உறுமினான் குதிரைக்காரன்.

"ஒரு நாள் அதிகமானால் ஒரு நாள் கூலியும் அதிகமாகும் அல்லவா? அது போதாது போலிருக்கிறது. அதோடு சேர்த்து

இந்த இருளையும் வைத்துக்கொள்'' என்று சொல்லிக்கொண்டே துறவி பணத்தை நீட்டினர். குதிரைக்காரன் அதை வாங்கிக் கொண்டு குதிரையை ஓட்டிக்கொண்டு புறப்பட்டான். துறவி அமைதி நிறைந்த முகத்தோடு பனிச்சிகரங்களை நோக்கியவாறு அமர்ந்தார்.

சுமார் இரண்டு மணி நேரம் ஆகியிருக்கும். குதிரைக்காரன் கதறி ஓலமிட்டுக்கொண்டு ஓடி வந்தான். அவன் கண்களில் பயம் தாண்டவமாடியது.

“ஐயோ, சாமி, என் குதிரை போச்சே! வேங்கைப்புலி அடித்து விட்டது'' என்று அவன் விம்மி விம்மி அழுதான். சூரப்புலி அங்கேயே தங்க வேண்டும் என்று விரும்பியதன் பொருள் இப் பொழுது துறவிக்குத் தெரிந்துவிட்டது. அந்தப் பகுதியிலே வேங்கைப் புலிகள் அதிகம். மனிதரைக் கொல்லும் ஆட்கொல்லிப் புலிகளும் சில சமயங்களில் அங்கே திரியுமாம். அப்படி வேங்கைப் புலி திரிவதை மோப்பத்தால் அறிந்தே சூரப்புலி மேற்கொண்டு போவதைத் தடுத்திருக்கிறது.

துறவி சூரப்புலியைத் தட்டிக்கொடுத்துவிட்டுக் குதிரைக் காரனுக்கு ஆறுதல் சொல்லத் தொடங்கினர். “சாமி, என் பிழைப்பே போச்சு. நான் இனி எப்படி என் குடும்பத்தைக் காப்பாற்றுவேன்!'' என்று அவன் கண்ணீர்விட்டு அழுதான்.

“அப்பா, கவலைப்படாதே, ஆஸ்கோட்டைக்குப் போனதும் நானே உனக்கு ஒரு குதிரை வாங்கித் தருகிறேன்'' என்று துறவி சமாதானப்படுத்தினர்.

அன்று இரவு குகையிலே தங்கினர்கள். புதிய குதிரை கிடைக்கும் என்ற மகிழ்ச்சியால் குதிரைக்காரன் இப்பொழுது உற்சாகமாகக் காரியங்கள் செய்ய முன் வந்தான். இருட்டாவதற்கு முன்பே காய்ந்த குச்சிகளையும் கட்டைகளையும் பொறுக்கிக்கொண்டு வந்து சேர்ந்தான். சற்று சரிவான பக்கத்திலே ஓடிக்கொண்டிருந்த ஓடையிலிருந்து குடிப்பதற்குத் தண்ணீர் கொண்டுவந்து வைத்தான். இருள் பரவத் தொடங்கியதும் குகைக்கு முன்னல் கட்டைகளைப் போட்டுப் பெரிய தீ உண்டாக்கினன். தீயைக் கண்டால் வனவிலங்கு எதுவும் அருகிலே வராது. அதற்காகவே இந்த ஏற்பாட்டை அவன் செய்தான். அப்படி உண்டாக்கிய தீ வெளிச்சத்திலேயே துறவியும் குதிரைக்காரனும் கோதுமைச் சத்துமா ரொட்டியை உணவாக

உண்டார்கள். சூரப்புலிக்கும் பங்கு கிடைத்தது. இரவிலே குகைக்குள் குதிரைக்காரன் படுத்துத் தூங்கினன். நிலா வெளிச்சத்திலே புது அழகோடு காட்சி அளிக்கின்ற நந்தா தேவியையும். பஞ்சசூலியையும் பார்த்துக்கொண்டு துறவி தீயின் முன்னல் அமர்ந்தார். சூரப்புலி எச்சரிக்கையோடு பக்கத்தில் படுத்திருந்தது.

அடுத்த நாள் காலையிலே குதிரைக்காரன் முன்னல் நடக்கத் துறவி அவன் காட்டிய வழியிலே சென்ருர். சூரப்புலி உற்று நோக்கிக்கொண்டே முன்னலும் பின்னலும் ஓடிக்கொண்டிருந்தது. அடர்ந்த அடவியின் ஒரு பகுதியிலே குறுகலான வழிக்குப் பக்கத்தில் குதிரையின்மேல் ஏற்றிச்சென்ற மூட்டை அலங்கோலமாகக் கிடந்தது. அந்த இடத்திற்குப் போனதும் சூரப்புலி முன்னல் சென்று மோப்பம் பிடித்தது. பிறகு வழியைவிட்டு மரக்கூட்டங்களுக்கிடையே புகுந்து ஒரு புதரை நோக்கிச் சென்றது. துறவியும் குதிரைக்காரனும் அதைத் தொடர்ந்து பின்னல் சென்ருர்கள்.

புதரின் நடுவிலே குதிரை பிணமாகக் கிடந்தது. இரவெல்லாம் அதன் உடம்பைக் கடித்துத் தின்றுகொண்டிருந்த புலி அப்பொழுது எங்கேயோ போய்விட்டது. புலி அங்கேயில்லை என்பதைத் தெரிந்துகொண்டே சூரப்புலி அவர்களை அங்கே அழைத்துச் சென்றது. உடம்பெல்லாம் கிழிபட்டுக் கிடக்கும் குதிரையைக் கண்டதும் குதிரைக்காரன் கதறி அழுதான். துறவி அவனுக்குச் சமாதானம் கூறிக்கொண்டே அந்த இடத்திலிருந்து வழியை நோக்கித் திரும்பி நடந்தார்.

'சாமி, இந்த மூட்டையை நானே தூக்கி வருகிறேன். ஆஸ்கோட் வந்ததும் நீங்கள் சொல்லியபடி ஒரு நல்ல குதிரை வாங்கிக் கொடுங்கள்'' என்று கூறிக்கொண்டே குதிரைக்காரன் மூட்டையை நன்ருகக் கட்டித் தோளில் தூக்கிக்கொண்டான். டிட்டிஹட்டை நோக்கிப் பயணம் தொடங்கிற்று.

டிட்டிஹட்டில் துறவி ஒரு பள்ளிக்கூடத்தில் தங்கினர். ஆசிரியர்களும் மாணவர்களும் அவரைக் கண்டு பணிந்து அவருக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தார்கள்.

அந்த ஊரிலிருந்து ஆஸ்கோட் ஒன்பது மைல் தொலைவில் இருக்கிறது. அங்குச் சென்றதும் துறவி தாம் கூறியவாறு குதிரை ஒன்று வாங்கிக் குதிரைக்காரனுக்குக் கொடுத்தார். அவருடைய கருணையைக் கண்டு குதிரைக்காரன் பிரமித்துப் போனன். கர்ப்பியாங்

என்ற ஊர் வரையில் தானே கூட வருவதாக அவன் துறவியிட தெரிவித்தான். கர்ப்பியாங் அல்மோராவிலிருந்து 150 மை தூரத்திலுள்ளது. கடல் மட்டத்துக்கு மேல் 10,500 அடி உயரத்தி இருக்கிறது. அதற்கு மேலும் 150 மைல் பனிப்பிரதேசத்தி சென்ருல்தான் கயிலாய கிரியைத் தரிசிக்க முடியும்.

குதிரைக்காரன் கர்ப்பியாங் வரையிலும் வரத் தயாரா இருந்தாலும் துறவி அவனை அழைத்துச் செல்ல விரும்பவில்லை அவனுக்கு உண்டான கூலியெல்லாம் கொடுத்துவிட்டுத் தனியாக சூரப்புலியோடு யாத்திரையை மேற்கொள்ளத் தீர்மானித்தார்.

தம்மால் சுமக்கும் அளவிற்குக் கம்பளித் துணிகளையும் உணவு பொருள்களையும் அவர் வைத்துக்கொண்டு மீதியை அந்த ஊரிலேயே எதிர்ப்பட்டவர்களுக்கெல்லாம் கொடுத்துவிட்டார். கையிலே நீளமான ஊன்றுகோல். பக்கத்திலே சூரப்புலி. இவ்வாறு துறவி புறப்பட்டார். இப்படித் தனியாகச் செல்லுவதுதான் அவருக்கு மிகவும் பிடித்தமாக இருந்தது போல் தோன்றிற்று. சூரப்புலிக்கும் இதுவே பிடித்திருந்தது.

ஆஸ்கோட்டையை விட்டதும் 3000 அடிக்கும் அதிகமான ஒரு பெரிய இறக்கம் வருகிறது. அடிமேல் அடி வைத்து அதிலே மூன்றுமைல் இறங்கினுல் கௌரிகங்கை ஓடுமிடத்திற்கு வந்து சேரலாம். நதியோரமாகவே சென்ருல் அந்த நதி காளி கங்கை யோடு கூடுமிடத்தை அடையலாம். அந்த இடத்தில் ஜலஜீ என்ற ஓர் அழகிய சிறு கிராமம் உண்டு. அங்கே ஒரு பெரியாருடைய சமாதியுள்ளது. அத்துடன் சேர்ந்து ஓர் ஆசிரமம் இருக்கிறது. அந்த ஆசிரமவாசிகள் துறவியை அன்யோடு வர வேற்று உபசரித்தார்கள்.

கூடுதுறைக்குப் பக்கத்திலே கௌரிகங்கையின் நடுவிலே ஓர் உயரமான பாறை இருந்தது. மாலை நேரத்தில் அந்த இடம் மிக அழகாக இருந்ததைக் கண்டு துறவி அந்தப் பாறைக்குச் சென்று தனியாக இருந்து தியானம் செய்ய விரும்பினுர். வழக்கம்போல் சூரப்புலி அவர் பக்கத்திலேயே சென்றது.

ஆற்றின் நடுவேயிருந்த பாறையை அடைவது சிரமமா இருக்கவில்லை. ஏனென்ருல் அப்பொழுது ஆற்றில் முழங்கால் அளவுக்குமேல் தண்ணீர் இல்லை. தண்ணீரின் வேகம் சற்று அதிகமாக இருந்தபோதிலும் நடந்து செல்ல முடிந்தது. துறவி சூரப்புலியை அழைத்துக்கொண்டு பாறையை அடைந்

தியானத்தில் அமர்ந்தார். மேற்கு வானத்திலே ஓங்கி நிற்கும் மலைகளுக்கு மேலே சூரியன் இளஞ்சிவப்பாகத் தோன்றினன். மற்ற திசைகளிலெல்லாம் கண்ணுக்கெட்டிய வரையிலும் வானளாவிய கொடுமுடிகள் காட்சியளித்தன. துறவி மெய்ம்மறந்து உலகையும் மறந்து கடவுள் நினைவிலேயே லயித்திருந்தார்.

திடீரென்று மலைமுகடுகளிலே கருமேகங்கள் தோன்றின. ஆரவாரத்தோடு அங்கே மழை பெய்தது. நினைத்துப் பார்க்க முடியாத வேகத்தில் கௌரி கங்கையில் வெள்ளம் பெருகிப் புரண்டோடத் தொடங்கிற்று. துறவி அமர்ந்திருக்கும் கல்மேடையையும் வெள்ளம் எட்டிப் பிடிக்கும் நிலையை அடைந்துவிட்டது. துறவியோ கண்மூடி மெய்மறந்து அசைவற்று வீற்றிருக்கிறார். வெள்ளம் மேடைக்கு மேலே வந்துவிட்டால் பிறகு தப்பிக் கரையேற முடியாது. அவ்வளவு வேகத்தில் வெள்ளம் பெருகிக்கொண்டிருந்தது. சூரப்புலி அந்த அபாயமான நிலையை உணர்ந்தது. துறவியின் அருகே சென்று மெதுவாகக் குரைத்தது. அவர் பாதங்களிலே முன்னங்கால்களை வைத்துத் தட்டியது. ஆனல் துறவியின் தியானம் கலையவேயில்லை. அவரைக் காப்பாற்ற வேண்டுமென்று சூரப்புலி துடித்தது.

ஆனல் நிஷ்டை கலைந்து எழுந்தாலும் வெள்ளம் இருக்கின்ற அந்த நிலையிலே ஆற்றிலே நடந்தோ நீந்தியோ கரையை அடைவதென்பது இயலாத காரியம். மனிதனுடைய சக்தியை மீறிவிட்டது வெள்ளத்தின் வேகம். அதை உணர்ந்துகொண்ட சூரப்புலி ஆற்று வெள்ளத்தில் பாய்ந்து குதித்தது. தன்னுடைய பலத்தையெல்லாம் உபயோகப்படுத்தி ஜலஜீவி கிராமத்தை நோக்கி நீந்தத் தொடங்கிற்று. வெகுதூரம் ஆற்ரேடு சென்று எப்படியோ கரையை அடைந்துவிட்டது. அங்கிருந்த ஆசிரமத்திற்கு நாலுகால் பாய்ச்சலில் சென்று ஆசிரமவாசிகளின் முன்னல் பரபரப்போடு குரைத்துக்கொண்டும் கௌரிகங்கையை நோக்கி ஓடுவதுபோலவும் பாவனை செய்து அங்கும்இங்கும் அலைந்தது. அதன் செய்கையைக் கண்ட ஆசிரமவாசிகள் சந்தேகமடைந்தார்கள். துறவியில்லாமல் நாய்மட்டும் தனியாக வந்திருப்பதால், அவர் எங்கே என்று கவலையுங் கொண்டார்கள். சூரப்புலி ஒருவருடைய ஆடையைப் பிடித்து ஆற்றை நோக்கி இழுத்தது. “இது எங்கேயோ பிடித்து என்னைக் கூப்பிடுகிறது. கூடப்போய்ப் பார்க்கலாம்” என்று சொல்லிக் கொண்டே அவர் புறப்பட்டார். அவருடன் கூடவே வேறு இரண்டு பேர்களும் கிளம்பினர்கள்.

சூரப்புலி வேகமாக முன்னால் ஓடிற்று, கௌரிகங்கையில் துறவி அமர்ந்திருக்கும் பாறைக்கு எதிராகக் கரையிலே வந்து நின்று பலமாகக் குரைத்தது. துறவிக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தான நிலைமையை ஆசிரமவாசிகள் உணர்ந்துகொண்டார்கள். மனிதனால் இப்பொழுது செய்யக்கூடிய உதவி என்னவென்று ஒரு கணம் யோசித்தார்கள். துறவியைக் காப்பாற்றுவதற்கு மனிதனால் முடியாது. ஆனால் இந்த நாயால் ஒரு வேளை முடியலாம் என்று அவர்களுக்குத் தோன்றிற்று. உடனே ஒருவர் ஆசிரமத்திற்கு ஓடிப்போய் ஒரு நீளமான நூல் கயிற்றை எடுத்து வந்தார். அதன் ஒரு நுனியைச் சூரப்புலியின் கழுத்திலே பட்டைபோலச் சுற்றிக் கட்டினார். துறவி வீற்றிருக்கும் பாறையை நோக்கிச் செல்லுமாறு பிறகு பணித்தார். சூரப்புலியும் அவருடைய கருத்தை உணர்ந்து கொண்டு வெள்ளத்தில் குதிக்கத் தயாராயிற்று.

"நேராக இங்கிருந்து நீந்தித் துறவியிருக்குமிடத்திற்குச் செல்வதென்பது இயலாத காரியம். கரையிலே கொஞ்ச தூரம் மேலே சென்று அங்கிருந்து நாயை விடலாம்" என்று மற்றொருவர் யோசனை கூறினார். அவசரத்திலே தோன்றிய அந்த யோசனைதான் சரியென்று மூவரும் சூரப்புலியை அழைத்துக்கொண்டு சுமார் நூறு கஜ தூரம் மேலே சென்று சூரப்புலியை வெள்ளத்திலே நீந்திப் போகுமாறு ஏவினார்கள். சூரப்புலியும் உற்சாகமாகத் தண்ணீரில் பாய்ந்து நீந்திற்று. கரையிலிருந்துகொண்டு ஆசிரமவாசிகள் நூல் கயிற்றை வேண்டிய அளவிற்கு ஆற்றில் விட்டுக்கொண்டிருந்தனர்.

அதற்குள்ளே வெள்ளம் துறவி வீற்றிருந்த மேடையை முழுகடிக்கும் நிலையை யடைந்துவிட்டது. வெள்ளம் பட்ட உணர்ச்சியால் தியானம் கலைந்து துறவி எழுந்து நின்றார். ஆசிரம வாசிகள் கவலையோடு நிற்பதையும் சூரப்புலி வெள்ளத்திலே நீந்து வதையும் அவர் கண்டார். ஆபத்திலே அவர் கலங்கவில்லை. என்றும் போல வழக்கமான புன்னகைதான் அவர் முகத்திலே விளையாடியது. "கௌரி அன்னை என்னோடு விளையாடுகிறாள்" என்று சொல்லிக் கொண்டு கைகொட்டிச் சிரித்தார். வெள்ளம் அவருடைய பாதங்களை மறைத்தது.

சூரப்புலி வேகமாக நீந்திற்று. வெள்ளம் அதன் பலத்தை யெல்லாம் பரிசோதித்தது. சில சமயங்களில் வெள்ளத்தில் ஏற்படும் சுழிகள் சூரப்புலியை உள்ளே அழுத்தின. பாறைகளிலே சில சமயங்களில் சூரப்புலியை மோதியடித்தன. இருந்தாலும்



தளர்ச்சியடையாமல் சூரப்புலி நீந்திற்று. கரையிலே நின்று ஆசிரமவாதிகள் கயிற்றை மெதுவாகத் தண்ணீருக்குள் விட்டுக் கொண்டிருந்தார்கள். கழுத்திலே கட்டிய கயிற்ருேடு சூரப்புலி துறவியை அடைந்துவிட்டால் அவர் கயிற்றைப் பிடித்துக்கொள்ள லாம். பிறகு, கரையிலிருக்கும் மூவருமாகச் சேர்ந்து கயிற்றை இழுத்துத் துறவியைக் கரைசேர்த்துவிடலாம். அதுதான் அவர் களுடைய திட்டம்.

ஆனல், அவர்கள் எண்ணியவாறு காரியம் நடைபெறவில்லை. நூறு கஜத்திற்கு ஆற்றின் மேல் பக்கமாக வந்து அதில் குதித்த போதிலும் சூரப்புலியால் துறவியிருக்குமிடத்தை அடைய முடிய வில்லை. அவருடைய கைக்கு எட்டாத தூரத்திலேயே சூரப்புலி வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்பட்டது. சூரப்புலி எவ்வளவோ முயன்றும் அவரை அணுக முடியவில்லை. ஆசிரம வாசிகள் தங்கள் கணக்குத் தவறு என்று உணர்ந்துகொண்டார்கள். உடனே வேகமாகக் கயிற்றை இழுத்தார்கள். கயிற்ருேடு சூரப்புலி யும் வந்தது. அது கரையை யடைந்ததும் ஆசிரமவாசிகள் மறு படியும் அதை அழைத்துக்கொண்டு ஆற்றின் ஓட்டத்திற்கு எதிர்த் திசையிலே மீண்டு ஓடினர்கள். இந்தத் தடவை துறவி யிருக்கும் இடத்திற்கு மேலே இரு நூறு கஜம் வந்தார்கள். அங்கிருந்து

மீண்டும் சூரப்புலியை ஆற்றில் விட்டார்கள். சூரப்புலி அவர்களுடைய கருத்தை நன்ருகப் புரிந்துகொண்டது. மறுபடியும் உற்சாகமாக வெள்ளத்தை எதிர்த்து நீந்தியது.

இந்த முறை அதற்கு வெற்றி கிடைத்துவிட்டது. துறவியின் கையில் அகப்படுமாறு அதனல் நீந்திச் செல்ல முடிந்தது. அதற்குள்ளே அது மிகவும் சோர்வடைந்துவிட்டது. பாறைகளில் மோதிக் கன்னப் பகுதியிலே நல்ல அடியும் பட்டிருந்தது. ஆனல் எப்படியோ சமாளித்துக்கொண்டு துறவியை அது அடைந்து விட்டது. சூரப்புலி அங்கு வந்து சேருவதற்குள் பாறை மீது வெள்ளம் முழங்கால் அளவிற்கு வந்துவிட்டது. துறவி பாறைமீது நின்று சமாளிப்பதே பெரும் சிரமமாக இருந்தது. அந்த நிலையிலே சூரப்புலியைக் கண்டார். "கயிற்றைப் பிடித்துக்கொள்ளுங்கள்" என்று கரையில் நின்ற மூவரும் ஒரே மூச்சில் கூவினர்கள். 'கௌரிமாதா' என்று சொல்லிக்கொண்டே துறவி கயிற்றைப் பிடித்தார். மறு நிமிஷத்திலே அன்னையின் நினைவிலே அவர் உலகத்தை மறந்தார்.

கரையிலிருந்த ஆசிரமவாசிகள் மூவரும் சேர்ந்து கயிற்றைக் கெட்டியாகப் பிடித்து நின்றுர்கள். அவர்களுடைய பலத்தையெல்லாம் சோதிப்பதுபோல வெள்ளம் இழுத்தது. பக்கத்திலிருந்த ஒரு மரத்தோடு கயிற்றை அணைத்துப் பிடித்துக்கொண்டு மெதுவாக இழுத்தார்கள். வெள்ளத்தின் வேகமே துறவியையும் சூரப்புலியையும் கரைப்பக்கமாகத் தள்ளலாயிற்று. கரைக்குப் பக்கமாக வரவர இழுப்புக் குறைவதால் கரையில் இருப்பவர்களுடைய முயற்சி ஓங்கி விட்டது. அவர்கள் உற்சாகத்தோடு இழுத்தார்கள். துறவி சூரப்புலியோடு கரையை யடைந்தார். ஆனல் அந்த நிலையிலும் அவர் தியானம் கலையவில்லை. அன்னையின் திருவிளையாடலை எண்ணிக் களித்த அவருடைய உள்ளம் அன்னையின் நினைவிலேயே ஒன்றி யிருந்தது. கைமட்டும் கெட்டியாகக் கயிற்றைச் சுற்றிப் பிடித்திருந்தது. சூரப்புலி .வெள்ளத்தை எதிர்த்துப் போராடியதால் உணர்வற்ற நிலையில் இருந்தது.

சூரப்புலியின் சோர்வை அகற்றுவதற்காக இரண்டு நாட்கள் ஜலஜீவி ஆசிரமத்திலேயே தங்கவேண்டியதாயிற்று. பிறகு துறவி கயிலாயகிரியை நோக்கித் தமது யாத்திரையைத் தொடர்ந்தார். பலவக் கோட்டையைக் கடந்து டார்ச்சுலாவை நோக்கி துறவி நடக்கலானர். இந்தப் பகுதியிலே பெரிய ஏற்றங்களோ இறக்கங்களோ

இல்லாவிட்டாலும் சிறு சிறு குன்றுகளின்மேல் ஏறியும் இறங்கியும் கால்நடைப்பாதை சென்றுகொண்டிருந்தது. பல ஓடைகளையும் வழியிலே கடக்க வேண்டும். அந்த ஓடைகள் எல்லாம் கீழே வெகு தூரத்தில் ஓடிக்கொண்டிருக்கும் காளிகங்கையில் போய்ச் சேருகின்றன. அவற்றைக் கடக்க மரப்பாலங்களும், ஊஞ்சல் பாலங்களும் சில இடங்களிலே இருக்கின்றன. சிலவற்றைத் தண்ணீருக்குள் இறங்கியே கடக்க வேண்டும். பனி உருகுவதால் வருகின்ற தண்ணீராகையால் தொட்டால் ஜில்லென்று கை மரத்துப்போகும்படி இருக்கும். அவற்றையெல்லாம் கடப்பதிலே துறவிக்கு ஒரே உற்சாகமாக இருந்தது. விளையாட்டுப்போல அவற்றைக் கடந்து துறவி நடந்தார். சூரப்புலி துள்ளிக் குதித்துக்கொண்டு பக்கத்திலேயே சென்றது. நாலு பக்கங்களிலும் கண்ணுக்கெட்டிய தூரம் உயர்ந்து விளங்கும் மலைகளும் அவற்றிற்கிடையே உள்ள ஆழமான பள்ளத்தாக்குகளுமாக அப்பகுதி காட்சியளித்தது. சில பகுதிகளிலே தேவதாரு மரங்கள் உயர்ந்து வளர்ந்து அழகாகத் தோன்றின. உயர்ந்த மலைகளுக்குப் பின்னால் எல்லை கடந்த இமய மலையிலே ஆகாயத்தை முட்டும்படி நிற்கும் பனிச்சிகரங்கள் இந்தப் பகுதியில் கண்ணுக்குத் தென்படவில்லை. மனிதனையோ வேறு விலங்குகளையோ அந்தச் சமயத்தில் காண முடியவில்லை. குன்றுகளிடையே அறுத்துக்கொண்டு கற்களையும் மரங்களையும் அடித்துக் கொண்டு வேகமாக ஓடும் ஓடைகளின் எதிரொலிதான் எப்பொழுதும் கேட்டுக்கொண்டிருந்தது.

ஒரு பகுதியிலே இரண்டு சிறிய குன்றுகளுக்கிடையே ஓடுகின்ற ஒரு பெரிய ஓடை குறுக்கிட்டது. அந்த ஓடையிலே எப்பொழுதும் தண்ணீர் இராது. தண்ணீர் ஓடினாலும் ஆழம் அதிகமிராது. ஆனால் துறவி அதை அணுகும்போது அதில் வெள்ளம் கொந்தளித்துக் கொண்டு கரைபுரண்டு ஓடிற்று.

இமயமலையிலே ஏதாவதொரு பகுதியிலே திடீரென்று மேகம் கூடி இடியோடும் மின்னலோடும் மழை பெய்யும். இடியோசை மலைச்சாரல்களிலே எதிரொலித்து நிலப்பகுதியே நடுங்கும்படியாக இருக்கும். ஊழிக்காலமே வந்துவிட்டதுபோல் தோன்றும். அவ்வாறு இடியிடித்து மழை பெய்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம் மேகக் கூட்டங்கள் மறைந்துபோகும். அவ்வாறு பெய்த மழையால்தான் இப்பொழுது அந்த ஓடையில் வெள்ளம் பெருகிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது. அதைக் கடப்பதற்கு அருகிலே பாலம் எதுவு

மில்லை, சில இடங்களிலே ஓடையின் நடுவில் பெரிய பெரிய கற்களைப் போட்டு வைத்திருப்பார்கள். அவற்றின் மேலே நடந்து ஓடையைக் கடக்கலாம். ஆனால் இந்த ஓடைக்கு அம்மாதிரி கல்பாலமும் இல்லை. துறவி ஓடையின் கரையோரமாகவே கொஞ்ச தூரம் நடந்தார். மறுபடியும் வெள்ளத்திலே அகப்பட்டு ஆபத்துக்குள்ளாவாரோ என்று சூரப்புலி கவலை யடைந்தது. வெள்ளம் தணியும் வரையில் அங்கேயே காத்து இருக்கலாம் என்று கூறுவதுபோல நடந்துகொண்டது. அங்கேயே இருந்தால் கொஞ்ச நேரத்திற்குள் இருள் பரவிவிடும். தங்குவதற்கு வசதியாக மலைக் குகையோ வேறிடமோ இல்லை. அதனால் துறவி கரையோரமாகவே சுமார் அரை மைல் நடந்தார். ஓரிடத்திலே ஓடையின் இரண்டு கரைகளுக்கும் இடையிலே உயரமாக நின்ற பாறைகளை ஒன்று சேர்ப்பதுபோல ஒரு பெரிய கயிறு கட்டப்பட்டிருந்தது. அந்த இடத்தில் ஓடையின் அகலம் சுமார் நூற்றைம்பது அடியிருக்கும். பாறைகளுக்கிடையே 200 அடி ஆழத்தில் வெள்ளம் பயங்கரமாக ஓசையிட்டுக்கொண்டு ஓடிற்று.

துறவி அந்த இடத்திற்கு வந்ததும் பாறையிடுக்குகளிலே வளர்ந்திருந்த நீளமான மலைப்புல்லைப் பிடுங்கி வந்தார். அப்புல்லைக் கொண்டு இரண்டு கயிறுகள் திரித்தார். ஒரு கயிறு குட்டையானது. ஆனால் அதைக் கையளவு பருமன் உள்ளதாகச் செய்தார். மற்றொரு கயிற்றைப் பெருவிரல் கனத்திற்கு வெகு நீளமாக இருக்கும்படி செய்தார். முதலில் தம் முதுகின் மேலிருந்த மூட்டையை ஓடைக்கு மத்தியில் தொங்கிக்கொண்டிருந்த பெரிய கயிற்றில் தொங்குமாறு கட்டி வைத்தார். அவர் திரித்த நீளமான சிறிய கயிற்றின் ஒரு நுனியை மூட்டையின் மேல் பாகத்திலே நன்றாகக் கட்டி வைத்தார். பிறகு கவையாகப் பிரிந்துள்ள ஒரு கெட்டியான மரக்கிளையை ஒடித்து வந்தார். அதை ஒழுங்கு செய்வதற்கு அவரிடத்தில் இருந்த சிறிய கத்தியைத் தவிர வேறு கருவியில்லை. அதைக்கொண்டே மெதுவாகச் சீவிக் கவையை ஒழுங்குபடுத்தினார். கவைப்பகுதியை ஓடையின் குறுக்கே கட்டியுள்ள கயிற்றிலே வைத்து அதன் இரண்டு நுனிகளையும் ஒன்றாகச் சேர்க்குமாறு தாம் திரித்த கனமான கயிற்றை உறுதியாகக் கட்டினார். அந்தக் கவை ஓடையின் மத்தியில் இருக்கும் பாலக் கயிற்றின் மேலும், திரிக்கப்பட்ட கயிறு அதன் இரு பக்கங்களில் தொங்கும் ஊஞ்சல்போலவும் அமைந்தன. தொங்கும் கயிற்றிற்குள்ளே புகுந்து கவைப்பகுதி கயிற்றின் மேலேயிருக்குமாறும் தம் முதுகிலே புல்லால் திரித்துத் தயாரித்த கயிறு இருக்கும்

படியாகவும் வைத்துக்கொண்டார். ஓடையின் பாலக் கயிற்றை இரண்டு கையாலும் பிடித்தார். பிறகு லாகவமாகக் கால்களிரண்டையும் தூக்கி அந்தக் கயிற்றிலேயே பின்னிக்கொண்டார். அவரே இப்பொழுது ஓர் ஊஞ்சல்போலப் பாலக் கயிற்றில் தொங்கிக்கொண்டிருந்தார். தமது மார்பின் மேலே ஏறிப் படுத்துக்கொள்ளும்படி சூரப்புலிக்குச் சமிக்ஞை செய்தார். சூரப்புலி அவருடைய எண்ணத்தை உணர்ந்துகொண்டது. தாவிக் குதித்து ஏறி அவர் மார்போடு சேர்ந்து படுத்தது. மூட்டையில் சேர்த்துக் கட்டிய சிறிய கயிற்றின் மற்றெரு நுனியைத் துறவி தம் பல்லிலே கடித்துப் பிடித்துக்கொண்டார். கைகளால் பாலக் கயிற்றை மாறி மாறி எட்டிப் பிடித்து அதன் வழியாகவே செல்லத் தொடங்கினர். மரக் கவை அவருடைய பாரத்தைத் தாங்கிக்கொண்டு கயிற்றின் வழியாகச் சுலபமாக வழுக்கிக்கொண்டே வந்தது. கைகளையும் கால்களையும் மாற்றிமாற்றி எடுத்து வைத்து, அணில் மரக்கிளையின் அடிப் பாகத்தைப் பற்றிக்கொண்டு முன்னேறிச் செல்வதுபோல அவர் சென்ருர். கீழே பயங்கரமான ஆழத்திலே ஓடை உறுமிக்கொண்டு சென்றது. பலமுறை இவ்வாறு ஓடையைக் கடந்து பழக்கப்பட்டவர் போலத் துறவி லாகவமாகக் கயிற்றிலே தொங்கிக்கொண்டு சென்று அக்கரை சேர்ந்தார். சேர்ந்தவுடனே சூரப்புலியை முதலில் குதிக்கச் செய்துவிட்டுப் பிறகு அவர் தரையிலே காலெடுத்து வைத்தார். பிறகு பல்லிலே கடித்திருந்த கயிற்றைப் பிடித்து மெதுவாக இழுக்கலானுர். அக்கரையிலே கயிற்றுப் பாலத்திலே தொங்கிக்கொண்டிருந்த மூட்டை இப்பொழுது மெதுவாக ஓடையைக் கடந்து அந்தரத்திலே பிரயாணம் செய்யலாயிற்று. அதைப் பார்த்து சூரப்புலி ஆச்சரியமடைந்தது. துறவி முன்பே ஒன்றிரண்டு முறையாவது கயிலாய யாத்திரைக்கு வந்து பழகியிருக்க வேண்டும் என்று தோன்றியது.

மூட்டையும் வந்து சேர்ந்தது. அதையெடுத்து முதுகிலே கட்டிக்கொண்டு ஊன்றுகோலை ஒரு கையில் பிடித்துக்கொண்டு துறவி நடக்கலானுர். சுமார் ஒரு மைல் நடந்ததும் டார்ச்சுலா என்னும் ஊர் கண்ணுக்குத் தோன்றியது. அது பெரிய வாணிக மையம். நல்ல மைதானத்திலே அமைந்திருந்தது. பல தர்மசாலைகள் அங்கே உண்டு. அவற்றில் ஒன்றிலே துறவி அன்றிரவு தங்கினர்,

டார்ச்சுலாவிலிருந்து மறுநாள் அதிகாலையிலேயே துறவி புறப்பட்டார். கடுமையான ஏற்றங்களையெல்லாம் இனிக் கடந்தாக வேண்டும். மூச்சுத் திணறும்படியான செங்குத்துப் பாதை இருந்தது, அதையடுத்து ஒரே இறக்கம். ஏற்றத்திலே ஏறித் தளர்ந்துபோனதில் கால்களுக்கு இறக்கத்திலும் பெரிய சோதனை ஏற்படும். அப்பொழுதெல்லாம் கால்களைவிடக் கையிலுள்ள ஊன்றுகோல்தான் அதிகமாகப் பயன்படும். இவ்வாறு சிரமப்பட்டுச் சென்று கேலா, சிர்க்கா, ஜிப்தி முதலிய ஊர்களைக் கடக்க மூன்று நாட்கள் ஆயின. வழியின் பல பாகங்களிலே ஆழத்திலே ஓடும் காளிகங்கை காட்சியளித்தது.

ஜிப்தியிலிருந்து துறவி புறப்பட்டவுடன் மழை தூற ஆரம்பித்துவிட்டது. அதைப் பொருட்படுத்தாமல் துறவி நடந்தார், தூரத்திலே மலை உச்சியிலே கருமேகங்கள் திரண்டு மழை கொட்டுவது போலத் தோன்றியது. நிர்ப்பானி மலையின் சிகரங்கள் இடது பக்கத்திலே செங்குத்தாக வானத்தைத் தழுவுவன போல நின்றன ; கால் நடைப்பாதை அந்த மலையின் நடுப்பகுதியிலே சென்றது. கீழே மூவாயிரம் அடிக்கு ஒரே இறக்கம். இறக்கத்தின் கீழே காளிகங்கை பாதாளத்தில் ஓடுவதுபோல உக்கிரமாக ஓடிக்கொண்டிருந்தது. மேலே தலையை நிமிர்ந்து பார்த்தாலும் உச்சி கண்ணுக்குத் தெரியாத செங்குத்தான மலை. கீழே ஒரே கிடுகிடு பாதாளம். இவற்றினிடையே துறவி உயரமான ஏற்றத்திலும் இறக்கத்திலுமாக அடிமேல் அடி வைத்துச் சென்றுகொண்டிருந்தார். தூறல் பெருமழையாகப் பிடித்துக்கொண்டது. ஓர் இடத்திலே செல்லும்போது முன்னால் சென்ற சூரப்புலி சட்டென்று திரும்பி ஓடி வந்தது. துறவியின் நீண்ட அங்கியைப் பிடித்து வேகமாகப் பின்னுக்கு இழுத்தது. பாதையிலே திரும்பி ஓட வேண்டுமென்பது அதன் எண்ணம். துறவி அதைப் புரிந்துகொண்டார். அதன் விருப்பப்படியே ஓடலானார். சூரப்புலியும் பின்னாலேயே ஓடி வந்தது.

இவ்வாறு முந்நூறு கஜத்திற்கு ஓடியிருப்பார்கள். அங்கே மலையின் மேல்பகுதி முன்னால் நீட்டிக்கொண்டு ஒரு குடைபோல அமைந்திருந்தது. பாதையின் அருகிலே குகைபோலவும் தோன்றியது. சூரப்புலி அதற்குள்ளே புகுந்தது. துறவியும் பின்னாலேயே சென்றார். பூமியே அதிரும்படியாக அந்தச் சமயத்திலே ஓசை கேட்டது. பெரிய பெரிய பாறைகள் தடால் தடால் என்று மோதிக்கொண்டு விழுந்து உருண்டன. குகைக்குள்ளிருந்து துறவி எட்டிப்

பார்த்தார்; அவர்கள் முன்னால் சென்று திரும்பிய பகுதியிலே மேலிருந்து மலை சரிந்து காளிகங்கையை நோக்கி விழுந்துகொண்டிருந்தது. மரங்களும் கற்களும் தலைகீழாகப் பறந்தன. சரிகின்ற மண்ணிலே புகைபோலப் புழுதி கிளம்பியது. துறவி தங்கியிருந்த குகைப்பகுதியும் நடுங்கத் தொடங்கியது. ஆனால் நல்ல வேளையாக அந்தப் பகுதி சரியவில்லை.

இமயமலைச் சாரல்களிலே இவ்வாறு குன்றுகளும் மலைப்பகுதிகளும் அடிக்கடி இடிந்து விழுவதுண்டு. பெரிய மழைக்குப் பிறகு இடிசல் அதிகமாக இருக்கும். அதிலே அகப்பட்டவர்கள் கதி அதோ கதிதான். துறவிக்கு முன்னால் சென்ற சூரப்புலி இடிசல் ஏற்படுவதை முன் கூட்டியே உணர்ந்துகொண்டது. தரைப்பகுதி லேசாக அதிர்ச்சி கொள்வதை அதன் பாதங்கள் தெரிந்துகொண்டன. நீலகிரி மலைச்சாரல்களிலே சிறிய இடிசல்கள் ஏற்படுவதை அது கண்டிருக்கிறது. அந்த அனுபவம் அதற்கு இப்பொழுது உதவிற்று. அதனால் சூரப்புலி தன் உயிர் தப்பியதோடு துறவியையும் காப்பற்ற முடிந்தது.

துறவி சூரப்புலியைத் தட்டிக் கொடுத்தார். சுமார் ஒரு மணி நேரம் அந்தக் குகையிலேயே இருக்கவேண்டியதாயிற்று. பெரிய இடிசல்களுக்குப் பிறகு சிறிய அளவிலே மண்ணும் கல்லும் சரிந்துகொண்டேயிருந்தன. அப்படிச் சரிவது நின்ற பிறகு துறவி யாத்திரையைத் தொடர்ந்தார். மால்ப்பா கிராமத்திற்குப் பக்கத்திலே ஒரு பெரிய குகையுண்டு. அன்றிரவு துறவி அங்குத் தங்கினார்.

மால்ப்பாவிலிருந்து கர்ப்பியாங் பன்னிரண்டு மைல். பல ஏற்றங்களுக்குப் பிறகு அந்த ஊரைச் சேர வேண்டும். பல இடங்களிலே வழி ஒற்றையடிப் பாதைக்குமேல் இராது. எதிரிலே வியாபாரிகளின் ஆட்டு மந்தைகளும் குதிரைகளும் வரும். திபெத்தில் இருந்து வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கும். அவற்றுக்கு வழி விட்டுப் பாறையோடு பாறையாக ஒட்டி நின்றுகொள்ள வேண்டும். இவ்வாறு பன்னிரண்டு மைல் நடந்து துறவி கர்ப்பியாங்கை அடைந்தார்.

கர்ப்பியாங் கடல்மட்டத்திற்கு மேல் பத்தாயிரத்து ஐநூறடி உயரத்தில் இருக்கிறது; இனிமேல் கயிலாயகிரிக்கு அந்த உயரத்திற்கு மேலுள்ள பகுதியில்தான் பிரயாணம் செய்ய வேண்டும். ஆதலால், யாத்திரையின் போக்கே அது முதல் மாறிவிடும். சூரப்புலி

தன் வாழ்க்கையில் எத்தனையோ அனுபவங்களைப் பெற்றிருக்கிறது. இதுவரையினும் இல்லாத ஒரு புதிய அனுபவம் சூரப்புலிக்கு இப்பொழுது காத்துக்கொண்டிருந்தது.

அல்மோராவிலிருந்து சுமார் 150 மைல் தூரம் வந்தாகிவிட்டது. இன்னும் 150 மைல் போனால்தான் கயிலாய கிரியை அடையலாம். கர்ப்பியாங்கோடு இந்தியாவின் எல்லை முடிகின்றது. அதற்குமேலே இருக்கும் பகுதி திபெத்து.

திபெத்தைவிட உயரமான பீடபூமி இருப்பது அரிது. குளிர் காலத்திலே ஒரே வெளுப்பாக உறைபனியால் மூடிக் கிடக்கும். அந்தச் சமயத்திலே அங்குப் புல், பூண்டு எதுவும் இராது. ஒரே பனிப் பாலைவனம் என்று அதைச் சொல்லலாம். வெயிற்காலத்திலே உறைபனி உருகி ஓடைகளாகவும் ஆறுகளாகவும் ஓடும். அப்போதுங்கூட எல்லாப் பகுதிகளிலும் உறைபனி உருகாது. தாழ்வான பகுதிகளில் மட்டும் தரையைக் காணலாம். குன்றுகள் சிலவும் உறைபனி இல்லாமல் வெறும் மொட்டைப் பாறைகளாகக் காணப்படும். சில குன்றுகளின் உச்சியிலேயிருக்கும். நிறையத் தயிரை ஊற்றி வைத்ததுபோல் உறைபனி மூடி, தரையிலே சில இடங்கள் மண் உள்ளதாகத் தோன்றும். ஆனால், அதன் அடியிலே உறைபனிப் பாறைகள் படலம் படலமாக இருக்கும். அவற்றின் அடிப்பகுதியிலே தண்ணீர் உருகி ஊற்றுப்போல வெளிவரும். உயர்ந்த மலைச்சிகரங்களுக்கு இடையிலே தேங்கிக் கிடக்கும் உறைபனி வெய்யிற்காலத்திலே உருகுவதால் உறைபனிப் படலமே ஒரு சிறிய மலை கீழே நகர்ந்து வருவதுபோல வேகமாக வருவதுண்டு. அந்தச் சமயத்திலே அதில் அகப்பட்டவர்கள் உறைபனிக்குள் அப்படியே மூழ்கிப் போய்விடுவார்கள்.

மேலும் திபெத்துப் பகுதியிலே அடிக்கடி உறைபனி பெய்யத் தொடங்கிவிடும். காற்றிலே இலவம் பஞ்சு மிதந்து வருவது போல இந்த உறைபனி மிதந்து வந்து தரையில் விழும். கொஞ்ச நேரத்தில் தரை எல்லாம் பஞ்சுப் பொதிகள் மூடியதுபோல ஒரே வெளுப்பாக மாறிவிடும். அந்தச் சமயத்திலே அதன் வழியாகச் செல்வது மிகவும் கஷ்டம்; குளிரும் பொறுக்க முடியாது. அத்துடன் வேகமாகப் புயற்காற்றும் அடிக்கத் தொடங்கிவிடும். அந்தக் காற்று முகத்திலேயும் கைகளிலேயும் பட்டால் தோல் வெடித்துக் கறுத்துப் போகும். சில சமயங்களில் ஆலங்கட்டி மழை பெய்யத்

தொடங்கிவிடும். அதில் அகப்பட்டுக்கொண்டால் துன்பம் இன்னும் அதிகமாக இருக்கும்.

இந்த மாதிரியான வழியிலே தங்க வசதி ஒன்றும் இராது. மலைகளில் உள்ள குகைகளில் தங்கலாம், அல்லது கூடாரமடித்து அதில் தங்கலாம். கர்பியாங்கில் கூடாரம் விற்கும். அதை வாங்கிச் செல்ல வேண்டும். துறவி அப்படி ஏற்பாடு ஒன்றும் செய்து கொள்ளவில்லை. மேலும், திபெத்துப் பகுதியிலே திருடர் பயம் அதிகம். கம்பாக்கள் என்ற கொள்ளைக் கூட்டத்தார்கள் பனிப் பிரதேசத்தில் சுற்றிக்கொண்டிருப்பார்கள். பகலிலே பிச்சைக்காரர்களைப்போல ஒன்றிரண்டு பேராக வந்து, யாத்திரை செய்வோரை அணுகிப் பிச்சை கேட்பார்கள். பிறகு, இரவிலே கொள்ளை அடிப் பார்கள். அந்தப் பகுதியிலே கம்பளி உடை மிகத் தேவையானது. அதைக் கைப்பற்றக் கொலை செய்யவும் அவர்கள் அஞ்சமாட்டார்கள். உணவுப் பொருள்களுக்காகவும் எதுவும் செய்யத் தயாராக இருப் பார்கள். ஆதலால், கர்பியாங்கிலிருந்து புறப்படுகின்றவர்கள் ஒன்று சேர்ந்து கூட்டமாகவே செல்லுவார்கள். கூட்டமாகக் கூடாரமடித்து வழியிலே தங்குவார்கள். கயிலாய கிரிக்கு வழிகாட்டுவதற்காகவும் தங்களைப் பாதுகாப்பதற்காகவும் ஆட்களுக்குப் பணம் கொடுத்துக் கர்பியாங்கிலிருந்து கூட்டிக்கொண்டு போவார்கள். துறவி அந்த ஏற்பாட்டையும் செய்துகொள்ளவில்லை. எந்த யாத்திரைக் கூட்டத் துடனும் சேர்ந்துகொள்ளவில்லை. அவர் கர்ப்பியாங்கிலிருந்து புறப் படுகின்ற காலத்தில் கயிலாய கிரி யாத்திரையை முடித்துக்கொண்டு அனைவரும் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது யாத்திரை போகின்றவர்களே தென்படவில்லை. வேண்டுமென்றே துறவி அந்தக் காலத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

கடல்மட்டத்திலிருந்து 10,000 அடிக்கு மேலே செல்லும்போது காற்று லேசாக இருப்பதால் மூச்சு விடுவது சிரமமாக இருக்கும். ஏற்றங்களிலே ஏறும்போது மூச்சுத் திணறும்; தலை சுற்றும்; நெஞ்சு படபடவென்று அடித்துக்கொள்ளும். உடம்பின் சுமையே பெரிதாகத் தோன்றும். அதனால் மூட்டைகளைச் சுமந்துகொண்டு செல்லுவது மிகவும் கஷ்டம். அதனால் மூட்டை சுமப்பதற்குக் குதிரைகளையும் யாக் என்னும் கவரிமாடுகளையும் ஏற்பாடு செய்துகொள்வார்கள்.

கவரிமாடு என்பது மிகவும் பலம் வாய்ந்தது. அதன் உடம்பெல்லாம் சடை சடையாக மயிர் நீண்டு வளர்ந்து தொங்கும்

அது முரட்டுக் குணம் உடையது. அதன் வாலில் குதிரை வால்போல மயிர் அடர்த்தியாக இருக்கும். அதைக் கொண்டுதான் நமது கோயில்களில் பயன்படுத்தும் வெண்சாமரம் செய்கிறார்கள். கவரி மாட்டின் பாலையும் வெண்ணெயையும் திபெத்தியர்கள் உணவாகக் கொள்வார்கள். வெண்ணெயை உண்பதோடு முகத்திலும் பூசிக் கொள்வார்கள்.

துறவி, குதிரையோ கவரிமாடோ ஏற்பாடு செய்துகொள்ளவும் இல்லை. சில கம்பளித்துணிகளையும் போர்வைகளையும் கோதுமை மா, சத்துமா அடங்கிய தகர டப்பாக்களையும் மூட்டையாகக் கட்டிக் கொண்டார். ஆபத்திற்கு உதவும் மருந்துப் புட்டிகளையும் சூரப்புலிக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் மூட்டையில் வைத்துக்கொண்டார். கயிற்றுப் பாலத்திலே மூட்டையைக் கடத்துவதற்காக மலைப் புல்லைக்கொண்டு திரித்த நீளமான கயிற்றையும் வைத்துக்கொண்டார். கையிலே கூரிய இரும்புப் பூண்போட்ட ஊன்றுகோலைப் பிடித்தார். "கயிலாசபதிக்கு ஜே !" என்று உற்சாகமாகக் கோஷமிட்டுக் கொண்டு புறப்பட்டுவிட்டார். சூரப்புலி பக்கத்திலே துள்ளிக் குதித்து நடந்தது. உறைபனிப் பகுதியிலே சில இரவுகளில் படுத்து உறங்க வேண்டி வரும். தரை ஜில்லென்று குளிர்ச்சியாக இருக்கும். சில இடங்களில் அப்படிக் குளிர்ந்து இருப்பதோடு சகதியாகவும் இருக்கும். அதிலே விரிப்பதற்கு நம் நாட்டுக் கம்பளம் உதவாது. திபெத்திலே கொத்துமா என்ற ஒரு முரட்டுக் கம்பளம் நெய்கிறார்கள். அதுதான் அந்த இடத்திற்கு ஏற்றது. கர்ப்பியாங்கில் கொத்துமா ஒன்றுதான் துறவி வாங்கினார். அதை அவர் தம் முதுகில் மூட்டைக்கு மேலே போட்டுக்கொண்டார். இவ்வாறாகக் கர்ப்பியாங்கிலிருந்து திபெத்திற்குள்ளே அவருடைய கயிலாய கிரி யாத்திரை தொடங்கிற்று.

கர்ப்பியாங்கிலிருந்து ஓர் இறக்கம் வருகிறது. துறவி சுமார் ஒரு மைலுக்கு இறக்கத்தில் நடந்தார். பிறகு காளி கங்கையின் கரையோரமாகவே கொஞ்ச தூரம் போக வேண்டும். அது ஒரு பள்ளத்தாக்கு. சுற்றிலும் மலைகள் உயர்ந்து நிற்கின்றன. அவற்றின் வழியாகப் பல அருவிகளும் ஓடைகளும் வேகமாக ஓடி வந்து காளிகங்கையில் கலக்கின்றன. உயரத்திலிருந்து நீர்வீழ்ச்சியாக விழுகின்ற அருவிகள் அழகான காட்சியாக இருந்தன. அந்த அருவிகள் வேகமாக விழுவதனால் சிதறி எழுகின்ற நீர்த்திவலைகள் புகைபோல ஆகாயத்தில் எழுந்தன. அந்தத் திவலைகள் மீது சூரிய

ஒளி படுவதனால் எத்தனையோ வானவில் உண்டாகி அந்த இடத்தை ஒரு மாயலோகம்போல் செய்தன. சூரப்புலி அந்த வர்ணஜாலங்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டே நடந்தது. உச்சிவேளையில் புறப்பட்ட துறவி இக்காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டே மெதுவாகச் சென்றார். ஒரு மரப் பாலத்தின் வழியாகக் காளி கங்கையைக் கடந்து நேபாளப் பகுதியிலே பாதை செல்லுகிறது. அந்த வழியாகச் சென்று இரவு நேரத்திற்குள் காலபானி என்ற இடத்தை அவர் அடைந்தார். அந்த இடத்திலேயே குளிர் மிக அதிகமாகிவிட்டது. பக்கத்தில் இருந்த ஒரு குன்றின் ஒரு பகுதியிலே காற்றுக்கு அடக்கமான பகுதியாகப் பார்த்து அங்குக் கொத்துமாக் கம்பளியை விரித்து அன்றிரவைத் துறவி கழித்தார். சூரப்புலி அவருக்குப் பக்கத்திலேயே காவல்காரனைப்போல எச்சரிக்கையாகப் படுத்திருந்தது.

அடுத்த நாள் காலை ஒன்பது மணிக்குத் துறவி அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார். இனியொரு பெரிய ஏற்றம். அதில் ஏறி லிப்புத் தடாகக் கணவாயின் வழியாகச் செல்லவேண்டும். இந்த இடத்தில்தான் யாத்திரைக்காரர்களுக்குப் பெரிய சோதனை ஏற்படும். கணவாயின் உயரம் கடல் மட்டத்திற்கு மேலே 16,800 அடி. ஆதலால் ஏறுவது மிகவும் சிரமம் ; மூச்சுத் திணறும்.

லிப்புத் தடாகக் கணவாய்தான் கயிலாய கிரிக்கு வாயில் போல அப்பகுதியிலே அமைந்திருக்கிறது. திபெத்திற்கும் இந்தியாவுக்கும் போக்குவரத்து நடக்கவும் இக்கணவாய்தான் உதவுகிறது. குளிர்காலத்திலே இது பனி மூடி உறைந்து கிடக்கும். அப்பொழுது போக்குவரத்தே தடைப்பட்டுவிடும். வெய்யிற் காலத்தில் பனி உருகுவதால் கணவாய் வழி திறக்கும். இக்காலத்திலும் அங்குத் திடீரென்று உறைபனி விழ ஆரம்பித்துவிடும்.

துறவி இரண்டு மூன்று மைல் நடப்பதற்குள் அன்று உறைபனி விழத் தொடங்கிவிட்டது. இலவம் பஞ்சுபோலக் காற்றில் மிதந்து வந்து பூமியில் படிகின்ற உறைபனியைச் சூரப்புலி ஆச்சரியத்தோடு பார்த்தது. அரை மணி நேரத்திற்குள் தரையெல்லாம் ஒரே வெளுப்பாக மாறிவிட்டது. சூரப்புலி உறைபனியை உற்றுக் கவனித்தது. மெதுவாக ஒரு சிறு துண்டை வாயில் கடித்தது. ஜில்லென்று குளிர்ச்சி அதன் வாய்க்குள்ளே பரவி நடுக்கிற்று. துறவி சிரித்தார் "பால்கட்டி சாப்பிடுகிறாயா ?" என்று வேடிக்கையாகக் கேட்டார். உறைந்த பனிக்கட்டிகளின்மீது கால் வைத்துச் சூரப்புலி துள்ளிக்



குதித்தது. அதன் பாதங்களும் மரத்துப் போயின. "வா, உனக்குப் பாதரட்சை போடுகிறேன்" என்று துறவி கூப்பிட்டார். சென்னையிலே செருப்புக்கடையில் சூரப்புலிக்காகத் தனியாகத் தயார் செய்த பாதரட்சைகளைத் துறவி தமது மூட்டையில் பத்திரமாக வைத்திருந்தார். அவற்றை எடுத்துச் சூரப்புலியின் கால்களில் மாட்டிக் கட்டினார். பனிப்பரப்பின் மேல் அவற்றை அணிந்துகொண்டு நடப்பது சூரப்புலிக்குச் சுலபமாக இருந்தது.

ஆனால், அன்று அதற்கு மேலே யாத்திரையைத் தொடர முடியவில்லை. உறைபனி பெய்யத் தொடங்கிவிட்டால் லிப்புத் தடாகக் கணவாயில் செல்ல முடியாது. சென்றால் கெட்டியாகாத உறைபனியிலேயே அழுந்தி இறக்க நேரிடும். அதனால் துறவி பக்கத்திலிருந்த குன்றுப்பகுதிக்குச் சென்றார். உறைபனியிலிருந்து தப்ப ஒரு நல்ல இடம் தேடினார். சூரப்புலி அவருடைய கருத்தைப் புரிந்துகொண்டு முன்னால் ஓடிப் பார்த்தது. ஓரிடத்திலே சிறிய குகையொன்று தென்பட்டது. அதற்குள்ளே துறவி நுழைந்து தங்கினார்.

உறைபனி வெகுநேரம் பெய்யவில்லை. இருந்தாலும் நிலத்தில் படிந்த உறைபனி உருகியோடும் வரையிலும் அதன்மீது நடந்து கணவாயைக் கடக்க முடியாது. அதனால் துறவி குகையிலேயே

அடுத்த நாள் உச்சிவேளை வரையிலும் இருந்தார். தரைப் பகுதியிலிருந்த உறைபனி அநேகமாகத் தண்ணீராக மாறிவிட்டது. துறவியும் புறப்பட்டார்.

மேலே ஏற ஏற எங்கும் பனிப்பிரதேசமாகவே மாறிவிட்டது. ஒரே வெண்மை; ஒரே பனிப்பாறை. இறுகியிருப்பதால் அதன் மேல் நடக்க முடிகிறது. சில சமயங்களில் பனிப்படலம் கனமாக இல்லாத இடத்தில் கால் அதில் அமிழ்கிறது. கையில் உள்ள ஊன்றுகோல் பேருதவியாக இருந்தது.

சென்னையிலே ஒரே நீல நிறமான பெரிய நீர்ப்பரப்பைச் சூரப்புலி கண்டது. இங்கே வெண்மை நிறமான பெரிய பனிப்பரப்பைக் காணலாயிற்று.

கணவாயின் உச்சியிலிருந்து இறக்கம். அதில் 12 மைல் நடந்து துறவி தக்களக்கோட்டையை அடைந்தார்.

தக்களக்கோட்டை அந்தப் பகுதியிலே உள்ள பெரிய ஊர். அது 14000 அடி உயரத்தில் இருக்கிறது. அங்கே ஒரு மலையுச்சியில் ஒரு பெரிய பௌத்த மடம் உண்டு. துறவி அந்த ஊருக்குள் செல்லாமல் யாத்திரையைத் தொடர்ந்து மேற்கொண்டார்.

சில இடங்களிலே மண் தரையிலே நடப்பதுபோலிருக்கும். ஆனால் அதன் அடியிலே பாறையாகப் பனிப்படலம் படிந்திருக்கும். உயர்ந்த பகுதிகளிலே வெள்ளை வெளேரென்று கண்ணைப் பறிக்கும் படியாக உறைபனி காட்சியளிக்கும்.

இடையிடையே சிறிய ஆறுகள் குறுக்கிட்டன. ஆழமதிகமில்லாவிட்டாலும் பனிக்கட்டியைப் போலவே குளிர்ந்திருக்கும்; பனி உருகி வருவதால் அவ்வளவு குளிர்ச்சி; வேகமும் அதிகமாக இருக்கும். கற்களை அடுக்கிச் சிலவற்றிற்குப் பாலம் போல அமைத்திருந்தார்கள். சிலவற்றிற்கு அத்தகைய ஏற்பாடு இல்லை.

துறவி விளையாட்டுப்போல அவற்றையெல்லாம் கடந்து நடந்தார். சூரப்புலிதான் ஒவ்வொரு தடவையும் முன்னால் செல்லும். ஆற்றின் ஆழத்தையும் தெரிந்துகொள்வதற்கு அது உதவும். அதுவே நீந்திப் போகவேண்டியிருந்தால் துறவி எச்சரிக்கையாகச் செல்லுவார். அடுத்த கரைக்குச் சென்றதும் மரத்துப்போன கால்களில் சூடேறுவதற்காகக் குதிப்பார். சூரப்புலியும் குதிக்கும்.

ஓரிடத்திலே டூர்லா ஆற்றின் கிளை நதியொன்றைக் கடக்க வேண்டியிருந்தது. பாலம் எதுவும் இல்லை. அதன் ஆழம்

மூன்றடிக்குமேல் இராது. இருந்தாலும் வேகம் அதிகம். நீரில் கிடக்கும் பெரிய பெரிய கூழாங்கற்களுக்கு மேலே நடக்கவேண்டும்; கால் வழுக்கும்.

துறவி பகல் இரண்டு மணி வரையிலும் காத்திருந்தார். அந்த நேரத்தில்தான் வெய்யில் கொஞ்சம் அதிகம். பனியும் அதிகமாக உருகும். ஆனால் திபெத்துப் பீடபூமியில் ஓடுகின்ற ஆறுகளில் அந்தச் சமயத்தில்தான் வெள்ளம் குறைவாக இருக்கும். தூரத்திலே இருக்கும்படியான உயர்ந்த சிகரங்களில் படலம் படலமாகப் படிந்து கிடக்கும் உறைபனி உருகி அங்கிருந்து வெள்ளம் வந்து சேருவதற்கு இன்னும் நேரமாகும். மாலை நேரமாக ஆக வெள்ளம் அதிகரித்துவிடும்.

பகல் இரண்டு மணி சுமாருக்கு வெள்ளம் கொஞ்சம் வடிந்திருந்தது. துறவி சூரப்புலியைக் கூட்டிக்கொண்டு ஆற்றின் கரையோரமாகவே நடந்தார். எதிர்க்கரையை உற்றுக் கவனித்துக்கொண்டே நடந்தார். அங்கே ஓரிடத்தில் ஒரு சிறிய பாறை தூணைப் போலப் பூமியிலிருந்து கிளம்பிச் செங்குத்தாக நின்றுகொண்டிருந்தது. அதைக் குறித்துக்கொண்டு ஆற்றின் ஓட்டத்திற்கு எதிர்ப்புறமாகத் துறவி கொஞ்ச தூரம் நடந்தார். பிறகு தமது மூட்டையை அவிழ்த்து அதற்குள்ளிருந்த நீண்ட கயிற்றை எடுத்தார். மலைப்புல்லால் திரித்த அந்தக் கயிறு கொஞ்சம் காய்ந்திருந்தது. அதைத் தண்ணீரில் கொஞ்ச நேரம் ஊற வைத்தார். அப்படி ஊறியதால் அது பதமடைந்து வலுவாயிற்று. அதன் ஒரு நுனியைச் சூரப்புலியின் கழுத்திலே கட்டிச் சூரப்புலியை ஆற்றை நீந்திக் கடக்குமாறு பணித்தார்.

இதுவரையிலும் துறவியின் செயல்களைச் சூரப்புலியால் புரிந்துகொள்ள முடியவில்லை. இப்பொழுது அது புரிந்துகொண்டது. சூரப்புலி ஆற்றில் பாய்ந்து நீந்தியது. வெள்ளம் வேகமாக அதை இழுத்துக்கொண்டு ஓடிய போதிலும் ஆற்றின் அகலம் குறைவாகையால் சூரப்புலி விரைவில் அக்கரையை அடைந்தது, கயிற்றைத் தளர்த்திவிட்டுக்கொண்டேயிருந்த துறவி இக்கரையிலே சூரப்புலிக்கு எதிராகச் சென்று நின்றார். பிறகு தூணைப்போல வளர்ந்து நின்ற பாறையருகிலே செல்லுமாறு சூரப்புலிக்கு சமிக்ஞை செய்தார். சூரப்புலியும் அவ்வாறே சென்று நின்றுகொண்டு அவரைக் கவனித்தது. துறவி கயிற்றைத் தளர்த்திவிட்டுக்கொண்டு சூரப்புலியை அந்தப் பாறைத்தூணை இரண்டு மூன்று தடவை சுற்றி வரும்

படியாகச் செய்தார். பிறகு கயிற்றை இழுத்துப் பார்த்தார். பாறைத் தூணிலே சுற்றப்பட்டிருப்பதால் அது தளர்ந்து கொடுக்காமல் வலுவாக இருந்தது. துறவி மூட்டையைத் தோளில் போட்டுக் கொண்டு ஒரு கையால் கயிற்றைப் பிடித்துக்கொண்டும் மற்றொரு கையால் ஊன்றுகோலை ஊன்றிக்கொண்டும் ஆற்றில் இறங்கி நடந்தார்.

இவ்விதமாக ஆற்றின் இழுப்பைச் சமாளித்துக்கொண்டு மூட்டை கொஞ்சமும் நனையாமல் துறவி அக்கரை சேர்ந்துவிட்டார்.

அங்கிருந்து மறுபடியும் ஒரு பெரிய ஏற்றம். பனிப்பாறைகள் நிறைந்த பகுதியிலே துறவி சிரமப்பட்டு ஏறி கௌரி குகைகளை அடைந்தார். அன்றைய இரவை அங்கேயே கழிப்பதாகத் தீர்மானித்தார். அந்தப் பகுதி கடல் மட்டத்திற்குமேல் பதினொரு பிரத்து இருநூறடி உயரத்தில் உள்ளது, குளிர் மிகுந்தது. அங்குக் கிடந்த காய்ந்த கவரிமாட்டுச் சாணத்தைப் பொறுக்கி வந்து குகைக்குள் நெருப்பு மூட்டித் துறவி கோதுமை மாவைக்கொண்டு சப்பாத்திகள் தயாரித்தார்.

அவ்வாறு தயாரித்த உணவை உட்கொண்டு சூரப்புலிக்கும் அளித்தார். வரண்ட சாணத்தை நெருப்பிலே போட்டுவிட்டுப் படுத்துறங்கத் தயார் செய்துகொண்டிருந்தார். அந்தச் சமயத்திலே எங்கிருந்தோ நான்கு முரடர்கள் கத்தியும் கையுமாகக் குகைக் குள்ளே நுழைந்தார்கள், அவர்களைப் பார்த்ததும் துறவி நிலைமையைப் புரிந்துகொண்டார். அவர் முகத்திலே ஒரு புன்னகை அரும்பியது. வந்தவர்களைச் சந்தேகத்துடன் பார்த்துக்கொண்டு சூரப்புலி உருமிக்கொண்டு எழுந்தது. துறவி அதைத் தட்டிக் கொடுத்துப் பேசாமல் படுக்கும்படி செய்தார்.

வந்தவர்கள் திபெத்துப் பகுதியிலே திரியும் கொள்ளைக்காரர் கள். துறவி தனியாக யாத்திரை செய்வதைத் தெரிந்துகொண்டு வந்திருக்கிறார்கள். இருப்பதையெல்லாம் பேசாமல் கொடுத்துவிடும் படி பயங்காட்டினார்கள். "இல்லாவிட்டால் இதோ இந்தக் கத்தி தான் ; பார்த்துக்கொள்" என்று கொடுமை நிறைந்த குரலிலே சத்தமாகச் சொன்னார்கள். "எல்லாவற்றையும் தாராளமாக எடுத்துக்கொள்ளுங்கள்" என்று சிரித்துக்கொண்டே துறவி பதில் சொன்னார். ஒருவன் மூட்டையைத் தூக்கிக்கொண்டான். ஒருவன் மேலங்கியைச் சோதித்தான் ; பணப்பையை எடுத்துக்கொண்டான். "அது போதுமா ? கம்பளி உடையெல்லாம் வேண்டாமா ?" என்று



கூறிக்கொண்டே மற்ருெருவன் அவருடைய அங்கியைக் கழற்றத் தொடங்கினுன். அதைக் கண்டதும் சூரப்புலி சீற்றத்தோடு அவன் மேல் பாய்ந்து அவனைக் கீழே மல்லாக்கத் தள்ளியது நெஞ்சின்மீது ஏறிக் கழுத்திலே தன் வாயை வைத்தது. ஓர் கணத்திலே இந்தச் சம்பவம் நடந்துவிட்டது. அடுத்த கணத்திலே சூரப்புலி அந்தத் திருடனின் குரல்வளையைக் கடித்துத் துண்டித்துவிட்டிருக்கும். ஆனுல் துறவி ஓடிவந்து தடுத்துவிட்டார். "அவர்கள் விரும்பியதையெல்லாம் எடுத்துக்கொள்ளட்டும். நீ சும்மாயிரு" என்று கூறி அதை ஒரு மூலையிலே படுக்குமாறு செய்தார். கீழே விழுந்த திருடன் கோபத்தோடு எழுந்தான். வாயில் வந்தவாறு ஏதேதோ பேசிக்கொண்டு துறவியின் உடைகளை ஒன்றுவிடாமல் கழற்றி எடுத்துக்கொண்டான். அவருடைய பாதரட்சைகளையும் தூக்கிக் கொண்டான்.

மறுநிமிஷத்திலே திருடர்கள் புறப்பட்டுவிட்டார்கள். தம் இடையிலே இருந்த கௌபீனத்தோடு துறவி அமர்ந்திருந்தார். அப்பொழுதும் அவருடைய புன்னகை மாறவில்லை. சூரப்புலி மட்டும் முணுமுணுத்துக்கொண்டே படுத்திருந்தது. பிறகு, மெதுவாக எழுந்து துறவியிடம் வந்தது. அப்பொழுதும் முணுமுணுப்பதை நிறுத்தவில்லை.

"ஏன், தடுத்துவிட்டேனென்று கோபமா?" என்று சிரித்துக் கொண்டே துறவி கேட்டார்.

சூரப்புலி அழுதுவிட்டது. அதன் கண்களில் நீர் வடிந்தது. அடே, எதற்கு இப்படி வருத்தப்படுகிறாய் ? இறைவனிடம் போகும் போது ஒரு சுமையும் இருக்கக்கூடாது'' என்று அதைத் தட்டிக் கொடுத்தார். அது ஆறுதலடையவில்லை.

துறவிக்கு உண்ண உணவில்லை ; கடுங்குளிரில் உடம்பைப் பாதுகாத்துக்கொள்ள உடையில்லை. பனிப்படலத்தின்மீது காலெடுத்து வைக்கும்போது காலைப் பாதுகாக்கப் பாதரட்சை இல்லை. இவற்றையெல்லாம் எண்ணி அது வருந்தியது. துறவிமட்டும் அனுமதித்திருந்தால் அந்த மூன்று திருடர்களையும் யமலோகத்திற் அனுப்பியிருக்கும். அப்படி ஆத்திரம் அதற்கு. ஆனால் அதை நினைத்து என்ன செய்வது ?

சூரப்புலி குகையைவிட்டு வெளியே வந்தது. உலர்ந்த சாணி மொத்தைகளை வாயால் கவ்வி எடுத்து வந்து நெருப்பில் போட்டது. துறவி தம்மை மறந்து தியானத்தில் அமர்ந்திருந்தார்.

உறைபனி விழுவதற்கு முன்னே சாணி மொத்தைகளை நிறையச் சேர்த்து வைத்துவிட்டது சூரப்புலி. அவற்றைக்கொண்டு உண்டாக்கிய நெருப்பின் உதவியால் துறவி எவ்வித ஆடையுமின்றி இரவைக் கழித்தார்.

பொழுது விடிந்தது. துறவி அப்பொழுதும் ஆழ்ந்த தியானத்திலேயே இருந்தார். ஆடையில்லையே, உணவில்லையே என்ற கவலைகள் அவருடைய உள்ளத்தில் எழுந்ததாகவே தெரியவில்லை. சூரப்புலி மீண்டும் சாணி வரட்டிகளைத் தேடி எடுத்து வந்தது. அவ்வாறு செய்து நெருப்பை அணையாமல் வைத்துக்கொண்டு குகைக்குள்ளே வெப்பமாக இருக்கும்படி கவனித்துக்கொண்டது. ஆனால் அது மட்டும் போதுமா ? துறவிக்கு உணவு வேண்டாமா ? அந்தக் கவலை அவரை வாட்டாவிட்டாலும் சூரப்புலியை வாட்டத் தொடங்கிற்று. கம்பாக்களை நினைத்து அது உள்ளம் குமுறியது. சென்னைப் பட்டினத்தில் துறவியின் பணப்பையை ஜேப்படி செய்தவனை விட இந்தக் கம்பாக்கள் இழிந்தவர்கள் என்று கருதியது. குளிராலும் பசியாலும் துறவியை உயிரிழக்குமாறு விட்டுச்சென்ற மனிதர்களை விடக் கேவலமானவர்கள் யாருமிருக்கமாட்டார்களென்று அது தீர்மானித்தது. துறவி தன்னையும் தன் உடைமைகளையும் பாது காத்துக்கொள்ள வகையில்லாமல் இருக்கவில்லை. சூரப்புலியை ஏவி யிருந்தால் அந்த மூன்று பேரையும் எதிர்த்துப் போராடி வெற்றி கண்டிருக்கும். ஆனால் அவ்வாறு செய்யாமல் தாமாகவே விரும்பி



எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளும்படி செய்தவருக்குக் குளிரிலிருந்து தம்மைக் காப்பாற்றிக்கொள்ள உடைகூட இல்லாமல் பறித்துக்கொண்டதை எண்ணிச் சூரப்புலி உள்ளம் கொதித்தது. மிருகங்களைவிட மனிதன் கொடுமை மிகுந்தவன் என்று அதற்குத் தோன்றியது. இவ்வாறு அந்த நாளும் கழிந்தது.

அடுத்த நாள் காலையிலே சூரப்புலி தியானத்தில் அமர்ந்திருக்கும் துறவியின் பக்கத்திலே சென்றது. அவருடைய துடையின்மீது தனது முகத்தை வைத்துக்கொண்டு பக்கத்தில் படுத்தது. துறவியின் வலது கை அதை மெதுவாகத் தடவிற்று. சூரப்புலியின் பார்வை குகைக்கு வெளியே பனிப்பரப்பிலே ஓடிக்கொண்டிருந்த ஒரு வெள்ளை முயலின்மேல் விழுந்தது. திடீரென்று அதற்கு ஒரு புதிய எண்ணம் தோன்றிற்று. உடனே அது வேகமாகப் பாய்ந்து வெளியேறிற்று.

அடுத்த கணத்திலே அது அந்த வெள்ளை முயலைத் தன் வாயில் கவ்விக்கொண்டு குகைக்குள் நுழைந்தது. துறவியின் முன்னால் அந்த முயலை வைத்துவிட்டு ஆவலோடு அவரைப் பார்த்தது.

பனிப்பிரதேசத்திலே இமாலயக் குழிமுயல்கள் நிறைய உண்டு. அவற்றைப் பிடித்து வந்தால் துறவியின் பசியைப் போக்க முடியும் என்று சூரப்புலிக்குத் திடீரென்று தோன்றிற்று

மறுயோசனை ஒன்றும் செய்யாமல் அது முயலைப் பிடித்துவந்து விட்டது.

அந்த இமலாயக்குழிமுயல் நடுங்கிக்கொண்டு துறவியின் முன்பு கிடந்தது. சூரப்புலியின் பிடியிலிருந்து விடுபட்டிருந்தாலும் அது எழுந்து தப்பி ஓடவில்லை. பயத்தால் அதற்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. அதன் கழுத்திலே சூரப்புலியின் கோரைப்பற்கள் பட்ட இடங்களிலே இரத்தம் வெளிப்பட்டு அதன் வெண்மையான உடம்பிலே சிவப்புக்கறை உண்டாக்கியிருந்தது.

துறவி அதைப் பார்த்தார். அவர் கண்களிலே கண்ணீர். பிதுங்கிக் கன்னத்திலே வழியலாயிற்று. மெதுவாக அவர் அந்த முயலைக் கையில் எடுத்துத் தடவிக் கொடுத்தார். அப்பொழுதுதான் சூரப்புலிக்குத் தான் செய்த தவறு தெளிவாகத் தெரிந்தது. கருணையின் வடிவமாக இருக்கும் துறவி தம் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காகவும் பிற உயிரைத் துன்புறுத்தமாட்டார் என்று முன்பே உணராமற்போனதற்காக அது வருத்தப்பட்டது. தன்னுடைய தவற்றிற்காகப் பிராயச்சித்தம் செய்வதுபோல அது ஊளையிட்டு அலறிற்று. பிறகு மெதுவாகக் குகையை விட்டு வெளியே சென்றது.

சுமார் இரண்டு மணி நேரம் அது குகைக்கு வரவேயில்லை. பிறகு திடீரென்று அது மகிழ்ச்சியோடு துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடிவந்தது. அதன் வாயிலே துறவியின் கம்பளி மேலங்கியிருந்தது.

"என்ன, அவர்களோடும் சண்டைக்கா போய்விட்டாய்?" என்று துறவி கேட்டார். அவர் குரலிலே கோபமோ வெறுப்போ ஒன்றும் இருக்கவில்லை. திருடர்கள் சூரப்புலியால் தாக்கப்பட்டிருப்பார்களோ என்ற கவலை மட்டும் வெளிப்பட்டது.

துறவிக்கு விருப்பமில்லாத காரியத்தை மீண்டும் செய்யவில்லை என்று கூறுவதுபோலச் சூரப்புலி அவரைப் பார்த்தது. வேண்டுமானால் அவரே நேரில் சென்று பார்த்துக்கொள்ளலாம் என்பது போலவும் அது பலவகைகளில் தெரிவித்தது. வெளியே வருமாறும் துறவியை அழைத்தது.

கம்பளி மேலங்கியைப் போட்டுக்கொண்டு துறவி வெளியே புறப்பட்டார். சூரப்புலி அவருக்கு முன்னால் வழி காட்டிக்கொண்டு ஓடிற்று. "அவர்களிடமிருந்து பிடுங்கி வந்திருந்தாயானால், இதை மீண்டும் அவர்களுக்கே கொடுத்து

விட்டு வந்துவிடுவேன்'' என்று சொல்லிக்கொண்டே துறவி நடந்தார்.

''அதற்கு வழியே இல்லை; நான் தப்பொன்றும் செய்ய வில்லை'' என்று சொல்லுவதைப்போல முகத்தை உயர்த்தி வைத்துக்கொண்டு சூரப்புலி நடந்தது.

பனிப்பாறைகள் தரையிலே அடர்த்தியாக இருந்த பகுதியிலே திருடர்கள் மூன்று பேரும் வெவ்வேறு இடங்களில் இறந்துகிடந்தார்கள். துறவி சந்தேகத்தோடு சூரப்புலியை உற்றுப் பார்த்தார். "அவர்கள் கொல்லப்பட்டதற்குக் காரணம் நான் அல்ல' என்பது போல அது நடந்துகொண்டது. அங்கே கிடக்கும் கவரிமாட்டின் சாணத்தையும் தரையில் பல இடங்களில் தாறுமாறுகப் பதிந்திருக்கும் கவரிமாட்டு அடிச் சுவடிகளையும் காண்பித்தது. அந்தப் பகுதியிலே யதேச்சையாகத் திரியும் காட்டுக் கவரிமாடுகள் திருடர்களைத் திடீரென்று தாக்கியிருக்க வேண்டும் என்று துறவிக்குத் தோன்றிற்று. இறந்து கிடக்கும் திருடர்களை ஒவ்வொருவராக அவர் கவனித்தார். மார்பிலே கொம்பு பாய்ந்து ஒருவன் உடனே இறந்திருக்கிறுன். மற்ருெருவனுக்கு மேலெல்லாம் காயமிருந்தது. அவன் கவரிமாட்டோடு நெடுநேரம் போராடிப் பிறகு இறந்திருக்கிறுன் என்று தெரிந்தது. மற்ருெருவனுக்கு உடம்பில் காயமேஇல்லை; எலும்பு முரிந்ததாகவும் தெரியவில்லை. ஆனுல்அவனும் மாண்டு கிடந்தான். கவரிமாடு தாக்கியதால் ஒருவேளை அவன் மூர்ச்சையுற்று உறைபனியிலே விழுந்திருக்க வேண்டும். அவன் மூர்ச்சை தெளிவதற்குள் அன்றிரவு பெய்த உறைபனி அவனை மூடியிருக்கவேண்டும். அதனுல் அவன் விறைத்துப் போய் மாண்டிருக்க வேண்டும்.

துறவி அத்திருடர்களுக்காக வருத்தப்படுவதைக் கண்டு சூரப்புலி ஆச்சரியமடைந்தது. துறவியின் கண்களில் வழிந்த கண்ணீரைக் கண்டு அவருடைய அளவு கடந்த அன்பை நன்றுக உணர்ந்து சூரப்புலியும் உள்ளம் கனிந்தது. அதனிடத்திலே இருந்த விலங்குணர்ச்சியெல்லாம் அடியோடு அந்த நிமிஷத்திலேயே மறைந்து போனதாகத் தோன்றிற்று.

துறவி கயிலாய கிரி இருக்கும் திக்கை நோக்கி நின்று பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார். திருடர்களுக்காகத்தான் அவர் கடவுளைப் பிரார்த்திருக்கிறுர் என்று சூரப்புலிக்குத் தோன்றிற்று.

நெடுநேரம் இவ்வாறு பிரார்த்தனை செய்த துறவி பிறகு மெதுவாக நடக்கலானார். தமக்குச் சொந்தமான உடைகளும் உணவுப் பொருள்கள் அடங்கிய டப்பாக்களும் அங்கே சிதறிக் கிடந்தன. அவற்றையெல்லாம் சேர்த்து மறுபடியும் மூட்டையாகக் கட்டிக்கொண்டு புறப்பட்டார். சூரப்புலி மகிழ்ச்சியோடு அவரைப் பின்தொடர்ந்தது. பனி உருகி ஓடிக்கொண்டிருந்த ஒரு சிறிய ஓடையை அடைந்ததும் அங்கே இருந்த ஒரு பாறையின்மீது துறவி கம்பளித்துணிகளையெல்லாம் உலர்த்துவதற்காக விரித்துப்போட்டார். அங்கே டாமாச் செடிகள் நிறைய வளர்ந்திருந்தன. அவற்றில் சில வற்றைப் பிடுங்கி வந்து, நெருப்பு மூட்டி, நெருப்பிலே அவற்றைப் போட்டார். பச்சையாக இருந்த செடிகள் உடனே தீப்பற்றி எரிந் தன. சூரப்புலிக்கு அதுவும் ஆச்சரியமாக இருந்தது. உறைபனி பெய்யும் குளிர்ப்பகுதியிலே இப்படி ஒரு செடி உண்டாவதைத் துறவி முன்பே அறிந்திருக்கிறார் என்று சூரப்புலி கண்டுகொண்டது.

தகர டப்பாவில் இருந்த கோதுமை மாவைக்கொண்டு துறவி சப்பாத்தி தயாரித்தார். இரண்டு நாட்களாகப் பட்டினியாகக் கிடந்த சூரப்புலிக்கு அது ஒரு பெரிய விருந்தாக இருந்தது. தன்னுடைய பசி ஆறியதால் அடைந்த மகிழ்ச்சியைவிடத் துறவிக்கு உணவு கிடைத்ததை நினைத்தே பெரிதும் மகிழ்ச்சியடைந்தது.

மேலும் இரண்டு நாட்கள் பனிப்பிரதேசத்திலேயே நடந்து துறவி தீர்த்தாபுரியை அடைந்தார்.

தீர்த்தாபுரியிலே அதிசயமான ஊற்று ஒன்று இருக்கிறது. உறைபனிப் பிரதேசமான அங்கே ஓர் உஷ்ண நீருற்று குமிழியிட்டு மேலே பொங்குகிறது. அது புறப்படும் இடத்திலே நீரில் கை வைக்க முடியாது. அவ்வளவு சூடு. ஆனால் ஊற்று நீர் ஓட ஓடக் குளிர்ச்சி யடைகிறது.

உடம்புக்கு இதமாக இருக்கும் பகுதியாகப் பார்த்து, துறவி அதில் குளித்தார். சூரப்புலியும் அதில் மூழ்கிக் களித்தது. வெப்ப மான நீரில் குளிப்பது அதற்கு இதுதான் முதல் அனுபவம். இருந்தாலும் உறைபனி மேலேயே பல மைல்கள் நடந்து வந்த அதற்கு இந்த அனுபவம் வரவேற்கத் தக்கதாகவே இருந்தது.

பக்கத்திலே ஒரு பௌத்த மடம் உண்டு. அங்குள்ள சாதுக்கள் துறவியை அன்போடு வரவேற்றார்கள். துறவி அங்கு ஒரு நாள் தங்கி ஓய்வெடுத்துக்கொண்டார்.



அடுத்த நாள் மீண்டும் யாத்திரை தொடங்கிற்று. இனிமேல் கயிலாய கிரியை அணுகும் காலம் குறுகிவிட்டது. துறவி ஆவேசம் கொண்டவர் போல ஒரு மலையின் உச்சிக்கு ஏறினர். சூரப்புலி அவருக்குப் பக்கத்திலேயே சென்றது. உச்சியிலிருந்து கயிலாயத்தின் காட்சி தெரிந்தது. கடல் மட்டத்திலிருந்து 23000 அடி உயரத்திலிருக்கும் கயிலாய கிரியின் சிகரமாகிய விசுவலிங்கம் ஜோதி மயமாகக் காட்சியளித்தது. எப்பொழுதும் பனி மயமாக இருக்கும் அந்தப் பெரிய லிங்கம் சூரியனுடைய கிரணங்கள் பட்டுப் பொன்னால் செய்த லிங்கம் போலத் தோன்றிற்று. பொன்னார் மேனியன் என்று இறைவனைப் பாடிப் புகழ்ந்திருக்கிறார்கள் அடியவர்கள். அவர்கள் பாடிய அந்தப் பொன்மேனி வடிவத்தை அங்கு எதிரிலேயே துறவி கண்டார், சூரப்புலியும் கண்ணிமைக்காது ஆச்சரியத்தோடு பார்த்து நின்றது.

"கயிலாசபதியே போற்றி" என்று கூறிக்கொண்டே துறவி தரையில் விழுந்து வணங்கினர். பிறகு நெடுநேரம் அந்த லிங்கத்தைப் பார்த்தவாறே தியானத்தில் அமர்ந்தார்.

அப்பொழுதுதான் சூரப்புலிக்கு அந்த நீண்ட யாத்திரையின் நோக்கம் தெளிவாயிற்று. அதன் உள்ளத்திலே என்றுமில்லாத ஒரு புது ஒளி ஏற்பட்டது. துறவியின் அருகிலே அது பிரார்த்தனை

செய்வதுபோலப் படுத்தது. துறவியின் கருணையாலே தனக்கு ஒரு பெரிய பாக்கியம் கிடைத்ததாக அது உணர்ந்திருக்க வேண்டும்.

மாலை நேரம் ஆகிவிட்டது. ஆனால், எங்காவது தங்கி இரவைக் கழிக்கத் துறவி விரும்பவில்லை, அவர் இரவு முழுவதும் கயிலாயத்தை நோக்கி நடந்துகொண்டேயிருந்தார்.

மறுநாள் மாலை நேரத்தில் கயிலாய கிரியின் அருகிலே வந்து சேர்ந்தார் துறவி. ஓம் ஓம் என்று அவர் சதா வாய் விட்டுக் கூறலானார். அப்பொழுது அங்கே வீசிய காற்றிலும் ஓம் ஓம் என்ற ஒலி கேட்டது. எவ்விதமான அரவமுமில்லாமல் ஒரே அமைதியோடு விளங்கும் அந்தப் பிரதேசத்திலே காற்று வீசும்போது ஓம் என்ற ஒலி எங்கிருந்தோ கேட்டது.

கயிலாய கிரியைச் சுற்றிக் கோட்டைச் சுவர்போல உயர்ந்த மலைகள் இருந்தன. முன்னாலிருந்த மலையொன்றிலே ஒரு குகை போன்ற பகுதியிலே துறவி தங்கினார். காற்றுக்கு அடக்கமாக மேற்குப் பகுதியில் இருந்தது அந்தக் குகை.

மறுநாள் காலையிலிருந்து கயிலாய கிரியை வலம் வருகின்ற பயணம் தொடங்கிற்று. துறவி தம்மை மறந்து இறைவனுடைய நினைவிலேயே நடந்தார். கயிலாய கிரியைச் சுற்றி வருவதற்கு 32 மைல் நடக்க வேண்டும். சிறுசிறு மலைகளில் ஏறியும் இறங்கியும் வழி செல்கின்றது. பனி நிறைந்த இடங்களும், வெறும் பாறையான இடங்களும் உண்டு. கயிலாய கிரியில் வெளிப்பகுதி கோட்டைச் சுவர்போல அமைந்துள்ளது. சில இடங்களிலே விசுவலிங்கம் காட்சி தருகிறது; வேறு இடங்களில் அது கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துவிடுகிறது.

துறவி வலம் வரும்போது வேறு யாரும் அங்கு இல்லை. சூரப் புலிதான் அவருடன் செல்லும் பாக்கியம் பெற்றிருந்தது. துறவி எப்பொழுதாவது தமது மௌனத்தைக் கலைப்பார். அப்படிக் கலைக்கும்போதெல்லாம் ஓம் ஓம் என்று கூவுவதைத் தவிர வேறு ஒன்றும் பேச மாட்டார், விசுவலிங்க தரிசனம் கிடைக்கும் போதெல்லாம் அவர் மெய்மறந்து நிற்பார். ஒவ்வொரு தரிசனத்தின் போதும் அந்த லிங்கம் ஒரு புது விதமான அழகையும் வண்ணத் தையும் கொண்டிருந்தது. ஒரு பகுதி தங்கப் பிழம்புபோலவும், மற்றப் பகுதி பசுமை கலந்தும் ஒரு சமயத்திலே தோன்றும்; சூரியனுடைய ஒளி புகுவதால் ஒரு சமயத்தில் வானவில்லின் வர்ண ஜாலங்கள் வெளிப்படும். ஒரு சமயத்தில் வெண்மேகம் கிரீடம்போல அமைந் திருக்கும். இந்தக் காட்சிகளையெல்லாம் பார்த்துத் துறவி பேரின்ப

மடைந்தார். சூரப்புலியும் தன்னையறியாது இவற்றில் வசப்பட்டு உயர்ந்த மனநிலையை அடைந்து கொண்டேயிருந்தது. சூரப் புலியைப் பக்குவப்படுத்தக் கருதியே துறவி இந்த யாத்திரையை மேற்கொண்டதுபோலத் தோன்றிற்று.

வடகிழக்குப் பகுதியிலே கௌரிகுண்டமிருக்கிறது. அது பெரும்பாலும் உறைபனிப்படலத்தால் மூடிக் கிடக்கும். ஆனால், துறவி அதை அணுகியபோது அதிலே பனித்துண்டுகள்தாம் அங்குமிங்கும் மிதந்தன.

துறவி அதில் நீராடினார். சூரப்புலியும் குளித்தது. பனிக் கட்டியைப் போலக் குளிர்ந்திருந்த அந்தத் தண்ணீரில் முழுகியவுடன் ஒரு புதிய பிறவி கிடைத்ததுபோலச் சூரப்புலிக்கு உணர்ச்சி ஏற்பட்டது.

கௌரி குண்டத்தில் உற்பத்தியாகி இரண்டு நதிகள் கயிலாய கிரியைச் சுற்றி வட்டமிட்டுச் சென்று, பிறகு ஒன்றுகூடுகின்றன. அந்த நதிகளின் அருகிலேயே பிரதட்சிணம் செய்யும் வழியும் அமைந்திருக்கிறது. சில இடங்களிலே பெருங்காற்று வீசிற்று. சில இடங்களிலே ஆலங்கட்டி மழை பெய்தது. அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் துறவி நடந்தார். சூரப்புலிக்குத் தன்னைப்பற்றிய நினைவேயில்லை. தனது குருநாதனாகிய துறவியைப்பற்றி நினைத்துக் கொண்டே அது நடந்தது. அவர் ஓம் ஓம் என்று முழங்கும்போது சூரப்புலியின் கண்களிலே ஓர் அசாதாரணமான ஒளி பிறக்கும். ஏதோ தெய்வலோகத்தில் இருப்பதுபோல அதற்கு உணர்ச்சி ஏற்படும்.

நான்கு நாட்கள் பிரதட்சிணம் செய்து துறவி மானசசரோவரம் செல்லும் வழியை அணுகினார். இரவு நேரங்களில் கயிலாயகிரி அமைப்பிலுள்ள குகை போன்ற பகுதிகளில் அவர் தங்குவார். மூட்டையிலுள்ள சத்துமாவை உட்கொள்ளுவார். சூரப்புலிக்கு ரொட்டி கொடுப்பார். இவ்வாறு அவர் நான்காம் நாள் மாலையில் மானசசரோவரம் வழியை அடைந்தார்.

மானசசரோவரம் என்பது ஒரு பெரிய தடாகம்; சுற்றளவிலே சுமார் 62 மைல் உள்ளதென்றால் அது எவ்வளவு பெரியதென்று ஊகித்துக்கொள்ளலாம். அது கடல் மட்டத்திற்கு மேலே 15,000 அடி உயரத்தில் அமைந்திருக்கிறது. ஆண்டிலே பல மாதங்கள் அது உறைந்து கிடக்கும். பனி உருகும் வேனிற்காலத்தில் மரகத மணி போன்று அது மிக அழகாகத் தோன்றும். வடதிசையிலே

கயிலாயகிரி; தெற்கிலே மாந்தாத சிகரங்கள். உறைபனி மூடிய இவை இரண்டிற்கும் இடையிலே மானசம் பச்சை நிறத்தோடு காட்சி யளிக்கின்றது.

சுமார் 40 மைல் நடந்து துறவி மானசத்தை யடைந்தார். அந்த அழகிய தடாகத்திலே குளித்தார். சூரப்புலியும் குளித்து மகிழ்ந்தது. தடாகத்திலிருந்து கரையேறி வடதிசையைப் பார்த்த போது கயிலாய' லிங்கம் ஜோதி வடிவமாகக் காட்சி தந்தது. துறவி மானசக்கரையிலே அமர்ந்து நெடுநேரம் தியானத்தி லிருந்தார்.

மாலை வேளையில் கடுமையான புயற்காற்று வீசத் தொடங்கிற்று. கடல் அலைகள்போல மானசத்தில் அலைகள் எழுந்து ஆரவாரம் செய்தன. ஆலங்கட்டி மழையும் சேர்ந்துகொண்டது. தங்கு வதற்கு எவ்விதமான ஏற்பாட்டையும் கவனியாமல் துறவி அமர்ந்திருந்தார். சூரப்புலி அவருக்கு உதவி செய்ய வகை யறியாது வருத்தப்பட்டுக்கொண்டு நிலை கொள்ளாமல் அலைந்தது.

அந்தச் சமயத்திலே பௌத்த சந்நியாசிகள் இருவர் அங்கு வந்தனர். துறவியைத் தமது மடத்திற்கு வந்து தங்குமாறு அன்போடு அழைத்தார்கள். இறைவனுடைய கருணையை எண்ணி வியந்தவாறே துறவி எழுந்து அவர்களுடன் நடந்தார். சூரப்புலி மகிழ்ச்சியோடு பின் தொடர்ந்தது.

மானசசரோவரத்தைச் சுற்றிலும் எட்டுப் பௌத்த மடங்கள் இருக்கின்றன ; அவற்றில் ஒன்றிலுள்ள சந்நியாசிகளில் இருவரே அங்கு வந்தவர்கள். அந்த மடத்திலே துறவி இரண்டு நாட்கள் தங்கியிருந்தார். பிறகு கயிலாய கிரியை நோக்கிப் புறப்பட்டார். அவரிடம் உணவு ஒன்றும் இல்லை என்றறிந்த பௌத்த சந்நியாசிகள் அவருக்கு நிறைய உணவுப் பொருள்கள் கொடுத் தனுப்ப விரும்பினார்கள். ஆனால், துறவி அவற்றை எடுத்துக் கொள்ளச் சம்மதிக்கவில்லை. மீண்டும் மீண்டும் வற்புறுத்தியதின் மேல் மூன்று நாட்களுக்கு வேண்டிய உணவை எடுத்துச் செல்ல இணங்கினார்.

மானசசரோவரத்தில் அதிகாலையில் கடைசி முறையாக நீராடி விட்டுத் துறவி மீண்டும் கயிலாயகிரியை நோக்கி வடக்குத் திசையிலே புறப்பட்டார். எதிரில் விசுவலிங்கம் காட்சியளித்துக் கொண்டேயிருந்தது. அதை நோக்கி நடக்கத் நடக்க துறவி

உலகத்தையே முற்றிலும் மறக்கத் தொடங்கினர். தமது உடலையும் மறந்தார். அவருடைய தெய்வ உணர்ச்சி சூரப்புலியையும் தாக்கிற்று. ஒரு தூக்குக்கூடையிலே உணவுப் பொருள்களை வைத்து பௌத்த மடத்துச் சந்நியாசிகள் கொடுத்திருந்தார்கள். அக்கூடையை வாயில் கவ்விக்கொண்டு சூரப்புலி நடந்தது. இடையிடையே துறவியின் முகத்தை அது உற்றுப் பார்க்கும். அந்த முகத்திலே தவழும் தெய்வ ஒளியிலே அது மெய் மறக்கும்.

இவ்வாறு இரண்டு நாள் நடந்து துறவி கயிலாயகிரியின் வடக்கு முகத்தை அணுகினர். விசுவலிங்கம் மத்தியிலே ஜோதி மயமாகப் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அதற்கு இரண்டு மைல்களுக்கு அப்பால் துவாரபாலகர்களைப்போல இரண்டு மலைகள் ஓங்கி நின்றிருந்தன. அந்த மலைகளுக்கு வெளிப்பக்கத்திலேயே தான் சாதாரணமாகப் பிரதட்சிணம் செய்பவர்கள் சுற்றி வருவார்கள். ஆனல், துறவி அம்மலையின் உட்பகுதியிலே வலக்கைப் பக்கத்தில் இருந்த குகைபோன்ற பகுதியில் சென்று தங்கினர். சாதாரணமாக யாரும் அங்குச் செல்வதில்லை. அங்கிருந்து சதா விசுவலிங்கத்தின் காட்சியைக் கண்டு களிக்க முடியும்.

குகைக்குள் அமர்ந்த துறவி இறைவனையே நினைத்துத் தியானத்தில் இருந்தார். இடையிடையே அவரையும் அறியாது அவர் வாயிலிருந்து ஓம் ஓம் என்ற ஒலியெழும். அவருக்குப் பக்கத்திலே படுத்திருந்த சூரப்புலி அந்த ஒலியைக் கேட்டுப் பரவசமடையும். திடீரென்று காற்று வேகமாக அடிக்கும்பொழுது ஓம் ஓம் என்ற ஒலி எங்கிருந்தோ கேட்கும். அந்த ஒலியும் சூரப்புலியைப் பரவசப்படுத்தும்.

இரண்டு நாள் அல்லது மூன்று நாட்களுக்கு ஒருமுறை துறவிக்கு உணவைப்பற்றிய நினைவு எழும். சூரப்புலியை எண்ணித்தான் அவர் உணவுக்கூடையை எடுப்பாரோ என்றுகூடச் சந்தேகப்படும்படியாக இருக்கும். இவ்வாறு எட்டு நாட்கள் கழிந்தன. அந்த நாட்களிலே சூரப்புலி உயர்ந்த வாழ்க்கைக்கு ஏற்றவாறு பக்குவமடைந்துகொண்டே வந்தது. அதன் விலங்குணர்ச்சிகள் மறைந்தன. சூரப்புலி தனது பழைய வாழ்க்கையைப்பற்றியெல்லாம் நினைத்துப் பார்க்கும். அது தவருக எந்தச் சமயத்திலும் நடந்ததில்லை; ஆனல், குரூரமும் கோபமும் கொலையும் அதன் பழைய வாழ்க்கையில் இருந்தன. அவையெல்லாம் விலங்

குணர்ச்சியைச் சேர்ந்தவை, கீழ்த்தரமானவை என்று அதற்கு எப்படியோ தெரியத் தொடங்கியது. இந்த விலங்குணர்ச்சியானது விலங்குகளிடம் மட்டும் இருப்பதன்று. இது மனிதர்களிடத்திலும் இருக்கிறது என்பதைச் சூரப்புலி தன்னுடைய பழைய வாழ்க்கையிலேயே கண்டிருக்கிறது. துறவி ஒரு தனிப்பிறவி. அவரிடத்திலே தாழ்ந்த உணர்ச்சி எதுவும் இல்லையென்பதையும் சூரப்புலி நன்கு உணர்ந்துகொண்டது. அவருடன் சேர்ந்து வாழும் பாக்கியம் கிடைத்ததால்தான் தன்னுடைய வாழ்க்கையும் உயர்வடைந்தது என்று அது அறிந்தது.

இந்த அறிவெல்லாம் அதற்கு எப்படி எப்படியோ மின்னல் வெளிச்சம்போல ஏற்பட்டது. விசுவலிங்கத்திற்கு எதிரிலே கழித்த எட்டு நாட்களிலே துறவி தமது தியான நிலையிலிருந்து விழிப்படையும்போது சூரபபுலியைத் தடவிக் கொடுக்கும்போதெல் லாம் புதிய ஒளி அதற்கு உண்டாயிற்று.

இந்த நிலையிலே அதன் உள்ளத்திலே ஒரு கவலை பிறந்தது. துறவியார் இரண்டு மூன்று நாட்களாக உணவில்லாமலிருக்கிறுர். பௌத்த மடத்திலிருந்து கொண்டுவந்த உணவெல்லாம் தீர்ந்து விட்டது. தூக்குக்கூடை காலியாகக் கிடந்தது. அவர் முழுப் பட்டினியாக இருக்கிருரே என்று அது கவலையடைந்தது. எப்படி யாவது அவருக்கு உணவு கிடைக்குமாறு செய்ய வேண்டும் என்று அது விரும்பிற்று. மானசசரோவரத்தின் கரையிலுள்ள பௌத்த மடத்திற்குச் சென்ருல் உணவு பெறலாம் என்று அதற்குத் தோன்றிற்று. அதனுல் அன்றிரவே அது தூக்குக்கூடையை வாயில் கவ்விக்கொண்டு புறப்பட்டது. துறவி ஆழ்ந்த தியானத்தி லமர்ந்திருந்தார்.

சூரப்புலி வேகமாக ஓடிற்று. விடிவதற்குள் மானசசரோ வரத்தை அடைந்துவிட வேண்டுமென்று அதற்கு ஆசை. ஆனுல் இரண்டு மூன்று மைல்கள் சென்றதும் உறைபனி பெய்யத் தொடங்கிற்று. அதைப் பொருட்படுத்தாது சூரப்புலி ஓடிற்று. தன் உடம்பின்மேல் விழுகின்ற உறைபனியை அடிக்கடி உடம்பைக் குலுக்கி உதறிக்கொண்டே சென்றது.

எங்கும் ஒரே வெண்மையாக மாறத் தொடங்கிற்று, சில இடங்களிலே உறைபனி பெருங்குவியலாகக் கிடந்தது. அதன் மேல் செல்லுவது சிரமமாக இருந்தாலும் சூரப்புலி விடாமுயற்சியோடு அடியெடுத்து வைத்தது.

சூரியன் உதயமாகிற சமயத்திற்கு மானசசரோவரத்தை அது அடைந்துவிட்டது. ஆனால், அதற்கு ஒரு பெரிய ஏமாற்றம். அங்கே பௌத்த மடாலயத்தைக் காணோம். மாயமாக அது மறைந்து விட்டதைக் கண்டு சூரப்புலி திகைத்தது. துறவிக்கு உணவு கொண்டு செல்ல வழியில்லையே என்று சோர்வடைந்தது. அப்படியே உறைபனியின் மேல் நின்று, விசனத்தோடு சுற்றிலும் பார்த்தது. உணவில்லாமல் திரும்பிச் செல்ல அதற்கு மனம் வரவில்லை. அதனால் என்ன செய்வதென்று தெரியாமல் வெகு நேரம் அப்படியே நின்றிருந்தது. தூக்குக்கூடை பக்கத்திலே கிடந்தது.

சூரியன் மேலே வரத் தொடங்கினான். உறைபனி மெது வாக உருகத் தொடங்கியது. சிறு சிறு வாய்க்கால்களில் தண்ணீர் மானசசரோவரத்தை நோக்கி ஓடலாயிற்று.

என்ன ஆச்சரியம்! திடீரென்று பௌத்த மடத்தின் மேற் பகுதிகள் உறைபனிக்கு மேலே தோன்றலாயின. இரவிலே பெய்த உறைபனியில் மடமே மறைந்து கிடந்ததை அப்பொழுது தான் சூரப்புலி உணர்ந்தது. மேலும் கொஞ்ச நேரம் அது ஆவலோடு காத்திருந்தது. மடத்தின் கதவு நன்றாகத் தெரிய ஆரம்பித்தவுடன் சூரப்புலி தூக்குக்கூடையை வாயில் கவ்விக் கொண்டு, வேகமாக அதனருகில் சென்று, முன் கால்களால் பல மாகத் தட்டிற்று. சிறிது நேரத்தில் கதவைத் திறந்துகொண்டு ஒரு சந்நியாசி எட்டிப் பார்த்தார். சூரப்புலியைக் கண்டு அவர் ஆச்சரியமடைந்தார்.

சூரப்புலி அங்குத் திரும்பிவந்த காரணத்தை மடத்திலிருந் தவர்கள் உடனே அறிந்துகொண்டார்கள். அதன் நோக்கத்தைத் தூக்குக்கூடை நன்கு காட்டிவிட்டது.

சந்நியாசிகள் சூரப்புலியைத் தட்டிக் கொடுத்தார்கள். துறவிக்காக உணவு வகைகளைத் தூக்குக்கூடையின் அடியில் வைத்தார்கள். பிறகு, அதன் மேலே மானசத்திலே முளைக்கும் கோரைப்புற்களைப் பரப்பினார்கள். அதற்கும் மேலாகச் சூரப் புலிக்கு வேண்டிய ரொட்டித் துண்டுகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டி வைத்தார்கள். சூரப்புலி தனது நன்றியைத் தெரிவிக்க வேகமாகத் தன் வாலைக் குழைத்தது. சந்நியாசிகளை ஒவ்வொரு வராக முகர்ந்து பார்த்தது.

பிறகு, அது தூக்குக்கூடையை வாயில் கவ்விக்கொண்டு வேகமாகப் புறப்பட்டது. சந்நியாசிகள் தனியாக அதற்குக்

கொஞ்சம் கவரிமாட்டுப்பால் வைத்தார்கள். ஆனால், அதைச் சூரப் புலி குடிக்கவில்லை. வாலைக் குழைத்துக்கொண்டு அது கயிலாய கிரியை நோக்கி ஓடலாயிற்று.

அன்று மாலையில் இருள் பரவுவதற்கு முன்னால் துறவியிருக்கும் குகையை அடைய வேண்டுமென்பது அதன் ஆசை. அதனால் மிக வேகமாகப் பாய்ந்து சென்றது. உணவு கொண்டுசெல்லு கின்ற குதூகலமும் அதற்குப் புதிய வலிமையைத் தந்தது.

ஆனால், எதிர்பாராத ஒரு பெரிய தடை வழியிலே ஏற்பட் டது. திபெத்து நாட்டைச் சேர்ந்த மூன்று நாய்கள் பசி வெறியோடு எதிரே தோன்றின. பனிப்பிரதேசத்திலே உணவு கிடைக்காமல் அவை வயிறெரிந்து கிடந்தன. அடர்ந்த மயிரோடு கூடிய அவை கரடிகளைப்போலப் பயங்கரமாகத் தோன்றின. அவற்றின் கண்களிலே ஒரு வெறி இருந்தது. ஒரே பாய்ச்சலிலே அவை சூரப்புலியை அணுகி அதன் வாயிற் கவ்வியிருந்த உணவுக் கூடையைப் பிடுங்க முயன்றன.

ஒரே கணத்தில் சூரப்புலி என்ன செய்வதென்று தீர்மானித் தாக வேண்டும். திபெத்திய நாய்களோடு அது போரிடலாம். வலிமை வாய்ந்த மூன்று நாய்களோடு ஒரே சமயத்தில் போரிட்டு வெற்றி அடைவதென்பது அநேகமாக முடியாத காரியம். போரில் உயிரிழப்பதைத் தவிர வேறு பலன் ஏற்பட வழியில்லை. ஆனால், சூரப்புலி தன் உயிரை லட்சியம் செய்யவில்லை. போரிட்டு அங்கேயே மடிந்தால் துறவிக்கு உணவு கிடைக்காது. போரிலே வெற்றி பெறுவதானாலும் எதிர்த்து நிற்கும் நாய்களைக் கொன்றோ அல்லது கடித்துப் பயமுறுத்தி ஓட்டியோதான் ஆகவேண்டும். பிற உயிருக்குத் துன்பம் இழைப்பதைத் துறவி ஒரு நாளும் விரும்ப மாட்டார். அப்படித் துன்பமிழைத்துப் பெற்ற உணவை அவர் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார். சூரப்புலியையும் அவர் பாராட்ட மாட்டார். சூரப்புலியே இப்பொழுது பிற உயிருக்குத் துன்பம் தர விரும்பவில்லை. ஆதலால், எப்படியாவது அந்தத் திபெத்து நாய்களிடமிருந்து தப்பிப் போக வேண்டுமென்று அது தீர்மானித் தது. அந்த நாய்களுக்கு வேண்டியது உணவு. தனக்காகச் சந்நியாசிகள் கட்டி வைத்திருக்கும் உணவு இருக்கவே இருக்கிறது. அதை அந்த நாய்களுக்குப் போட்டுவிடலாம். துறவிக்கு உண விருந்தால் அதுவே போதும். இவ்வாறு ஒரு நொடியிலே எண்ணி முடிவு செய்த சூரப்புலி, கூடையிலிருந்த தன் உணவுக்கட்டை



வாயிலெடுத்து வீசிற்று. திபெத்து நாய்கள் மூன்றும் ரொட்டித் துண்டுகளின் வாசனையை அறிந்து அக்கட்டின் மேல் பாய்ந்தன. அதைக் கைப்பற்றுவதற்காக ஒன்ருேடொன்று சண்டையிடத் தொடங்கின. அதுதான் சமயமென்று சூரப்புலி தூக்குக்கூடை யோடு நாற்கால் பாய்ச்சலில் கயிலாயகிரியை நோக்கி ஓடிற்று.

துறவி இருக்குமிடத்தை அடையும்போது இரவு பத்து மணிக்கு மேலாகிவிட்டது. அன்று பௌர்ணமிக்கு முதல் நாளாகையால் நிலவின் ஒளி அற்புதமாகப் பரவிக்கொண்டிருந்தது. பனி மயமாக வீற்றிருக்கும் விசுவலிங்கமும் அதைச் சுற்றியுள்ள பனிப் பிரதேசங்களும் நிலவொளியிலே சொல்ல முடியாத அழகோடு விளங்கின. தூய வெண்மை நிறத்திற்குள்ளே இடையிடையே நீலமும் பசுமையும் கலந்து கலந்து விசுவலிங்கம் காட்சியளித்தது. துறவி அதையே உற்றுப் பார்த்துக்கொண்டு குகையின் வாயிலில் நின்றுகொண்டிருந்தார். சூரப்புலியையும், அதன் வாயில் உள்ள தூக்குக்கூடையையும் பார்த்ததும் துறவிக்கு விஷயம் விளங்கி விட்டது. மானசசரோவரத்துக் கோரைப்புல்லும் அது அங்கே சென்று திரும்பியிருக்கிறது என்பதைக் காட்டிற்று. தூக்குக் கூடை நிறைய பௌத்த சந்நியாசிகள் உணவு அனுப்பியிருந்தார்கள் என்பதையும், அந்த உணவிலே ஒரு பகுதியை வழியிலே பறி



கொடுத்துவிட்டுச் சூரப்புலி வந்திருக்கிறது என்பதையும் அவர் ஊகித்து அறிந்துகொண்டார்.

“எனக்காக உன்னுடைய உணவைத் தானம் கொடுத்துவிட்டு வந்தாயா? நல்ல காரியம் செய்தாய்” என்று சொல்லிக்கொண்டே துறவி சூரப்புலியின் நெற்றியைத் தடவிக் கொடுத்தார். சூரப் புலியின் உடம்பிலே ஆனந்த வெள்ளம் பாய்வது போல இருந்தது. அது தன்னுடைய இன்பத்தைச் சொல்ல முடியாமல் ஏதேதோ குழறிக்குழறி முணுமுணுத்தது. விசுவலிங்கத்தின் பக்கத்திலிருந்து ஓம் என்ற ஒலி நீண்டு எழுந்தது. ஓம் ஓம் என்று துறவி சூரப் புலியின் நெற்றியில் கையை வைத்துக்கொண்டே எதிரொலித்தார். சூரப்புலியும் வாய் திறந்து ஒலிக்கத் தொடங்கிற்று. ஊளையிடு வதுபோல அது விசுவலிங்கத்தை நோக்கி நின்று குரலெடுத்தது. ஆனால், ஊ என்று அது ஊளையிடவில்லை. ஓம் என்று அது நீளமாக ஆனந்தத்தோடு ஒலித்தது. அந்த ஒலியைக் கேட்டுத் துறவி மிகவும் மகிழ்ச்சியடைந்தார். மறுபடியும் சூரப்புலியின் நெற்றியின் மீது வலக்கரத்தை வைத்தார். சூரப்புலி தன்னை மறந்து இன்பத் திலே ஆழ்ந்து அப்படியே படுத்தது. இரவு முழுவதும் அது அப்படியே படுத்திருந்தது. துறவியும் தியானத்தில் ஆழ்ந் திருந்தார். அடுத்த நாள் காலை சூரிய ஒளி பொன் மஞ்சள் நிறத் தோடு விசுவலிங்கத்தின்மீது படிந்தது. “நீ அன்போடு கொண்டு வந்த உணவு; வா, சாப்பிடுவோம்” என்று கூறிக்கொண்டே துறவி

தூக்குக் கூடையைக் கையில் எடுத்தார். அதுதான் துறவிக்கும் சூரப்புலிக்கும் கடைசி முறையாக உணவு. தூக்குக் கூடையையும் மீதியிருந்த உணவையும் அங்கேயே எறிந்துவிட்டுத் துறவி விசுவ லிங்கத்தை நோக்கிப் புறப்பட்டார். சூரப்புலி அவருக்குப் பக்கத் திலே சென்றது.

"வா, நம் வீட்டிற்குப் போவோம்" என்று சொல்லிக்கொண்டே துறவி நடந்தார். "அம்மையே, அப்பா, நாங்கள் வருகிறோம்; எங்களை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று ஜோதிலிங்கத்தைப் பார்த்துத் தாய் தந்தையிடம் பேசுவதைப்போலக் கூறிக்கொண்டே துறவி நடந்தார்.

வெள்ளிமலை போலவும் லிங்க வடிவாகவும் இருக்கின்ற கயிலாய நாதனைச் சுற்றி அருகிலேயே பிரதட்சிணம் செய்வதற்கு ஒன்பது மைல் நடக்கவேண்டும். ஆனால், இந்த உள் பிரதட்சிணத்தைச் சாதாரணமாக யாரும் செய்யமாட்டார்கள். பனிப்பாறைகள் சூரிய ஒளியில் வெடித்து விழுந்துகொண்டேயிருக்கும். உறைபனி அங்கே அடிக்கடி விழுந்துகொண்டேயிருக்கும். அம்மாதிரியான இந்த உட்பகுதியிலே துறவி நடந்தார். சூரப்புலி அவருடன் சென்றது. அவ்வாறு செல்லுகின்றவர்கள் உறைபனியிலே அழுந்திவிடுவார்கள் என்று பொதுவாக எல்லோரும் கருதுவார்கள். ஆனால், துறவி தாம் உறைபனியில் அழுந்துவதாக உணரவில்லை; சூரப்புலியும் அவ்வாறு உணரவில்லை.

ஏதோ ஓர் இன்ப லோகத்திலே செல்வதுபோலவும் அது உணர்ந்தது. அமுதகலசத்திலிருந்து அமுதத்தை அள்ளி அள்ளித் தன்னுடைய வாயிலே ஊட்டிக்கொண்டே துறவி பக்கத்தில் செல் லுவதுபோலவும் அது உணர்ந்தது. உலகத் துன்பங்கள் முற்றிலும் மறைந்துவிட்டன. உடம்பு என்பதும் திடீரென்று மறந்துவிட்டது போலத் தோன்றிற்று. எல்லாம் ஒரே இன்பமயமாயிற்று.

ஜோதி லிங்கத்திலே சூரிய ஒளி பட்டு ஓர் அற்புதமான வானவில் தோன்றி எங்கும் நிறைந்தது. அந்த வர்ண ஜாலங் களுக்குள்ளே துறவி நடந்தார். சூரப்புலியும் அடியெடுத்து வைத்தது. உறைபனி திடீரென்று பெரிய அளவிலே பெய்யத் தொடங்கிற்று. தேவலோகத்திலிருந்து பூ மாரி பொழிவது போலச் சூரப்புலிக்குத் தோன்றிற்று. பனி மயமான ஜோதிலிங்கம் தன்னோடு சேர்த்துத் துறவியையும் சூரப்புலியையும் அன்போடு அணைத்துக்கொண்டது. துன்பமில்லை, சோர்வில்லை, எல்லாம் இன்பம் என்ற நிலையில் சூரப் புலி துறவியோடு சேர்ந்து அவருடைய கருணையால் ஆனந்தமான வாழ்க்கையை அடைந்தது.